# அவளுக்கு ஏன் சாப்பிட்டோம் என்றே தோன்றிற்று...












ஒரு தேக்கரண்டி ஈனோ ஒரு டம்ளர் ஜலத்தில் போட்டால் உடனே பொங்கி கரைந்து நேர்த்தியான, புத்துணர்ச்சியளிக்கும் பானமாக மாறும். தளதளக்கும் ஈனோ 'ப்ரூட் ஸால்ட்' இதத்தையளித்து சமன மூட்டககூடியது. வயிற்று கோளாறுகளிலிருந்து உடனடியாக நீடித்த நிவாரணமளிக்கிறது, ஜீரணசக்தியை சரியாக்குகிறது.






ஈனோ சீக்கிரத்தில் அவளுக்கு குணமளித்தது

# ஈனோ 'ப்ரூட் ஸால்ட்'

'ஈனோ', 'ப்ரூட் ஸால்ட்', என்ற வார்த்தைகள் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்குகள்

பீச்சம் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்

JWT-ENO.1043

# கல்கி பொருளடக்கம்

சார்வரி, மாசி 8 ❋ பிப்ரவரி 19, 1961



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.'





மலர் 20 | இதழ் 29

தமிழ்த்திரு நாடுதன்னைப்— பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

# பாகிஸ்தான் வழிகாட்டுகிறது!

"பாகிஸ்தான் மந்திரி சபை இன்றையக் கூட்டத்தில் மிக முக்கியமான முடிவுக்கு வந்துள்ளது. பல பொருள்கள் மேல் விதித்திருந்த கண்ட்ரோல்களை உடனடியாக எடுத்து விட்டு, சுதந்திரமாக வியாபாரம் நடத்த அனுமதிக்கத் தீர்மானித்து விட்டது.

இந்தத் தீர்மானத்தையொட்டி பாகிஸ்தானின் தொழில் மந்திரி திரு ஏ. கே. கான் பத்திரிகை நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் "சுதந்திரப் பொருளாதார முறையுள்ள நாட்டில்தான் உற்பத்தி பெருகும்" என்று சர்க்கார் செய்துள்ள முடிவுக்கு ஏற்ப 44 பொருள்களில் 29 பொருள்களின் மீதிருந்த கண்ட்ரோல்களை ரத்து செய்து விட்டதாக அறிவித்தார். கண்ட்ரோல் நீக்கப்பட்ட சாமான்கள், இரும்பு, எஃகு, சிமெண்ட், கண்ணாடிப் பலகைகள், சுகாதார வசதிக்கும் தண்ணீர் விநியோகம் செய்வதற்குமுரிய சாமான்கள், காஸ்டிக் சோடா, மருந்துகள் ஆகியவை.

பாகிஸ்தான் சர்க்கார் சென்ற வாரமே, நூல் மீதும், துணி மீதும் விதித்திருந்த கண்ட்ரோல்களை நீக்கி விட்டது."
—ராவல்பிண்டிச் செய்தி

மேற்கண்ட அறிக்கையைப் படித்த பாகிஸ்தான் மக்கள் பெரு மகிழ்ச்சியும் குதூகலமும் அடைந்திருப்பார்கள். 1952-ம் ஆண்டு, ராஜாஜி அரிசி ரேஷன் ரத்து செய்து விட்டதாக அறிவித்தபோது என்ன ஆனந்தம் தமிழ்நாட்டு மக்கள் அடைந்தார்களோ, அத்தகைய ஆனந்தம் இன்று பாகிஸ்தான் மக்கள் அடைந்திருப்பார்கள்.

ஆனால் இன்று இந்திய நாட்டில், கண்ட்ரோல்கள் ஒழிப்புக்கு மார்க்கமே காணோம். நாளுக்கு நாள் அதிக கண்ட்ரோல்களுக்குத்தான் திட்டம் போட்டு வருகிறார்கள். யுத்த காலத்தில், பிரிட்டிஷ் சர்க்கார் தங்கள் படையினருக்குப் பொருள்கள் திரட்டியனுப்புவதற்காகக் கொண்டு வந்த இந்தக் கண்ட்ரோல் முறைகள் சுதந்திர பாரத நாட்டில் மக்கள் பிரதிநிதிகள் ஆளும் காலத்திலும் ஒழிக்கப்படாதது விந்தைதான்! அது மட்டுமல்ல, இந்தக் கண்ட்ரோல்களையும், பர்மிட் முறைகளையும் வைத்துக் கொண்டு ஆளும் கட்சியினர், விடாப்பிடியாகத் தங்கள் செல்வாக்கை வளர்த்துக் கொள்ளப் பார்ப்பது அநீதி.

கண்ட்ரோல்களினால் எந்தப் பண்டமும் விளைவுப் பெருக்கம் அடையாது. சிலருக்குக் காட்டும் சலுகைகளினால் கட்சிக்குப் பணம் திரட்டலாமே ஒழிய வேறு நலன் கிடையாது.

ஒரு பொருளுக்குக் கண்ட்ரோல் விதித்தால், அந்தப் பொருளை வியாபாரம் செயபவர்கள் மார்க்கெட்டில் 50 பேர்கள் இருக்கும்போது, அவர்களில் ஒருவரையோ இருவரையோ தங்களுக்கு வேண்டியவர்களாகத் தேர்ந்தெடுத்து அவர்களுக்குச் சர்க்கார் பர்மிட் வழங்குகிறார்கள். ஆகவே, 48 பேர்கள் அப்பொருளை வியாபாரம் செய்ய முடியாமற் போய், இருவர் வசமே பொருள்கள் யாவும் முடங்கி விடுகின்றன. இவர்கள் இன்ன விலைக்குத்தான் விற்க வேண்டும் என்ற நியதி யிருந்தாலும், அதன்படி விற்பதில்லை. அவர்கள் இஷ்டமான விலை வைத்துக் கறுப்பு மார்க்கெட்டைப் பகிரங்கமாகச் செய்கிறார்கள். இதைப் பற்றிக் குறை கூறினால் எடுபடாது. அந்த வியாபாரிகள் மந்திரிக்கு வேண்டியவர்களாக இருப்பார்கள். இல்லா விட்டாலும், காங்கிரஸ் கட்சிக்குத் தாங்கள் கொள்ளையடித்த பணத்தில் ஒரு பெரும் தொகையை வழங்கி, தேர்தல் நிதிக்குக் கொடுத்து,

அரசாங்கத்தின் செல்லப் பிள்ளையாகி விடுகிறார்கள். இப்படி ஏறத்தாழ, பாரத நாட்டில் வியாபாரமாகும் எல்லாப் பொருள்களின் மீதும் சர்க்கார் இன்று கண்ட்ரோல்களும் பர்மிட் முறைகளும் விதித்திருப்பதால், வர்த்தக, தொழில் சமுதாயம் முழுதும் இன்று அதிகாரத்தில் உள்ளவர்கள் தயவை நாடியே இருக்க வேண்டியிருக்கிறது. ஆகவே, அவர்கள் உத்தியோகஸ்தர்களுக்கும், காங்கிரஸ் மந்திரிகளுக்கும், காங்கிரஸ் சட்டசபை அங்கத்தினர்களுக்கும், உள்ளூர் காங்கிரஸ் கட்சிப் பிரமுகர்களுக்கும் அடிமைப்பட்டு, அவர்கள் விருப்பத்துக்கு ஏற்ப ஆடவேண்டியிருக்கிறது.

பர்மிட் முறை இன்று நாட்டில் நிலவுவதால், நாட்டிலுள்ள பொதுமக்கள் ஒவ்வொரு பொருளுக்கும் கடைக்காரர் சொல்லும் அநியாய விலை கொடுத்து மறுபேச்சுப் பேசாமல் வாங்கியாக வேண்டியிருக்கிறது. பத்து கடைகளில் ஒரு பொருள் விற்பனையானல், இந்தக் கடைக்கும் அடுத்த கடைக்கும் விலை வேறுபாடு சிறிதாகிலும் இருக்கும். ஒரு கடைக்காரரிடம் ஒரு பொருள் ஏகபோகமாகி விட்டால், அந்தக் கடைக்காரரின் தயவையும், தாட்சிண்யத்தையும் பொது மக்கள் எதிர் நோக்கியிருக்க வேண்டியிருக்கிறது! இதைவிடக் கேவலமான நிலை சுதந்திர மக்களுக்கு வேறு என்ன இருக்க முடியும்?

அதனால்தான் பாரத தேசம் சுயராஜ்யம் பெற்றாலும் சுதந்திரம் பெறவில்லை என்கிறோம். நமது ஒப்பற்ற தலைவர் நேருஜியின் சோஷலிஸ பாணியினால் இந்த நிலை உண்டாகியிருக்கிறது.

*　　　*　　　*

இத்தகைய 'கண்ட்ரோல் ஆட்சி முறை' யுத்தகாலம் போன்ற நெருக்கடியான சமயங்களில்தான் ஏற்பட முடியும். ஆனல் இன்று இந்த நாட்டிலுள்ள ஆட்சி, வியாபாரிகளையும் தொழிலதிபர்களையும் நம்ப மறுக்கிறது. ஒரு கட்சி நிரந்தரமாகப் பதவியிலிருக்க வேண்டும், அதற்கு வர்த்தகர்களிடமிருந்தும், தொழிலதிபர்களிடமிருந்தும், தேர்தல் நிதி திரட்ட அவர்களது மூக்கணாங்கயிறு தங்கள் வசமிருக்க வேண்டும் என்பதற்காகவே, இந்தக் கண்ட்ரோல் ஆட்சி முறையை நடத்தி வருகிறார்கள்.

ராணுவ ஆட்சி நடக்கும் பாகிஸ்தானில், மக்களை இப்படி அடிமைப்படுத்தி வைப்பது தவறு என்பதற்காகவும், நாட்டில் சுபிட்சம் பெருகத் தொழிலதிபர்களுக்கும், வர்த்தகர்களுக்கும், பூரண சுதந்திரம் அளிக்க வேண்டும் என்பதற்காகவும் தைரியமாகக் கண்ட்ரோல்களை ரத்து செய்து விட்டார் அயூப்கான்!

இந்தியாவுடன் கூட்டு ராணுவப் பாதுகாப்பு ஒப்பந்தம் செய்து கொள்ள நேயக் கரத்தை நீட்டிப் பார்த்தார். ஆனல் இந்தியா ஒப்புக்கொள்ளவில்லை என்றவுடன், அயூப்கான் கிழக்கு ஐரோப்பாவிலும், மத்திய அரபு நாடுகளிலும், பர்மா, இந்தோனீசியாவிலும் சுற்றுப் பிரயாணம் செய்து தமது செல்வாக்கை வளர்த்துக் கொண்டார்.

இப்படி வெளி நாட்டில் எவ்வளவு பெருமை தேடிக் கொண்டாலும், உள் நாட்டில் மக்களுக்குப் போதிய உணவும், வேலை வாய்ப்பும் இல்லையேல் சற்றும் பயன் இல்லை என்று கருதி அதற்கு வேண்டிய அஸ்திவாரத்தையும் போட்டு விட்டார். நம் நாட்டிலும் சுதந்திரக் கட்சி சொல்லி வரும் கொள்கையைக் கடைப்பிடித்தாலன்றி சுபிட்சம் ஏற்படாது. பாகிஸ்தான் செல்லும் பாதையில், அதைக் கண்டாவது நம்முடைய அரசாங்கம் நடந்து கொள்வதாக! இதில் ஏதேனும் அவமானம் இருப்பினும், தேசத்தின் சுபிட்சத்துக்காக அதைச் செய்துதான் தீரவேண்டும்.

## காங்கிரஸ் வைர விழா

காங்கிரஸ் கட்சியார் என்ன செய்தால் தாங்கள் இழந்து வரும் செல்வாக்கை மீண்டும் காப்பாற்றிக் கொள்ளலாம் என்ற ஆத்திரத்தில் இப்போது காங்கிரஸ் வைர விழா தொடங்கி நடத்தி வருகிறார்கள். காங்கிரஸை ஆரம்பித்தவர்களுக்கும் இப்போது பதவியிலிருக்கும் காங்கிரஸ் கட்சிக்காரர்களுக்கும் எண்ணத்தால், கொள்கையால் யாதொரு சம்பந்தமும் கிடையாது. அது எப்படியாகிலும் போகட்டும்; பின்னல் காங்கிரஸ் வளர்ந்து காந்தி மகான் தலைமையில் போராட்டம் நடத்தி, விடுதலை வாங்கித் தந்ததே அந்தக் காங்கிரஸுக்கும், இப்போதுள்ள காங்கிரஸுக்கும்தான் ஏதாகிலும் சம்பந்தமுண்டா, என்றால் அதுவும் கிடையாது. காந்தி மகான் இருந்த வரை, சோஷலிஸக் கொள்கையை ஒப்புக் கொள்ளவே இல்லை. எனினும், சோஷலிஸக் கொள்கையுடையவர்களையும் அதற்கு மாறுபட்ட கொள்கை

# சேதி தெரியுமா? சாமா

பாகிஸ்தான்

ஏன் இது வேகமாக நடக்க மாட்டேன் என்கிறது?

அயூப்

கண்ட்ரோல்

இந்தியப் பொருளாதாரம்






யுடையவர்களையும் காங்கிரஸில் சேர்த்துக் கொண்டார். 'நமது லட்சியம் அரசியல் சுதந்திரம். தனிப்பட்ட முறையில் எந்தக் கொள்கையுடையவராயினும், பாரத நாட்டு விடுதலையில் அக்கறையுள்ளவர்கள் எல்லாரும், காங்கிரஸில் சேர்ந்து உழைக்க வேண்டும்' என்று அழைத்துக் கொண்டார். அதனால் அன்றையக் காங்கிரஸில் அசல் சோஷலிஸ்டுகள் இருந்தனர், காந்திய சோஷலிஸ்டுகள் இருந்தனர், கம்யூனிஸ்டுகள் இருந்தனர், ஹிந்து மகா சபாக்காரர்கள் இருந்தனர், ஆரிய சமாஜக்காரர்கள் இருந்தனர், அகாலிகள் இருந்தனர். இப்படி எல்லாக் கட்சியினருமே இருந்தனர். ஆகவே, காங்கிரஸ் வைர விழாக் கொண்டாடும் போது, பாரத நாட்டுச் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்ட எல்லாக் கட்சியினரையும் அழைத்துத் தேசிய விழாவாகக் கொண்டாடுவதுதான் முறை. காங்கிரஸினின்று வெளியேறிய பெரும் தேசபக்தர்களை ஒதுக்கி விட்டு, விடுதலைப் போராட்ட காலத்தில், பயங்கர அடக்குமுறை நடந்த காலத்தில், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு உடந்தையாய் இருந்தவர்களையும், துணை செய்தவர்களையும் வைத்துக் கொண்டு காங்கிரஸ் வைரவிழாக் கொண்டாடுவதைப் பார்க்கும்போது சிரிப்பு வருகிறது!

# என்ன சேதி?

## பெயர்ப் போராட்டம்

தமிழ்நாடு என்று பெயர் வைப்பதற்குத் தக்க சமயம் எது என்று சென்னை காங்கிரஸ் சர்க்கார் எதிர்பார்த்துக் கொண்டிருப்பதாகச் சொல்லுகிறார்கள். அதாவது, தேர்தலுக்குச் சற்றுமுன் பெயர் மாற்றம் செய்து, போராட்டக் கைதிகளையும் விடுதலை செய்து விட்டால் லாபகரமாக இருக்கும் என்று காங்கிரஸ் மந்திரிகள் எண்ணுகிறாற் போல் தோன்றுகிறது. ஆயினும், அப்படிச் செய்தால் மக்கள் ஏமாந்து போக மாட்டார்கள். காங்கிரஸின் 'ஸ்டண்ட்' வேலை இது என்று புரிந்து கொண்டு விடுவார்கள்.

## இசைக் கலைஞர் மறைவு

சங்கீத கலாநிதி புல்லாங்குழல் வித்வான் திருப்பாம்புரம் சுவாமிநாதப் பிள்ளை திடீரென்று மாரடைப்பினால் காலமானார் என்ற செய்தி சங்கீத உலகத்தைத் துக்கத்திலாழ்த்தியிருக்கிறது. பிள்ளை அவர்களின் குழல் இனிமையைப் பல்லாண்டுகள் கேட்டு ரசித்தவர்கள் தென்னகம் முழுவதிலும் பரவியிருக்கிறார்கள். நாதத்தின் குழைமைக்கும், கம்பீரமான நடைக்கும், ராகப்ரஸ்தாரங்களுக்கும் அவருடைய குழல் பெயர் பெற்றது. சம்பிரதாயத்தைத் தழுவிய பிராசீன வித்வான்களில் ஒருவர் என்று ரசிகர்களால் மட்டுமின்றி வித்வான்களால் கூடப் பாராட்டப் பட்டவர். காதுக்கினிய கீர்த்தனைகளானாலும், புத்திக்கு வேலை கொடுக்கக் கூடிய வியவகார சங்கீதமானாலும், விஸ்தாரமான ராக ஆலாபனங்களானாலும், தியாகய்யர் க்ருதிகளைத் தவிர தீக்ஷிதர், சாமா சாஸ்திரிகள் கீர்த்தனங்களானாலும் சமானமான வித்வத் திறனுடனும், பாவப் பொழிவுடனும் இசை வழங்கும் திறமையுள்ளவர். இந்தக் கருவிக்கென்று பிரத்தியேகப் பிடிகளையும் நடைகளையும் அளவு மீறிக் கையாளாமல், குழல் வாத்தியத்தை மணிக் கணக்கில் அலுப்புத் தட்டாமல் கேட்கும்படி செய்யும் சாமர்த்தியம் வாய்ந்த மிகச் சில வித்வான்களில் திரு சுவாமிநாதப் பிள்ளை குறிப்பிடத்தக்கவர். குரு சிஷ்ய முறையில் சங்கீதம் பயிலவேண்டுமென்ற கருத்தில் ஊறிய இவர் பல சிஷ்யர்களைத் தயார் செய்து சங்கீத உலகுக்கு அறிமுகப்படுத்திக் கீர்த்தி யடைந்துள்ளார். 1953-ம் ஆண்டு சென்னை சங்கீத வித்வத் சபைக் கூட்டத்திற்குத் தலைமைவகித்து ஓர் அரிய உரையை நிகழ்த்தி விவாதங்களைச் சிறப்பாக நடத்தி வைத்தார். கர்நாடக சங்கீதக் கல்லூரியில் போதகாசிரியராகச் சீரிய முறையில் பணியாற்றி வந்த திரு பிள்ளையவர்களுக்குப் பாரதஅரசாங்கம் இவ்வாண்டு கர்நாடக வாத்திய இசைப் பகுதிக்குரிய விருதை வழங்கிக் கௌரவித்திருக்கிறது. அதைப் பெற்றுக் கொள்ளுவதற்கு முன்னரே அவர் மரணம் எய்தியது மிகவும் வருந்தத் தக்கது. அவர் மறைவினால் துக்கத்தில் ஆழ்ந்திருக்கும் அவர் உறவினர்களுக்கும், குடும்பத்தினருக்கும் நமது அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.



## திட்டம் யாருடையது?

காங்கிரஸ் மந்திரிகள் எதிர்க்கட்சிகளைத் தாக்கும்போது, "இவர்களிடம் வேறு திட்டமிருக்கிறதா?" என்று கேட்கிறார்கள். இதைப் போன்ற அர்த்தமற்ற பேச்சு வேறு கிடையாது.

காங்கிரஸ் ஆட்சியில் போடப்படும் திட்டங்களை, இன்றைய காங்கிரஸ்காரர்களா வகுத்தார்கள்? ஒருநாளும் இல்லை! காங்கிரஸ்காரர்கள் ஆட்சிப் பொறுப்புக்கு வருவதற்கு முன் அவர்களிடம் ஏதாகிலும் திட்டமிருந்ததா என்ன? காந்தி மகான் வகுத்த மதுவிலக்கு, நூல் நூற்றல், ஹிந்தி பிரசாரம் போன்ற பதினேழு அம்சங்கள் கொண்ட திட்டமிருந்ததே தவிர, இரும்புத் தொழிற்சாலை நிறுவவும், அணைகள் கட்டவும் அவர்களிடம் திட்டமிருக்கவில்லை. சர்க்கார் காரியாலயங்களுக்குள் நுழைந்த பின்னர், அங்குள்ள தஸ்தாவேஜுகளையும் நிபுணர்களையும் கலந்தாலோசித்த பின்னர்தான் என்ன என்ன செய்யலாம் என்று அவர்களுக்குத் தெரிய வந்திருக்கிறது.

ஏதோ இந்தத் தேசத்தை ஆண்டுவந்த பழங்கால மன்னர்களும், பிரிட்டிஷ் ஆட்சி நிபுணர்களும், வகுத்து வைத்துவிட்டுச் சென்ற திட்டங்களின் அடிப்படையில்தான் இன்றைய சர்க்கார் தங்கள் திட்டங்களைத் தீட்டியிருக்கிறார்கள். சமீபத்தில் திறக்கப்பட்ட காண்ட்வா ஹிங்கோலி ரயில் இணைப்பைப் பற்றி, 1882-ம் ஆண்டே பிரிட்டிஷ் நிபுணர்கள் தீட்டிய திட்டத்தைத்தான் இந்த இரண்டாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் முடித்திருக்கிறார்கள். தேசத்தில் போடப்படுகிற திட்டங்களுக்கும் ஆட்சிப் பொறுப்பிலுள்ள அரசியல்வாதிகளுக்கும் ஏதேனும் சம்பந்தமிருக்கிறதென்றால் அது, 'நீங்கள் போடுகிற திட்டத்தில் என் தொகுதியில் ஏதாகிலும் ஒன்று-ஓர் அணைக்கட்டோ, ஒரு தொழிற்சாலையோ — வரும்படி செய்யுங்கள். அப்போதுதான் அடுத்த தேர்தலில் மக்கள் என்னைத் தேர்ந்தெடுப்பார்கள்' என்று திட்டக் கமிஷனை அவர்கள் கெஞ்சுவது தவிர வேறு எதுவுமில்லை.

ஆனால், இன்று பாரத நாட்டிலுள்ள எதிர்க்கட்சிகளில் நன்றாகப் படித்தவர்களும், அறிவாளிகளும் இருக்கிறார்கள். இவர்கள் வசம் ஆட்சிப் பொறுப்பு இருந்தால், இன்று மக்களை ஏமாற்றுவதற்காக வகுக்கப்படும் வீண் விரயத் திட்டங்களை ஒதுக்கி, உண்மையிலேயே நாட்டுக்கு நன்மையும் சுபிட்சமும் அளிக்குமாறு திட்டமிடுவதற்குத் திட்டக் கமிஷனையும் அதிகாரிகளையும் பயன்படுத்திக் கொள்வார்கள் என்பதில் சந்தேகமில்லை. காங்கிரஸ்காரர்கள், திட்டங்களுக்காகத் தாங்களே மார் தட்டிப் பேசிக் கொள்வதைச் சற்று நிறுத்தி வைத்தால், அவர்களுக்கே கௌரவமாக இருக்கும்.

## சுதந்திர நிதி

மக்களின் ஆதரவு வேண்டிய அளவு இருக்கிறது. ஆட்சி மாற வேண்டும் என்று எல்லாரும் விரும்புகிறார்கள். பர்மிட், லைசென்ஸ் கொடுமையும், பட்சபாதங்களும் ஒழிந்து போகவேண்டும் என்று தொழிலதிபதிகளும் வியாபாரிகளும் ஆசைப்படுகிறார்கள். கட்சிக்கு எவ்வளவு ஆதரவு இருந்தபோதிலும் தேர்தலைக் கருதிச் செய்யவேண்டிய வேலைக்குப் பணத்தின் தேவை அதிகம். கட்சியின் வெற்றியை விரும்புகிறவர்கள் நிதிக்கு உதவ வேண்டும்.

சுதந்திரக் கட்சிக்காகப் பண உதவி செய்ய விரும்புகிறவர்கள் தங்களின் நன்கொடையை என் பெயருக்கு c/o கல்கி கார்யாலயம், கீழ்ப்பாக்கம், சென்னை-10 என்ற விலாசத்துக்கு அனுப்பக் கோருகிறேன். பெயரிட்டோ, பெயர் சொல்லாமலோ அனுதாபிகள் விருப்பத்தின்படி கல்கியில் நன்கொடைகளின் வரவு பிரசுரிக்கப்படும்.

12-2-61

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

# குடமூக்கில் குருமூர்த்தி

வி. ராமகிருஷ்ணய்யர்

பரமேசுவரன், அன்று அமுத குடத்தை வில்லாலடித்து அதன் இவலைகளைப் பரப்பிய தலம் கும்பகோணம். 1729 ம் ஆண்டிலிருந்து காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் தங்கள் நோக்காலும், வாக்காலும் அமுதைத் தெளித்ததும் இப்பதியில்தான். அதனால்தான் மடமும் 'கும்பகோணம் மடம்' என்றே பெயர் பெற்றது.

ஒன்பதாண்டுகளுக்கு முன், இப்போது நல்லறம் பரப்பி வரும் நம் காமகோடி பீடாதிபதிகள் மீண்டும் காஞ்சியையே வாசஸ்தலமாகத் தேர்ந்தெடுத்து, குடந்தையிலிருந்து புறப்பட்டு விட்டார்கள். காஞ்சியில்தான் பீடத்தின் அடுத்த வாரிசாக ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளுக்கு ஆசிரமம் அளித்தார். இம்மாதம் ஐந்தாம் தேதியன்று இவ்விரு மகான்களும் மறுபடியும் கும்பகோணத்தில் பொன்னடி சாத்தியது அப்பகுதி மக்களை ஆனந்த வெள்ளத்தில் ஆழ்த்தியது.

பாஸ்கர க்ஷேத்திரம் என்று பெயர் பெற்றுள்ள குடந்தையில், பாஸ்கரன் ஸிம்ம ராசியில் பிரவேசிக்கும் மகாமகம் மிகப் பெரிய விழாவாகும். பாஸ்கரனுக்கு உகந்த ஒரு ஞாயிற்றுக்கிழமையன்றே, அங்கு ஞான பாஸ்கரராக விளங்கும் பெரியவர்கள் விஜயம் செய்ததும், உதய பாஸ்கரன் போன்ற புதுப் பெரியவர்கள் முதன் முறையாகப் பிரவேசம் செய்ததும், அதைவிட மகத்தான கோலாகல விழாவாக அமைந்தது. சுற்றுப்புறங்களிலிருந்தெல்லாம் அங்கு வந்து குழுமியிருந்த லட்சோப லட்சம் மக்களும், பக்திப் பரவசமாகப் பெரியவர்களுக்களித்த வரவேற்பை வர்ணித்து மாளாது.

காலை ஏழு மணி சுமாருக்கு நகரின் வெளிப்புறத்தில் வரவேற்புக் கமிட்டித் தலைவர் டாக்டர் எம். கே. சுப்பிரமணியம் அவர்கள் ஸ்ரீ சுவாமிகளுக்கும், புதுப் பெரியவர்களுக்கும் பூரண கும்பம் அளித்து வரவேற்றார். பின்னர் தக்ஷிணாமூர்த்தியும், சனத்குமாரரும் போலப் பொலிவுற விளங்கிய இரு மகான்களும் நேரே மகாமகம் குளத்துக்குச் சென்று நீராடினர். சப்த தீர்த்தங்களும் தன்னில் கலந்து பாவனமடையும் அந்த மகாமகக் குளம் ஆசார்யரின் ஸ்பரிசத்தால் மேலும் பாவனமடைந்தது. கரை மண்டபமொன்றில் ஆசாரியர் அனுஷ்டானத்தில் அமர்ந்திருக்க, ஓதுவார்கள் தேவாரமிசைத்த காட்சி, சாட்சாத் ஆண்டவன் திருமுன்னர் பண்டைய ஞான பக்தர்கள் உருகிப் பணிந்ததை நினைப்பூட்டியது. அனுஷ்டானம் முடிந்து மண்டப விளிம்புக்கு வந்து நின்றபடி பெரியவர்கள் கண் நிறைந்த கருணை கரை புரளத் தரிசனம் அருளிய போது, அத்தனை மக்களும் கண்ணுறு பெருக்கிப் போற்றிப் போற்றி வணங்கினர்.

அதையடுத்து நகர் வலம். கோவில் மரியாதைகளும், வாத்திய முழக்கமும், வேத கோஷமும் சூழ, மேனாவிலே எழுந்தருளியிருந்தார் பெரியவர்கள். புதுப் பெரியவர்கள் அவர் அண்மையிலேயே தம் தந்தப் பாதம் சோர நடந்து சென்றார்கள். வீதி நெடுக ஒரே தோரணமும், கோலமும்தான். வீட்டுக்கு வீடு பூரண கும்ப மரியாதை. நகரின் முதுபெரும் இமாராகிய ஸ்ரீ எம். கந்தசாமி மூப்பனார், மகனீயர் இருவருக்கும் சால்வைகளை அர்ப்பித்தார்.

ஜனத்திரள் முழுதும் ஸ்ரீ மடத்தின் அருகில் ஒன்று சேர்ந்தது. மடம் உள்ளும் புறமும் நிரம்பி வழிந்தது. நெரிசலில் சுவாமிகளே திக்கி விட்டதாகக்கூடத் தோன்றியது. தம் மோகன முறுவலாலும், அருட் பார்வையாலும், குழைவு நிறைந்த சமிக்ஞையாலும் யாவரையும் குளிர்வித்தவாறே வழியையும் ஏற்படுத்திக் கொண்டு முன்னேறினார் அவர். மடத்து முகப்பில் மேனாவின் மீதேறி, கால் மணிக்கும் அதிகமாகக் கால் கடுக்க நின்று, எட்டி நின்ற அன்பருக்கும் தரிசனம் தந்தார். சரியாக 9-50 மணிக்கு, புதுப் பெரியவர்கள் தமது பவித்திரமான வலது திருப்பாதத்தை முதலில் வைத்து ஸ்ரீமடத்துக்குள் பிரவேசித்த போது கெட்டி மேளம் முழங்கியது; கொம்புகள் கோஷித்தன; தேங்காய்கள் உடைக்கப்பட்டன; ஆரத்தி சுற்றப்பட்டது; அந்த எண்ணற்ற மக்களின் மனமும் விகசித்தது. அன்றைய முக்கிய சம்பவம் இதுவே அல்லவா?

மடத்துக்குள்ளே, வெள்ளியங்கிரியோனைய ஞானவேந்தர் வெள்ளிச் சிம்மாசனத்தில் ஆரோகணித்திருந்தார். ஞான சாம்ராஜ்யத்தின் இளவரசரும் பக்கத்து நின்றார். பின்னர் இரண்டு மணி காலம் பக்தர்கள் வந்தனம் செலுத்தினர்.

கூட்டத்தில் ஒருவர்கூட வாடிய வயிற்றுடன் திரும்பக் கூடாது என்ற பெரியவரின் அக்கறைப்படி அத்தனை பேருக்கும் உணவளிக்கப்பட்டது. அந்த அக்கறையோ அவர்கள் உள்ளத்தையும் நிரப்பியது.

காலை நடந்த நகர்வலமே போதுமெனப் பெரியவர் கருதினார். எனினும் வரவேற்புக் கமிட்டியின் வேண்டுகோளுக்கிணங்கி, இரவில் பட்டண பவனி வரவும் இசைந்தார். இரவு நிகழ்ச்சி காலை நிகழ்ச்சிக்குச் சிகரம் வைத்தாற் போல் விளங்கியது. வாண வேடிக்கைகளும், சாரி சாரியாக ஒளி விளக்குகளும் நகர்வலத்துக்கு அழகு செய்தன. சகல பரிவாரங்களும் புடைசூழ மென்மையே உருவாயமைந்த பெரியவர் புஷ்பப் பல்லக்கிலும், காம்பீர்யம் அலைமோதும் புதுப் பெரியவர் யானை மீதும் வீற்றிருந்து பவனி வந்தனர். வழி நெடுகிலும் கூட்டம் பெருகியபடியே இருந்தது. முடிவாக ஒரு மைலுக்கு நீண்டிருந்தது நகர்வலம். அனைவருடைய வசதியையும் முன்னிட்டுப் பல்லக்கைச் சாய்த்தும், வேகத்தைத் தணித்தும் செல்லுமாறு பெரியவர்கள் பணித்த அருட்பான்மையே அலாதி. மடத்துக்குத் திரும்பும்போது இரவு மணி ஒன்றாகி விட்டது. அதனாலென்ன? தேவர்கள் கண்டிருக்க வேண்டிய பவனி அல்லவா அது?



# அரசி வருகிறாள், அகமகிழ்கிறோம்

"இளவரசிக்குப் பிறக்கப் போகும் குழந்தை ஆணா பெண்ணா? பெண்ணாகத்தான் இருக்கும் என்று எனக்குத் தோன்றுகிறது."

"இல்லவே இல்லை, நிச்சயமாக ஆண் மகன் தான். 'பெட்' கட்டவும் நான் தயார்! தினந் தோறும் அதற்காகப் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேனே, அது வீண் போகுமா?"

"ஒரு வேளை இரட்டைக் குழந்தைகளாகப் பிறந்துவிட்டால்?"

"இரட்டிப்புச் சந்தோஷம்!"

"குழந்தையின் மூக்கு ஆம்ஸ்டிராங்கினுடையதுபோல் சப்பையாகத்தான் இருக்கும்!"

"கிடையவே கிடையாது! மார்கரெட்டினுடைய சாயலில் எடுப்பாக நீளமாகத்தான் இருக்கும்! பொறுத்திருந்து பாரேன்!"

"அது எப்படியானாலும் கண்கள் மட்டிலும் நீல நிறம்தான். அதில் சந்தேகமே வேண்டாம் யாருக்கும்!"

இன்றைக்கு இங்கிலாந்தில் ஒவ்வொரு இல்லத்திலும் நடைபெறும் சர்ச்சை இது. இளவரசி மார்கரெட் தம்மைப் பல கோணங்களில் படம் பிடித்த புகைப்பட நிபுணர் ஜோன்ஸினிடம் இதயத்தைப் பறி கொடுத்துக் கல்யாணமும் புரிந்து கொண்ட பின்னர் ஆரம்பித்த விவாதம்!

முடியரசுக்குக் கீழ் ஒரு குடியரசை ஸ்தாபித்துக் கொண்ட பிரிட்டிஷாரின் இந்தப் பண்பை எண்ணிப் பார்த்தால் வியப்பாகத்தான் இருக்கிறது. அரண்மனையில் நடைபெறும் விசேஷங்களெல்லாம் தங்களுடைய குடும்ப நிகழ்ச்சி போல் பாவித்து அகமகிழ்ந்து போகிறார்கள்.

உலகத்திலேயே மிகச் சிறிய ஜனநாயக முறையைக் கடைப்பிடித்து வரும் நாடு பிரிட்டன்தான் என்று அரசியல் நிபுணர்கள் உறுதி கூறுகிறார்கள். இதிலே அந்தத் தேசத்தவருக்குக் கொள்ளைப் பெருமை: மற்ற நாட்டினருக்கும் பொறாமை! நியாயம்தானே!

அசைக்கமுடியாதபடி மக்கள் ஆட்சியை நிறுவிக்கொண்ட அதே சமுதாயம் அரச பரம்பரையில் வைத்துள்ள அன்பு அளப்பரியது.

புதுமையில் பித்துக் கொண்ட பிரிட்டிஷார் பழமையிலும் பற்றுதல் கொண்டிருப்பது இதற்கொரு காரணம் எனலாம். அணு சக்தி நிலையங்களை அமைத்துத் தொழில் வளம் பெருகச் செய்யும் மக்கள், வாழையடி வாழையாக வந்துள்ள சம்பிரதாயக் கோட்பாடுகளைக் கைவிடவும் மறுக்கிறார்கள்.

இதோ ஓர் உதாரணம் :

லண்டனில் உள்ள பாராளுமன்றத்தின் ஒரு பிரிவான மக்கள் சபை (House of commons) அளவில் சிறியது. மொத்தமுள்ள அங்கத்தினர்களில் மூன்றில் இரண்டு பகுதியினருக்குத்தான் அங்கே அமருவதற்கு இடமிருக்கிறது. அதை அமைத்திருக்கும் பாணியோ தற்காலத்தில் கட்டடக் கலை வல்லுநர்கள் சிறந்ததென ஒப்புக் கொள்ளுமாறு இல்லை. நீண்ட சதுரமாக விளங்குவதை விட அரை வட்ட வடிவமாகச் சமைப்பதே சட்டசபை நடவடிக்கைகளுக்கும் அலுவல்களுக்கும் சௌகரியமாக இருக்கும் என்று அபிப்பிராயப்படுவார்கள். அதிலுள்ள மேஜைகளும் பெஞ்சுகளும் வசதியானவை என்று சொல்ல முடியாது. அரை மணி நேரத்துக்கு மேல் உட்கார்ந்திருப்பதே கொஞ்சம் சிரமம்தான். இதற்காக அவற்றை விட்டொழித்து விட்டு நவீனமான முறையில் வேறு புதிய கட்டடம் எழுப்பி விட்டார்களா? கிடையாது!

போகட்டும்; இரண்டாவது உலக மகா யுத்தத்தின் போது எதிரிகளின் குண்டு வீச்சிலே அதுதான் தரைமட்டமாகி விட்டதே; அதன் பிறகாவது அதனைப் புதுப்பிக்கப் போட்ட திட்டத்தில் புதுமையைப் புகுத்தக் கூடாதோ? ஊஹூம்! அதே இடத்தில் அதே அளவில் அதே பாணியில் கட்டடத்தை எழுப்பி வழக்கம் போல் அசௌகரியங்களை ஆனந்தமாக அனுபவித்து வருகிறார்கள்!

ஆங்கிலேயர்களின் இந்த விநோதமான போக்கைப் புரிந்து கொள்ள ஒரு விஷயத்தை நினைவில் கொண்டால் போதும். அறிவாற்றலையும் ஏட்டுப் படிப்பையும் விட ஒழுக்கமும் அனுபவமுமே பெரிதெனக் கருதுபவர்கள், உயர்ந்ததென மதிப்பவர்கள், அவர்கள். இந்த அடிப்படைத் தத்துவம் ஒவ்வோர் ஆங்கிலேயனையும் ஆட்கொண்டிருக்கிறது. திடீர் மாற்றங்களையெல்லாம் அவர்கள் என்றைக்குமே விரும்பியதில்லை.

மக்களாட்சி நடக்கிறதென்பதால் அரசிக்கு அதிகாரங்களே இல்லை என்று யாரும் எண்ணிவிட வேண்டாம்! நாட்டில் எல்லாச் சட்டங்களையும் பிறப்பிப்பது அரசிதான். எந்தவிதமான கௌரவப்பட்டமாக இருந்தாலும் அதை அரசிதான் அளிக்க வேண்டும். கடலைக் கிழித்துக் கொண்டு செல்லும் பிரிட்டிஷ் கப்பல்கள் அனைத்தும் அரசியினுடையவை. போலீஸ்காரர்கள் அரசியின் ஆணைக்

ளுக் கட்டுப்பட்டே தங்கள் கடமைகளை நிறைவேற்றுகிறார்கள். அரசாங்கப் பொதுப் பணிகள் பெரும்பாலும் அரசியின் பெயராலேயே நடைபெறுகின்றன. நாள்தோறும் அரசி கையொப்பமிட வேண்டிய தஸ்தாவேஜுகள் ஏராளம். இன்னும் கணக்கற்ற காரியங்கள் அரசியின் உத்தரவுக்கிணங்கவே நடைபெறுகின்றன.

ஆனால்...

அந்த ஆணையிலேதான் பொடி வைத்திருக்கிறார்கள்! குழந்தைக்கென்று பொம்மைகள் வாங்கி வந்து அவற்றை உடைத்து விடுமோ என்ற பயத்தில் அலமாரியில் வைத்துப் பூட்டி விடுகிறோமல்லவா? அதைப் போல்...

இந்த அதிகாரங்களையெல்லாம் மந்திரி சபைக்குட்பட்டுத்தான் அரசி பிரயோகிக்க வேண்டும் என்பது மரபு! உண்மையில் நாட்டை ஆள்வது சர்வ வல்லமை பொருந்திய மந்திரி சபைதான்!

மந்திரிசபை பாராளுமன்றத்துக்குப் பதிலிறுக்க வேண்டிய நிலையில் உள்ளது. மக்கள் சபை அங்கத்தினர்களோ பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்.

இப்படி ஜனநாயக ரீதியிலே பாராளுமன்றம் உருவானது புரட்சியினால் அல்ல. என்றைக்குமே புரட்சியில் ஈடுபடும் மனப்பான்மை பிரிட்டிஷாருக்கு இருந்தது கிடையாது. நாளா வட்டத்தில் இயல்பாக உருவானது பாராளுமன்றம்.

ஆதியில் தமக்கு யோசனை கூறுவதற்கென்று பிரதேசவாரியாகச் சில பிரபுக்களையும் கனவான்களையும் ஊர் பிரதிநிதிகளையும் பாதிரிமார்களையும் ஒன்று சேர்த்தார் அரசர். அவர் விரும்பிய போது அந்த சபை கூடி நீதி, நிர்வாகத்தில் அறிவுரைகள் வழங்கும். அரசர் தமக்குள்ள அதிகாரங்களைக் கைவிட்டு விட்டார் என்பதல்ல இதற்குப் பொருள். தமது நிலையைப் பலப்படுத்திக் கொள்ளும் நோக்கத்தோடேயே இந்த ஏற்பாட்டைச் செய்தார். ஆனால் பாவம், நாளடைவில் அதுவே வினையாக முடிந்தது! ஆலோசனை கேட்க ஒரு குழு அமைக்கப் போக இன்றைக்கு மந்திரிசபையின் அனுமதியின்றி எதையும் செய்வதில்லை என்ற கட்டத்துக்குக் கொண்டு வந்து விட்டு விட்டது!

நடுநடுவே சில அரசர்கள் பாராளுமன்றத்துக்குப் பணிய மாட்டோம் என்று வம்பு பண்ணியும் பார்த்திருக்கிறார்கள். ஜம்பம் சாயவில்லை! முடியை இழந்தவர்களும், மரணதண்டனைக்கு ஆளானவர்களும், நாடு கடத்தப்பட்டவர்களுமான அரசர்கள் பிரிட்டிஷ் சரித்திரத்தில் சிலர் உண்டு. ஆனாலும் பெரும்பான்மையான மன்னர்கள் மாறி வரும் உலக நியதியைப் புரிந்து கொண்டு, மக்களிடையே உண்டாகியிருக்கும் புது விழிப்புக்குக் கட்டுப்பட்டுப் பெருந்தன்மையுடன் நடந்து கொண்டு மக்களின் பெருமதிப்புக்குப் பாத்திரரானார்கள்.

இதையெல்லாம் விட, அரசனென்றால் ஏதோ உச்சாணிக் கிளையில் உட்கார்ந்து கொண்டு உயர நோக்கிய கண்களைக் கீழே தாழ்த்த மறுக்கும் பிரகிருதி அல்ல; அவர்களும் மனிதர்கள்தான், சாமான்யப்பட்ட மனிதர்களுக்கு உண்டாகக் கூடிய உணர்ச்சிகளெல்லாம் மன்னர்களுக்கும் உண்டு என்பது சமீப காலங்களில் சந்தேகத்துக்கிடமின்றி ருசுவான பிறகு அரச பரம்பரையில் அன்பு அதிகரித்திருக்கிறது ஆங்கிலேயர்களுக்கு.

எட்டாம் எட்வர்டு தாம் கொண்ட காதலுக்கு முன்னால் மாபெரும் சாம்ராஜ்யத்தைத் துச்சமாக மதித்துச் சிம்மாசனத்தைத் துறந்தார். அவருடைய தியாகம் உலகத்தையே திகைப்பில் ஆழ்த்தியது.

கடமையில் அவர் வழுவியதாகக் கடிந்து கொண்ட ஒரு சிலர் கூட அந்தக் காதலின் ஆழத்தைக் கண்டு பிரமித்தார்கள்.

இதற்கு முன்பே விக்டோரியா மகாராணியின் கம்பீரத் தோற்றமும் அறிவாற்றலும் மன்னர் குலத்தினிடம் ஒருவித பக்தியையே உருவாக்கி வளரச் செய்தும் விட்டது மக்களிடையில். ஏழாம் எட்வர்டின் இனிய சுபாவமும் பிரஜைகளுடைய இன்ப துன்பங்களைப் பகிர்ந்து கொள்ளும் அவரது பரந்த மனப்பான்மையும் அனைவரது உள்ளங்களையும் நெகிழச் செய்தன.

ஐந்தாவது, ஆறாவது ஜார்ஜ் மன்னர்கள், உலக மகாயுத்தங்களின் போது பல இன்னல்களுக்கும் மத்தியில் இன்முகம் காட்டித் தளராத உறுதியோடும் தைரியத்துடனும் உழைத்து மக்களுக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்கியதே பிரிட்டிஷார் அடைந்த மாபெரும் வெற்றிக்கு மூலகாரணமாகும்.

எலிசபெத் இளவரசி பிலிப் கோமகனிடம் கொண்ட காதல், திருமணத்தில் நிறைவேறிய போது ஆனந்த சாகரத்தில் திளைத்த ஆங்கிலேயர்கள், பீடர் டௌன்ஸெண்டிடம் இளவரசி மார்கரெட் வைத்த அன்புக்கு மதகுருமார்கள் தடை விதித்தபோது மௌனமாகக் கண்ணீர் உகுத்தார்கள். இப்படிப் பிரஜைகளின் இதயத்தைத் தொடும் வகையில் நாடாள்வோரின் வாழ்க்கையே அமைந்திருக்கும்போது ராஜ விசுவாசத்துக்கு அணை போடவா முடியும்?

விளையாட்டில், கட்சிச் சார்பற்ற ஓர் 'அம்பயர்' எவ்வளவு அவசியமோ அதே போல் இரண்டு மாற்றுக் கட்சிகள் கொண்ட அரசியலுக்கு நடுநிலைமை தாங்கி நடத்திக்கொண்டு போகத் தங்கள் அரசி கண்டிப்பாகத் தேவை, இன்றியமையாதவள் என்பதை நன்றாக உணர்ந்தவர்கள் பிரிட்டிஷார்.

இளவரசன் சார்ல்ஸ் நாட்டிலுள்ள மற்ற எல்லாச் சிறுவர்களையும் போலப் பள்ளிக்கூடம் போக வேண்டும் என்ற பெற்றோரது தீர்மானத்தை ஒருவாறு அனைவரும் ஒப்புக்கொண்ட போதிலும் பொதுவாகப் பரம்பரைப் பழக்க வழக்கங்களை ஒட்டியே அரச குடும்பத்தினர் செயல்படுகிறார்கள். எந்தெந்த விழாவுக்கு எந்தெந்த மாதிரியான உடைகளையும் நகைகளையும் அரசி அணிய வேண்டும் என்பதெல்லாம் கூட முன்கூட்டியே நிர்ணயிக்கப்படுகின்றன என்பதைப் பார்க்கும் போது அந்தப் பதவியை வகிப்பதில் உள்ள தொல்லைகள் ஒருவாறு நமக்குப் புரிகின்றன. பொறுமையைச் சோதிக்கும் அளவுக்கு உள்ள சம்பிரதாயக் கோட்பாடுகளையெல்லாம் புன்முறுவலுடன் சமாளிக்க அரசிக்கு அளிக்





ஆங்கில அரசி எலிஸபெத்தும், அவரது கணவர் பிலிப் இளவரசரும் பாரத தேசத்தின் பல பகுதிகளிலும் சுற்றுப் பிரயாணம் செய்து நம் அரசாங்க முறைகளையும், தலைவர்களையும், மக்களையும், மரபுகளையும், கலைகளையும் அறிந்து வருகிறார்கள். இதோ அந்தப் பயணத்தில் நாமும் கலந்து கொள்வோம்.

1. விமான நிலையத்தில் ராணி எலிஸபெத்தை ஜனாதிபதி வரவேற்கிறார். 2. புது தில்லியில் பிரிட்டிஷ் ஹை கமிஷனர் இல்லத்தில் நடைபெற்ற வரவேற்பு. 3. விமான நிலையத்தில். 4. கண்ணன் கீதோபதேசம் செய்யும் கலை







வழுது மிக்க தந்த உருவத்தை ராணிக்குக் காட்டுகிறார் ஜனாதிபதி. 5. காந்திஜியின் நினைவுக்கு அஞ்சலி. 6. அசோகா ஹோட்டலில் பாரதத்தின் பல்வேறு பகுதிப் பெண்டிர் உடையலங்காரக் காட்சி. 7. ஜெய்பூர் மகாராஜாவோடு யானையில் பவனி. 8. ராஜஸ்தான் கவர்னரின் பேத்தி பூச்செண்டை வழங்குகிறார். 9. மேவார் மகாராணாவின் வெள்ளி வெற்றிக் கோபுரப் பரிசு. 10. குடியரசு தினத்தன்று ஜனாதிபதி அளித்த விருந்து வைபவத்துக்கு ராணி வருகை. 11. டாக்டர் சுப்பராயன் இந்திய தபால்தலைகள் அடங்கிய 'ஆல்பத்'தை அளிக்கிறார். 12. டென்ஸிங்கும் மகாராணியும். 13. ராஜஸ்தான் கிராமமொன்றுக்கு விஜயம். 14. ஜெய்பூரில் அரச தம்பதிகளுக்குத் திலகமிட்டு வரவேற்பு. 15. ஆக்ராவிலுள்ள கலையழகுக் கட்டிடங்களை அரச தம்பதிகள் எலிஸபெத் மகாராணியாரும் அவரது கணவர் பிலிப் கோமகனும் பார்வையிடுகின்றனர்.







கப்படும் சன்மானம் வருஷத்துக்கு 4,75,000 பவுன்கள். அதாவது சுமார் 61,75,000 ரூபாய். இதைத் தவிர பிலிப் கோமகனுக்கு வருஷத்துக்கு 40,000 பவுன்கள் அதாவது சுமார் 5,20,000 ரூபாய் கிடைக்கிறது. இன்னும் பிதிரார்ஜிதமாக வந்துள்ள சொத்தி லிருந்து கிடைக்கும் வருமானம் வேறு. மலைக்க வேண்டாம்! வழிவழியாக வந்துள்ள பகட்டுக்கும் படாடோபத்துக்கும் ஆங்கிலே யர்கள் தயங்காமல் இந்தத் தொகையைத் தரத் தயாராகவே இருக்கிறார்கள்!

பட்டத்துக்குரியவர் பதினெட்டு வயதுக்கும் குறைந்தவராக இருந்தால், அல்லது வேறு எக்காரணத்தினாலாவது சரிவர அரசாள இயலாமல் போனால் அவருக்கு அடுத்தாற் போல் முடிதரிக்கக் கூடியவர் அவர் சார்பிலே காரியங்களை நடத்திக் கொண்டு போக வேண்டும் என்பது சட்டம். அதன்படி நோக்கினால் இளவரசர் சார்ல்ஸுக்குப் பதி னெட்டு வயது நிறையும் வரையில் இளவரசி மார்கரெட்டுக்குத்தான் இந்த உரிமை உண்டு. 1953ம் வருஷம் இதைச் சற்று மாற்றி அமைத்து முதல் உரிமையை பிலிப் கோமக னுக்கு அளித்தார்கள்.

அயல் நாட்டுக் கொள்கைகளைப் பொறுத்த வரையில் ஆட்சி பீடத்தில் அமர்ந்துள்ளவரின் எண்ணத்துக்கு என்றைக்குமே செல்வாக்கு இருந்து வந்திருக்கிறது. இன்றைக்கு உலக முழுவதிலுமுள்ள பிரிட்டிஷ் ஸ்தானிக ராலயங்கள் சாதிக்க முடியாததை யெல்லாம் நிறைவேற்றி வைக்கக் கூடிய திறமை எலிஸ பெத்தின் ஒரு புன்னகைக்கு உண்டு என் பதைப் பிரிட்டிஷார் நன்கு அறிவார்கள்.

பல்லாண்டு காலமாக அரசர்கள் அநே கரும் வாழ்ந்து வந்திருக்கும் பிரும்மாண்ட மான பக்கிங்ஹாம் அரண்மனை பற்றி ஓரள வுக்குத் தெரிந்து வைத்துக்கொண்டிருந்தேன். அங்கே எத்தனையோ அதிசயங்கள் உண்டாம். கணக்கில்லாத ரகசியக் கதவுகளைத் திறக்கக் கூடிய ஒரே சாவி அரசியிடம் இருக்குமாம். பல்வேறு அறைகளில் உள்ள இருநூற்றைம்ப துக்கு மேற்பட்ட கடிகாரங்களுக்குச் சாவி கொடுக்கவே பத்து மணி நேரமாகுமாம்.

இவ்வாறெல்லாம் கேள்விப் பட்டிருந்த எனக்கு அரண்மனைக்குள்ளே சென்று பார்க்க முடியாவிட்டாலும் வெளியிலிருந்தவாறே யாகிலும் காண வேண்டும் என்ற அர்வம் ஏற்பட்டது. லண்டனில் 'பிரிட்டிஷ் இன்பர் மேஷன் ஸர்வீஸி'ன் ஆதரவில் சில தினங்கள் தங்கி இருந்தபோது. என்னைப் போலவே பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அழைப்பின் பேரில் வந்திருந்த ஸ்ரீ சேஷாத்ரியும் ஸ்ரீ டைட்டஸும் உற்சாகத்துடன் தலையாட்டிச் சம்மதிக்கவே, 'காமன்வெல்த் ரிலேஷன்ஸ் ஆபீ'ஸைச் சேர்ந்த ஸ்ரீ மைக்கேல் டேவிஸையும் உடன் அழைத்துக் கொண்டு கிளம்பினோம்.

நாங்கள் சென்ற சமயம் அரண்மனைவாயி லில் ஒரே கோலாகலமாக இருந்தது. பாண்டு வாத்தியம் முழங்கக் காவல் வீரர்கள் அணி வகுத்து விரைப்பாக நடந்து வந்தார்கள். ஏற்கெனவே கால்கடுக்க நின்று கொண்டிருந் தவர்களுக்கு ஓய்வு கொடுத்து விட்டுப் புதிதாக வந்தவர்கள் காவல் புரிய ஆரம்பித் தார்கள். பளபளக்கும் பித்தான்களுடன் கூடிய செக்கச் சிவந்த ஆடையும் நெற்றி முழுதும் மூடி மறைக்கும் பெரிய கறுப்புத் தொப்பியும் அணிந்து ஆடாமல் அசையாமல் சிலையாக நின்றார்கள். விழிகள் மட்டிலும் இப்படியும் அப்படியுமாக அலைந்து உயிருள்ள மனிதன்தான், பொம்மை அல்ல என்பதைப் புலப்படுத்தின.

"ஐயோ பாவம்!" என்று பரிதாபப்பட் டேன். "வெய்யில், மழை, குளிர் என்றெல் லாம் பாராமல் நாள் முழுதும் இப்படியே நிற்க வேண்டியதுதானா?"

"ரொம்பக் கஷ்டம்தான்" என்று ஒப்புக் கொண்ட மைக்கேல் எதையோ நினைத்துக் கொண்டவர் போல மெல்ல நகைத்தார்.

"எதற்குச் சிரிக்கிறீர்கள்?" என்றோம்.

"சில மாதங்களுக்கு முன்னால் இங்கே சுவாரசியமான நிகழ்ச்சி ஒன்று நடை பெற்றது" என்று ஆரம்பித்தார் மைக்கேல்.

ஓர் அமெரிக்கப் பெண்மணி உலகை வலம் வரப் புறப்பட்டு இடையில் லண்டனுக்கு வந்து சேர்ந்தாள். நகர் முழுதும் சுற்றி அலைந்தவள் யாத்திரிகர்கள் எல்லாரையும் போல் பக்கிங்ஹாம் அரண்மனையைக் கண்டு வியந்தாள். இம்மி அளவும் அசங்காமல் நிற்கும் சிப்பாய்கள் அவள் ஆச்சர்யத்தை அதிகரிக்கச் செய்தார்கள். அவர்களில் ஒருவனையேனும் அணுவளவாகிலும் அசைத்து விட வேண்டும் என்ற விபரீத ஆசை எழுந்தது அந்தப் பெண்ணுக்கு. கருமமே கண்ணாயிருந்த காவலனை அணுகிப் புகைப்படம் பிடித்தாள், பேச்சுக் கொடுத்தாள், மெல்லத் தொட்டுக் கூடப் பார்த்தாள். ஒன்றுமே பலிக்கவில்லை. கீழே கிடந்த ஒரு குச்சிமீது அந்த அழகியின் திருஷ்டி விழுந்தது. அவ்வளவுதான், சட் டென்று குனிந்து அதனைக் கையிலெடுத்துக் காவலனின் கண்களைக் குத்தி விடுவதாகப் பயமுறுத்தினாள். பொறுமை இழந்தான் அவன். கனமான பூட்ஸ் காலினால் 'நறுக்' கென்று அவள் பாதத்தை அழுத்தி மிதித்து விட்டுப் பின்னர் ஒன்றுமறியாதவன் போலப் பழையபடியே சிலையானான்.

வலி பொறுக்காது துடித்த அந்தத் துடுக்குப் பெண் மேலதிகாரிகளிடம் முறையிட்டுக் கொண்டாள். அயல் நாட்டவளாகிய அவ ளிடம் பணிவன்புடன் நடந்து கொண்ட மேலிடத்தார் சிப்பாய்க்குத் தண்டனையும் தந்தார்கள்.

"இதென்ன அநியாயம்?" என்றோம்.

"அதற்கென்ன செய்வது?" என்ற மைக்கேல், விஷமம் விளையாடும் வதனத்துடன் தொடர்ந் தார்: "கடமையில் தவறியதற்காகத் தண்டனை பெற்ற அவனைத் தனிமையில் இட்டுச் சென்று முதுகில் தட்டிக் கொடுத்தும் இருப்பாரோ மேலதிகாரி!"

அரசியாகப் பிறக்க அதிர்ஷ்டம் இருக்க வேண்டும். அதுவும் பண்புமிக்க பிரிட்டிஷா ருக்கு அரசியாக விளங்கப் பூர்வ ஜன்மத்தில் ரொம்ப ரொம்பப் புண்ணியம் செய்திருக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டேன்.

— கி. ராஜேந்திரன்

# சாம்பிராணி தர்மம்

<u>அட்டைப்படக் கதை</u>

"ஆசை வலைப் பாசத்து அகப்பட்டு மாயாமல் ஓசை மணித் தீபத்தில் ஒன்றி நிற்பது எக்காலம்?" என்று புலம்பிக் கொண்டே சிறிது சாம்பிராணியை எடுத்துப் போட்டார் முருகேசப் பண்டாரம்.

'பத்திரகிரியார் மெய்ஞ்ஞானப் புலம்பல்' பண்டாரத்துக்குத் தலைகீழ்ப் பாடம்! ஒவ்வொரு முறையும் ஒரு கண்ணியைச் சொல்லி விட்டுச் சாம்பிராணித் தூளைப் போடுவார்.

அவர் கையில் இருந்த நீண்ட உருளைக் கழி, கைபட்டுத் தேய்ந்து மெருகேறி யிருந்தது. கழியின் முனையில் பொருத்தியிருந்த சாம்பிராணித் தட்டும் 'பளபள'வென்று தேய்க்கப் பட்டிருந்தது.

தட்டில் நெருப்பு கனன்று கொண்டிருந்தது. சாம்பிராணி, நொடியில் உருகிப் புகைச் சுருளாய்க் கிளர்ந்தெழுந்து, மணம் வீசிப் படர்ந்தது.

கையில் பிடித்திருந்த வாடாமல்லிச் சாயம் பூசியிருந்த அழகான சிறு விசிறியினால் படபட வென்று விசிறினார் பண்டாரம். சாம்பிராணித் தட்டின் கீழ் விளிம்பில் பளபளத்த சிறு மணிகள் கிணுகிணுவென்று ஒலித்தன.

சாம்பிராணிப் புகை, தட்டில் தவழ்ந்து பம்மிப் பதுங்கி முன்னிலும் விரைவாய் நாற்புறமும் பரவிக் காற்றில் கரைந்தது.

பண்டாரத்தின் வாய் 'சாம்பிராணி தர்மம்' என்று முணுமுணுத்தது.

'சாம்பிராணித் தட்டு' உண்மையில் தட்டு வடிவத்தில் தட்டையாக இருக்கவில்லை. மழுமழுப்பான கழியின் மேற்புறம் பொருத்தப்பட்டிருந்த ஓர் அழகான பெட்டி போலவே காட்சியளித்தது. அதற்கு மூடியும் இருந்தது! கீல் வைத்துப் பொருத்தப்பட்டிருந்த திறந்த மூடியின் உட்புறக் குழிவில்தான் அவர் வேண்டும் 'சாம்பிராணி தர்மம்' சிறு நாணயங்களாக 'ணங்' என்று ஒலி செய்து விழும்.

உலோகத் தட்டில் ஒலி செய்து விழும் தர்மத்தின் விளம்பரத் தன்மையை மட்டுப் படுத்துவதற்காகவும், செருக்கு எடுத்து வழங்குவதற்காகவும் காசுகள் விழும் பரப்பில் நைசான பரிமள விபூதியைப் பரப்பி வைத்திருந்தார் முருகேசப் பண்டாரம்.

எனவே அவருடைய காசுகளும் அவரைப் போலவே 'பரவிய திருநீற்றன்பு பாதுகாத்து உய்'யும் பாக்கியம் பெற்றிருந்தன!

* * *

முருகேசப் பண்டாரம் மைனர் முருகேசப் பிள்ளையாகப் புகழ் பரப்பி வாழ்ந்த காலத்தில் 'ஆசை வலைப்பாசத்து' நன்றாகவே 'அகப் பட்டுக்' கொண்டவர் தாம்!

பவுனம்பாள் முகத்தில் ஒரு நாள் காறி உமிழ்ந்து விட்டு வந்த பிறகுதான் சாம்பிராணியோடு தம்மையுமே சேர்த்துக் கரைத்துக் கொள்ளும் இந்த விரக்தி வாழ்க்கை யெல்லாம்!

சந்ததி ஏதுமின்றித் தாரமிழந்தவராக வாழ்ந்த முருகேசம் பிள்ளைக்கும் பவுனம்பாளின் தொடர்பு ஏற்பட்டது வியப்பன்று. தொடக்கத்தில் நிரந்தரத்தன்மை எதையும் அதற்கு முருகேசம்பிள்ளை அளிக்க விரும்பாதவராக இருந்த போதிலும், பவுனம்பாள் பெண் குழந்தை ஒன்றைப் பெற்றெடுத்து விட்ட பிறகு அவரையறியாமலே அந்தத் தொந்தம் இறுகப் பற்றிக் கொண்டு விட்டது.

முருகேசம் பிள்ளை பிரமாதமான செல்வந்தராக இல்லா விட்டாலும் சிறிது பூர்விக சொத்தும், நிலையான வருவாயுள்ள வர்த்தக



மும் அவருக்கு இருந்தன. வர்த்தகத்தில் எதிர்பாராது அடுத்தடுத்து நஷ்டம் ஏற்பட்டிருக்கா விட்டால் பூர்வீகச் சொத்து கரைவதற்கு அவசியமே ஏற்பட்டிருக்காது என்று கூடச் சொல்லலாம்.

முருகேசம் பிள்ளை தொடித்துப் போய் விட்டதுதான் பவுனம்பாள் அவரை விட்டு விலகியதற்கான காரணம் என்று சொல்லி விட முடியாது. உண்மையில் பவுனம்பாள் ஒரு திறுக்குத்தனமான பெண்பிள்ளை. நாடகம், சினிமா ஆகியவற்றில் அவளுக்குப் பெரும் பித்தே இருந்தது.

அடி நாளில் அவள் நாடகத்தில் பல காலம் பங்கு பெற்று மேடையேறி நடித்தவள்தான். பிள்ளையோடு தொடர்பு ஏற்பட்ட பிறகு தான் — அதுவும் அவருடைய வற்புறுத்தலின் விளைவாக — அவள் நாடகத்தில் நடிப்பதை விட்டொழித்தாள்.

ஆனால் நெடுங்காலம் அது அவளுடைய உள் மனத்தில் நீறுபூத்த நெருப்பாகவே கனன்று



கொண்டிருந்தது என்பதை முருகேசம்பிள்ளை பிறகே அறிந்தார்.

ஒரு நாள் பிள்ளை ஊரில் இல்லாதபோது அது நடந்தது.

அவ்வூருக்குப் புறக்காட்சிகளைக் கடுவதற்காக வந்திருந்த ஒரு சினிமாக் குழுவினரின் பரிச்சயம் எப்படியோ பவுனம்பாளுக்கு ஏற்பட்டுவிட்டது. எப்படியோ என்ன? பவுனம்பாளின் பண்டைய நாடகமேடைப் புகழை நன்கு தெரிந்து வைத்திருந்த அந்தச் சினிமாக் குழுவில் இருந்த ஒருவர்தான் வலிய வந்து அவளைச் சந்தித்தார்.

சினிமாத்துறையில் அவளுக்குக் கிடைக்கக் கூடிய வாய்ப்புக்களை அந்த மனிதர் சொன்ன போது அவளுக்கு மீண்டும் சபலம் தட்டியது. அப்பொழுது அவளுடைய குழந்தை மோகனுக்கு ஐந்து வயது நடந்து கொண்டிருந்தது.

முதலில் பிள்ளையிடம் விவரத்தைச் சொல்லி அவருடைய அநுமதி பெற்றே சினிமாத் துறையில் பிரவேசிப்பது என்பதுதான் அவளுடைய எண்ணம்.

தொடித்துப் போன இந்தச் சமயத்தில் அது லாபகரமாகவும் இருக்கும். எனவே பிள்ளையை இசைய வைப்பது அத்துணை கடினமாக இராது என்று நினைத்தாள் பவுனம்பாள்.

ஆனால் அவள் முருகேசம் பிள்ளையைப் பற்றித் தவறாக மதிப்பிட்டு விட்டாள் என்று பிறகுதான் அவளுக்குத் தெரிந்தது.

ஊர் திரும்பிய முருகேசம் பிள்ளை விவரமறிந்து குதியாய்க் குதித்தார்.

"அது என்ன பிழைப்பு பவுனு? நம்ம கௌரவம் எங்கே, சினிமாவில் நடிப்பது எங்கே? உனக்கு என்ன இருந்தாலும் புத்தி இப்படிப்போயிருக்கவேண்டாம்."

"ஏன் இப்படிப் பேசறீங்க? அதுவும் ஒரு கலைதானே! நடிப்புத் தொழிலில் இறங்கினால் புகழுக்குப் புகழும் ஆச்சு. பணத்துக்குப் பணமும் ஆச்சு. இப்ப நாம் இருக்கிற நிலையில் அது ரொம்பவும் உதவியாகத்தான் இருக்கும் இல்லையா?"

பவுனம்பாளின் இந்தப் பேச்சு பிள்ளையின் பொறியில் தட்டி விட்டது.

"என்னது! இப்ப நாம இருக்கிற நிலையா? ஏன் இப்ப நாம இருக்கிற நிலைக்கு என்ன குறைவாம்?" என்று பிள்ளை சீறினார்.



"ஆமாம் ரொம்பத்தான் நல்லா இருக்கு நம்ப நிலைமை! வியாபாரம், வியாபாரம்னு இருக்கிறதை யெல்லாம் தொலைச்சாச்சு. என் பெண் நாளைக்கு நல்லா இருக்க வேண்டாமா? அதற்கு ஒரு நல்ல வழி கிடைத்திருக்கிறதே என்று பார்த்தால் அதற்கும் விடமாட்டீங்க போலிருக்குது. இப்படியே கிடந்து சாகணும்னுதான் எழுதியிருக்குதோ என்னவோ எங்க தலையிலே" என்று பெரிதாகப் பிரலாபிக்க ஆரம்பித்து விட்டாள் பவுனம்மாள்.

பவுனம்மாள் இப்படித் தம்மையும் தம் பெண்ணையும் தனியாகப் பிரித்துப் பேசியது முருகேசம் பிள்ளையின் கண்களைத் திறந்து விட்டது.

"என்னடீ சொன்னே! நாயைக் குளிப்பாட்டி நடுவீட்டிலே வைச்சாலும் என்னவோ செய்யும் என்பாங்களே அந்த மாதிரிதானே ஆயிப் போச்சு. கடைசியிலே நீ உன் புத்தி யைத்தானே காட்டிவிட்டே. சீ! துப்புக் கெட்டவளே" என்று காறி உமிழ்ந்துவிட்டு அவர் கன்னத்திலும் ஓங்கி ஓர் அறை அறைந்து விட்டார்.

அதற்குமேல் காரியங்கள் துரித கதியில் நிகழ்ந்தன.

பவுனம்மாள் பட்டணத்துக்குப் புறப்பட்டுச் சென்றபொழுது மோகனாவை மட்டுமாவது தம்முடன் விட்டுவிட்டுப் போகும்படி கேட்டுக் கொண்டார் அவர்.

பவுனம்மாள் தூக்கி யெறிந்து பேசி விட்டுக் குழந்தையையும் கரகரவென்று இழுத்துக் கொண்டு சினிமா வண்டியில் ஏறி விட்டாள். விவரம் தெரியாமல் மோகனா மட்டும் அழுத போது அவள் முதுகில் ஓங்கி அறைந்து விட்டாள் பவுனம்மாள்.



**ப**வுனம்மாள் வெள்ளித் திரையில் நட்சத்திரமாக மின்னிய செய்திக ளெல்லாம் அவர் காதிலும் விழுந்தான் செய்தன. அவர் அதையெல்லாம் காதிலேயே போட்டுக் கொள்ளவில்லை. அவள் தனது பெயரையே கவர்ச்சிகரமாக மாற்றி வைத்துக் கொண்டு விட்டாளென்றும் சொல்லிக்கொண்டார்கள்.

பவுனம்மாள் சென்ற உடனேயே முருகேசம் பிள்ளையும் தேசாந்திரம் கிளம்பி விட்டார். பல இடங்களில் க்ஷேத்திராடனம் செய்த பிறகு கடைசியில், "ஆசை கொண்ட மாதர் அடை களவு நீக்கி, உன்மேல் ஓசை கொண்டு நானும் புடுங்குவதும் எக்காலம்?" என்று சொல்லிக் கொண்டே, 'சாம்பிராணி தர்மம்' என்று கம்பைத் தூக்கிக் கொண்டு கிளம்பி விட்டார் அவர்.

இந்தப் பன்னிரண்டு வருடங்களுக்கு மேலான இடைக் காலத்தில் எப்பொழுதாவது பழையப் நிகழ்ச்சிகள் வாசனையாகத் தோன்றுவதுண்டு.

உடனேயே முருகேசப் பண்டாரம் அந்தப் பழைய வாசனையைச் சாம்பிராணிப் புகை வாசனையில் மறந்து, அந்த நினைவுகளையே சாம்பிராணியோடு சேர்த்துப் போக்குவது போல் மேலும் இரண்டு கை சாம்பிராணித் தூளை அள்ளிப் போடுவார்.

**அ**ன்று கோவிலில் விசேடமான பரபரப்பு காணப்பட்டது. இளவட்டங்களெல்லாம் மிகுதியான எண்ணிக்கையில் வட்டமிட்டுக்கொண்டிருந்தார்கள். பண்டாரம் ஓர் இளவட்டக் குழுவை நெருங்கி விசாரித்தார்.

"ஓய்! இன்றைக்குப் பிரபல சினிமா நட்சத்திரம் மாயாதேவி இந்தக் கோவிலுக்கு வரப் போகிறாள் ஐயா! நீர் நல்ல இடமாப் பார்த்து உம்ம சாம்பிராணித் தர்மத் தொழிலே நடத்தும். பெரிய சினிமா நட்சத்திரம் ஐயா! நல்லாக் கவனிச்சிப்பாள்."

முருகேசப் பண்டாரத்துக்கு மறுபடியும் பழைய நினைவுகள் அவரையும் மீறித் தோன்றின.

அவர் சிரத்தை யெடுத்துக் கொள்ளாமலேயே அவர் காதில் அந்த இளைஞர்கள் பேசிக் கொண்டது விழுந்தது.

அந்த மாயாதேவிக்குப் பதினெட்டு வயதுதான் இருக்குமாம். திரையுலகில் புகுந்த ஓர் ஆண்டுக்குள்ளாகவே நட்சத்திரப் பதவியை எட்டிப் பிடித்து விட்டவளாம்.

முருகேசப் பண்டாரத்துக்குத் தம்முடைய பூர்வாசிரமப் புதல்வி மோகனாவின் நினைவு வந்தது. ஒருவேளை அவளும் சினிமாத் துறையில்தான் இறங்கி யிருப்பாள். அநேகமாக இந்த மாயாதேவியே கூட அவளாக இருக்கலாம். யார் கண்டார்கள்?

பண்டாரத்துக்கு இலேசாகப் பாசம் வந்து ஒட்டிக் கொண்டு விட்டது.

அந்த நட்சத்திரத்தை நன்றாகப் பார்த்து விடுவது என்று எண்ணிக் கொண்டார். ஒரு வேளை அவள் அவருடைய மகள் மோகனாவாகவே இருந்துவிட்டால்......? அவளுடைய



கடந்த முப்பதாண்டுகளாக டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டியின் தலைமையில் அனாதைச் சிறுவர்களுக்கும், திக்கற்ற மகளிருக்கும் புது வாழ்வளித்து வரும் அடையாறு அவ்வை இல்லத்துக்கு சினிமா நடிகர் திரு எம். ஜி. ராமச்சந்திரன் ரூ. 30,000 நன்கொடை வழங்கியுள்ளார். ஜனவரி 29 ந் தேதி அவ்வை இல்லத்தில் அவரைப் பாராட்டி ஒரு விழா நடைபெற்றது. விழாவுக்குத் தலைமை வகித்த நிதி மந்திரி ஸி. சுப்பிரமணியத்தையும் ஸி. என். அண்ணாதுரை, டாக்டர் பூ. ஜெகன்னாதராவ், எம்.ஜி.ஆர். ஆகியோரையும் படத்தில் காணலாம்.

இடது கன்னத்தில் காதுக்குக் கீழே கறுப்பாகச் சற்றுப் பெரிய அளவில் ஒரு மச்சம் இருக்குமே அதைக் கொண்டு எளிதாகக் கண்டுபிடித்து விடலாம் அல்லவா?

மாயாதேவி வந்து விட்டாள்.

அவள் பிராகாரத்தை வலம் வந்து கொண்டிருந்தாள். முருகேசப் பண்டாரத்துக்கு அருகில் வந்து கொண்டிருந்த போது அவர் கையில் தயாராகத் திருநீறு எடுத்து வைத்துக் கொண்டார். 'சாம்பிராணி தர்மம்' என்று இரண்டு முறை உரக்கவே குரல் கொடுத்தார்.

மாயாதேவி அவர் அருகில் சற்று நின்று விட்டாள்.

திருநீற்றை அளிக்கும் போது அவர் அவளை நன்றாக உற்றுப் பார்த்தார்.

மாயாதேவி பயபக்தியுடன் திருநீற்றைப் பெற்றுக் கொண்டாள். தனது அலங்காரப் பையைத் திறந்து ஓர் ஐந்து ரூபாய் நோட்டைத் தட்டின் மூடியில் போட்டாள்.

முருகேசப் பண்டாரத்துக்கு உடம்பெல்லாம் நடுங்கியது. 'குப் குப்' என்று வியர்த்து விட்டது. அவர் நன்றாகக் கவனித்தார்.

சந்தேகமேயில்லை! அவள் அவருடைய மகள் மோகனாவேதான்!

மாயாதேவியின் 'மேக்கப்'பையும் மீறிப் பழைய மோகனாவின் தடித்த கறுப்பு மச்சம் தெளிவாகத் தெரிந்தது.

மாயா தேவியும், பரிவாரத்தினரும் அவரைத் தாண்டிச் சென்ற பிறகு அவர் சமநிலைக்கு வரவில்லை! அவர் கண்களில் நீர் சுரந்தது. நெஞ்சை அடைத்தது!

மறுபடியும் அவளை ஒரு முறை பார்க்க வேண்டும் என்று மனமும் அடித்துக் கொண்டது. அவள் அவருடைய மகள். அவளுடனேயே எப்படியாவது சென்று உண்மையைத் தெரிவித்து விட்டால் என்ன?

உம்! இந்தப் பண்டாரம் சொல்வதை அவள் நம்ப வேண்டும். ஒரு வேளை பயனும் பான் இருந்தால்...!

மனம் கற்பனைகளைத் தொடர்ந்து பின்னிக் கொண்டிருக்க, அவர் கால்கள் அவரைக் கோயிலின் வாயிலுக்கு அழைத்து வந்தன.

மாயாதேவி புறப்பட்டுக் கொண்டிருந்தாள்.

எல்லாரும் தொலைவில் நின்று பார்த்துக் கொண்டிருந்தனர். அனைவரையும் புன்முறுவலுடன் வணங்கி விட்டு மாயா தேவி காருக்குள் ஏறிக் கொண்டாள்.

அனைவரும் அவளையே பார்த்துக் கொண்டிருந்த போது பண்டாரம் எப்படியோ காருக்கு மிக அருகில் அவள் உட்கார்ந்திருந்த பக்கம் கதவுக் கருகில் வந்து விட்டார்.

மாயாதேவி சடக்கென்று திரும்பிப் பார்த்தாள்.

பண்டாரத்தின் உதடுகள் எதையோ சொல்லத் துடித்துக்கொண்டிருந்தன. ஆனால் வார்த்தைதான் வெளி வரவில்லை.

மாயா தேவி அதைத் தவறாகப் புரிந்து கொண்டாள். மீண்டும் ஏதோ தர்மத்துக்காகத்தான் அவர் அங்கே வந்து நிற்பதாக நினைத்தாள்.

"ஏம்பா, அப்பதான் உனக்குக் கொடுத்தேனே! உங்களுக்கெல்லாம் வேறே வேலை இல்லே. போ! போ! டிரைவர் நீ ஓட்டு!" என்று உத்தரவிட்டாள்.

அதற்குள் கூட்டத்தில் சிலரும், ஒரு போலீஸ்காரரும் முருகேசப் பண்டாரத்தை முரட்டுத்தனமாக அப்பால் தள்ளினர்.

கூட்டத்தினருக்குப் பண்டாரத்தின் மீது தான் வெறுப்பு வந்தது. 'மாயாதேவி ஐந்து ரூபாயைக் கொடுத்த பிறகும் பண்டாரத்துக்குப் பேராசையைப் பார்' என்று சிலர் வாய்விட்டுச் சொல்லவும் செய்தார்கள்.

அவர் கண்கள் ததும்பின. "அவள் என் சொந்த மகள் ஐயா! நான் பெற்ற மகள்" என்று அவருக்கு வாய் விட்டு அரற்ற வேண்டும் போல் தோன்றியது. ஆனால் ஒலியே எழும்பவில்லை!

நெடு நேரமாகியும் அவரால் அந்த அதிர்ச்சியிலிருந்து விடுபட முடியவில்லை. 'சே! என்ன பேதைமை! மறுபடியும் பாசத்துக்கு இடம் கொடுத்துவிட்டோமே. இத்தனை நாளைய வைராக்கியமும் என்ன ஆவது?' என்று எண்ணிக் கொண்டார்.

அன்று இரவு கோயிலில் அவர் 'சாம்பிராணி தர்மம்' வேண்டிய பொழுது, "ஆசை வலைப் பாசத்து அகப்பட்டு மாயாமல், உனை மனித் தீபத்தில் ஒன்றி நிற்பது எக்காலம்?" என்று புலம்பிய போது அது வாய் புலம்பலாக மட்டுமின்றி அவரது உள் மனத்தின் மெய்யான துயரப் புலம்பலாகவும் இருந்தது!

# பாவம் தேய்த்த பாவை மகாநாடு

கலை மலிந்த இன்றும் ஒரு நகரில், ஒரே சமயத்தில், ஐந்நூறு பஜனை கோஷ்டிகள் ஒன்று சேர்ந்தன, இறைவனைப் பாடிப் பரவின என்றால் அதற்கும் காரணம் அந்த இறைவனின் இன்னருளேயாகும். குருமூர்த்தமாக, ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிகவரர்களாக, எழுந்தருளியுள்ள இறைவனின் திருச் செயலில் சென்ற ஜனவரி 29-ந் தேதி காஞ்சீபுரத்தில் நடைபெற்றது திருப் பாவை - திருவெம்பாவை மகாநாடு. பெரியவர்கள் தம் பொன்னுன உள்ளத் தோடு பல ஆண்டுகளுக்கு முன் தொடங்கி வைத்த இம்மகாநாட்டில் இன்றும் ஏராளமான பஜனைக் கோஷ்டிகள் கலந்து கொண்டு பக்தி நெறியைப் பரப்பி வருகின்றன.

பஜனை காலை ஐந்து மணிக்கு ஸ்ரீ வரதராஜஸ்வாமி ஆலயத்தில் தொடங்கியது. வீதிவலம் நடைபெற்றுக் கொண்டிருக்கும்போதே பலப் பல கோஷ்டிகள் வந்து சேர்ந்தபடியிருந்தன. இவற்றில் பல கோஷ்டிகள் தொலை தூரங்களிலிருந்து வந்தவை. சுமார் ஒரு மைல் நீளத்துக்குப் பக்தர்கள் திரளாகக் கூடி பகவன் நாமத்தை பஜித்தபடி சென்றது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. பிற்பகல் மூன்று மணிக்கு ஸ்ரீ ஏகாம்ர நாதன் கோயிலில் பாவை மகாநாடு ஆரம்பமாயிற்று. ஸ்ரீ ஆசாரிய சுவாமிகள் நேரில் கலந்து கொள்ளாவிடினும், தமது ஆசிச் செய்தியின் மூலம் அங்கு குழுமியிருந்த அனைவருடைய உள்ளத்திலும் உறைந்து நின்றார்கள். சமயத் துறையிலும் வேற்றுமைபோல் தோன்றுபவைகளில் ஒற்றுமை காண வேண்டிய அவசியத்தை அந்தச் செய்தி தெள்ளத் தெளிய வற்புறுத்தியது.

ஸ்ரீமான்கள் டி. எம், கிருஷ்ணசுவாமி அய்யர், திருவாசகமணி கே. எம். பால சுப்பிரமணியம், பெரியண்ணன், சேலம் சுப்பராய பிள்ளை ஆகியோர் ஆஸ்திகம் தழைக்க வேண்டியதன் அவசியம் குறித்து உரையாற்றினார்கள்.

மகாநாட்டின் புனிதத்தன்மை நகரம் முழுவதுமே பரவிக் கமழ்ந்தது. அடியார் யாவருக்கும் உண்ணவும், பருகவும் சகல வசதிகளையும் தந்துதவிய காஞ்சிமா நகரின் வர்த்தக சமூகமும், இதர பெருமக்களும் புண்ணியத்தில் பங்கு பெற்றனர்.





மாடல் 0374:
6 வால்வ் - ஆல் வேவ் - 4 பாண்ட்
பியானோ - கீ - ஸ்விட்ச்
ஏஸி அல்லது ஏஸி/டிஸி (இரு மாடல்கள்)

யாராக இருந்தாலும் சரி....










உங்களுக்குப் பூரண
திருப்தி அளிப்பது

# மர்பி
# ரேடியோ



மாடல் 0322:
6 வால்வ் - ஆல் வேவ் - 3 பாண்ட்
ஏஸி அல்லது ஏஸி/டிஸி (இரு மாடல்கள்)



மாடல் 266:
7-வால்வ் - ஆல்-வேவ் - 5-பாண்ட்
பியானோ - கீ - ஸ்விட்ச் - ஏஸி



மாடல் 0724:
6-வால்வ்
ஆல்-வேவ்
8-பாண்ட், முழு
பாண்ட்ஸ்பெரட்
ஏஸி அல்லது
ஏஸி/டிஸி
(இருமாடல்கள்)
மற்றும்
மாடல் 0737:
(டிரை பாட்டரி)
7-வால்வ்



மாடல் 0352:
5-வால்வ் - ஆல்-வேவ் - 3-பாண்ட்
ஏஸி அல்லது ஏஸி/டிஸி
(இரு மாடல்கள்)



மாடல் 0726:
7-வால்வ்
ஆல்-வேவ்
8 பாண்ட், முழு
பாண்ட்ஸ்பெரட்
ஏஸி அல்லது
ஏஸி/டிஸி
(இருமாடல்கள்)



மாடல் 0298:
5-வால்வ் - ஆல்-வேவ் . 3-பாண்ட்
ஏஸி/டிஸி
மற்றும்
மாடல் 0299: (டிரை பாட்டரி)
4-வால்வ்



மாடல் 0752:
5-வால்வ்
ஆல்-வேவ்
3-பாண்ட்
ஏஸி அல்லது
ஏஸி/டிஸி
(இருமாடல்கள்)
மற்றும்
மாடல் 0751:
(டிரை பாட்டரி)
5-வால்வ்

**murphy radio**
delights
the home!

# அக்கரைச் சீமையில் ஆறு மாதங்கள்

சோமு

## 12. கலைக் காட்சிகள்!

லெண்டன் நகரத்தின் முக்கியமான வீதிகளில் ஒன்றான 'சாரிங் க்ராஸ்' சாலையின் நடைபாதையிலே ஒரு நாள் நானும் இரண்டு நண்பர்களும் நடந்து சென்று கொண்டிருந்தோம். எங்களுக்கு எதிரே ஒரு தள்ளு வண்டிக்காரர் பழங்கள் விற்றுக் கொண்டு வந்தார். திராட்சைப் பழங்களும், ஆரஞ்சுப் பழங்களும் ஏராளமாக இருந்தன. அவற்றுக்கு மத்தியிலே கறுப்புப் பொட்டேயில்லாமல் முழு மஞ்சள் நிறத்தில் நீளம் நீளமாக வாழைப் பழங்களும் காட்சி தரவே, வண்டிக்கு அருகிலே சென்று பார்த்தேன்! வாழைப் பழங்களையும் தராசிலே போட்டு நிறுத்து விற்றதால், அந்த விநோதத்தைக் கொஞ்சநேரம் நின்று ரசித்தவாறு, என்னுடைய வியாபாரத்தையும் முடித்துக் கொண்டு மறு பக்கம் திரும்பினேன்; என் பின்னாலிருந்து ஓர் ஆங்கிலேயர் — பழைய உடையிலே தோற்றம் தந்தவர் — என்னிடம் வந்து ஒரு காகிதச் சுருளை நீட்டினார்! 'இந்தக் குபேரப் பட்டணத்திலும் இம்மாதிரி நாகரிகப் பிச்சைக்காரர்கள் இருக்கிறார்களா?' என்று ஒரு வினாடி மனத்துக்குள்ளே எண்ணிக்கொண்டே காகிதச் சுருளைப் பிரித்தேன். என்ன ஆச்சரியம்! நானே என் கண்முன்னால் நின்றேன் அந்தக் காகிதத்திலே!

ஆமாம்; நான் வாழைப் பழ வியாபாரத்தை முடித்துக் கொண்டு திரும்புவதற்குள் என்னை ஒரு சிறு காகிதத்திலே வரைந்து வைத்து விட்டார் அந்த ஆங்கிலேயக் கலைஞர்!

"இதில் கையெழுத்திட்டுத் தேதியும் போட்டு நீங்களே வைத்துக்கொள்ளுங்கள்!" என்று அவர் சொன்ன பிறகுதான் எனக்கு விஷயம் விளங்கிற்று. லண்டன் நகரத்தின் "நடைபாதைக் கலைஞர்" களிலே அவரும் ஒருவர் என்பதைப் புரிந்து கொண்டேன்! படத்தை அவர் வரைந்து முடித்திருந்த கைத்திறமையும் விரைவும் உள்ளத்தில் மகிழ்ச்சியையும் வியப்பையும் உண்டாக்கின. லண்டன் நகரத்தின் வழக்கப்படி இரண்டு ஷில்லிங் கொடுத்துப் படத்தை வாங்கிக்கொண்டு மேலே நடந்தேன்.

ஆங்கில நாட்டின் "சட்டப்படி பிச்சை கேட்பது குற்றமாகும். எனவே வாழுவதற்கு வகையில்லாத ஏழை மக்களுங்கூட ஏதாவது ஒரு கலையின் பெயராலேயே பணம் பெறுகிறார்கள். நடைபாதையில் "வயோலின்" வாசித்துக்கொண்டோ அல்லது துருத்தியோடு இணைந்த வாத்தியத்தை இசைத்துக் கொண்டோ சிலர் உட்கார்ந்திருப்பதைப் பார்க்கலாம். எதிரில் தங்கள் தொப்பியைத் தலைகீழாகப் போட்டு வைத்திருப்பார்கள். அதில் காசைப் போட்டுச் செல்வார்கள் வழிப்போக்கர்கள். இந்தச் சங்கீதக் கலைஞர்களில் அற்புதமான ஆற்றல் நிரம்பிய மேதைகள் சிலரைச் சந்திக்கும் வாய்ப்பும் எனக்கு லண்டனிலே ஏற்பட்டது. ஞாயிற்றுக் கிழமைகளில் க்ரேவன் வீதியிலே துருத்தி வாத்தியத்தை வாசித்துக் கொண்டு செல்லும் ஓர் அபூர்வ வித்துவானோடு பேசிப் பார்த்ததில், அவருடைய நுட்பமான ஞானத்தைக் கண்டு மெய்சிலிர்த்துப் போனேன்!

சங்கீதக் கலைஞர்களைத் தவிர, சித்திரம் வரையக்கூடிய ஓவியர்கள் பலரும் நடைபாதைகளில் தங்கள் வண்ண ஓவியங்களை வரிசையாக அடுக்கி வைத்திருப்பார்கள். சித்திரங்களுக்கு நேரே அவற்றுக்கு உரிய விலையும் குறிப்பிட்டிருப்பார்கள். இந்த ஓவியர்களிலே பலர் சென்ற யுத்தத்தின்போது இராணுவ சேவை செய்து பல அவதிகளுக்கு உள்ளானவர்கள்.

இங்கிலாந்து நாட்டில் பலருக்கும் சித்திரக் கலையிலே ஆர்வம் இருக்கிறது. என்னோடு நெருங்கிப் பழகிய ஒரு செய்தி அதிகாரி ஒரு நாள் தம்முடைய வீட்டுக்கு என்னை அழைத்துப் போனார். "காய்கறி சாப்பிடுகிற உங்களுக்கு வேறு என்ன உயிருள்ள விருந்து தரப்போகிறேன்!" என்று சொல்லி ஒரு பெரிய ஓவியத் தொகுப்பைக் கொண்டுவந்து எதிரே வைத்தார். அந்த வண்ண விருந்தை இப்பொழுது நினைத்தாலும் வயிறு நிரம்புகிறது! உயிர்த் துடிப்புள்ள அந்தச் சித்திரங்கள் அனைத்தும் அவருடைய மனைவி வரைந்தவை!

ஆங்கிலேயர்களுக்குச் சித்திரக் கலையில் இவ்வளவு ஆர்வம் இருப்பதற்கு ஒரு முக்கிய காரணம், அவர்களுடைய நாட்டில் பழமையான ஓவியங்களை மிகவும் கருத்தோடு திரட்டி அந்தச் சித்திர மரபுகளைக் கலைக் காட்சி நிலையங்களிலே நன்றாகப் பாதுகாத்து

வருகிறார்கள்! இங்கிலாந்தின் சித்திரங்கள் தவிர, உலகின் பல நாடுகளிலிருந்தும் ஓவியங்களையும் கலைப்பொருள்களையும் கலைக் காதலோடு சேகரித்து வந்து, நாட்டின் பொது நிலையங்களிலே எல்லாரும் சென்று காணும்படி வைத்திருக்கிறார்கள்!

'யுனைடெட் கிங்டம்' எல்லைக்குள்ளே, எழுநூற்று ஐம்பதுக்கும் மேற்பட்ட கலை நிலையங்கள் இருக்கின்றன! இங்கெல்லாம் புதைபொருள்கள், விஞ்ஞானக் கல்விச் செல்வங்கள், கலைநிதியங்கள், விநோதப் பொருள்கள் ஆகியவற்றைப் பல நாடுகளிலிருந்தும் கொண்டுவந்து வகைப்படுத்திக் குறிப்புக்களோடு நிலை நிறுத்தி யிருக்கிறார்கள்!



லண்டன் நடைபாதையிலே சித்திரங்கள்

'ப்ரிட்டிஷ் ம்யூஸியம்' என்ற கலைச் சாலையிலே ஒரு பெரிய நூல் நிலையம் இருக்கிறது. எழுபது லட்சம் புத்தகங்களுக்கு மேலாக இங்கே உள்ளன! இன்னும், ஆண்டுக்கு ஐம்பத்து மூவாயிரம் நூல்கள் வீதம் வருஷந்தோறும் சேர்த்துக் கொண்டே யிருக்கிறார்கள்!

தேசிய ஓவியச் சாலையிலே இங்கிலாந்து, ப்ரான்ஸ், ஹாலண்ட், இதாலி, ஸ்பெயின் முதலிய நாட்டு ஓவியங்கள் ஏராளமாக இருக்கின்றன! சில மாதங்கள் கழித்து நான் இதாலி சென்றபோது வெனிஸ்நகரத்திலும், ப்ரான்ஸ் சென்றபோது பாரிஸ் நகரத்திலும் இந்தச் சித்திரங்களின் விசிலை யெல்லாம் காணுவதற்கு ஒரு தூண்டுகோலாக இருந்தது லண்டனிலேயுள்ள தேசிய நிலையந்தான்!

'பொதுச்சுவடி நிலையம்' என்ற கட்டடத்திலே இங்கிலாந்தின் சரித்திரச் சான்றுகளையும், சாசனங்களையும் அருமையான முறையிலே பாதுகாத்து வைத்திருக்கிறார்கள். இவை தவிர, போர்களின் வரலாறு, அவற்றில் உபயோகித்த பல படைக்கலங்கள், இவற்றின் விளைவுகள், போரின் பயங்கரம் ஆகியவற்றை விளக்கும் காட்சிகளுக்கும் கணக்கே யில்லை!

இந்தக் காட்சி நிலையங்களிலே இன்னொரு முக்கியமான சிறப்பு, அரசியல் தலைவர்கள், கவிஞர்கள், கதையாசிரியர்கள், நாடகாசிரியர்கள் ஆகியோரின் கடிதங்கள், கையெழுத்துப் பிரதிகள் முதலியவற்றை மிகுந்த பக்தியோடு பாதுகாத்து வைத்திருக்கிறார்கள்!

இந்தியாவிலிருந்து சென்றுள்ள நமக்கு இந்தக் காட்சிச்சாலைகளிலே பல இந்தியச் சிற்பங்களும், படிமங்களும், கோவிற் செல்வங்களும் இருப்பது கண்டு அதிசயம் அதிகரிக்கிறது. "முடியுடை மூவேந்த"ரின் தொன்மையான சில நாணயங்கள், சேவல் பொறித்தவை, நந்தி பதித்தவை, மீன் பொறித்தவை முதலியவற்றைப் பார்த்தேன்!

'விக்டோரியா அன்ட் ஆல்பெர்ட் ம்யூஸியம்' காட்சிச்சாலையிலே இந்தியப் பகுதிக்குள் நுழைந்த போது என் கண்கள் கலங்கின! நம்முடைய செந்தமிழ் நாட்டிலிருந்து எத்தனை கலைப்பொருள்கள் இங்கே வந்து உட்கார்ந்து கொண்டிருக்கின்றன என்ற உருக்கம் ஒரு புறமும், இவற்றை யெல்லாம் நம்மைப் போல் புறக்கணித்து விடாமல் இந்த ஆங்கிலேய மக்கள் எத்தனை கருத்தோடு பாதுகாத்து வைத்திருக்கிறார்கள் என்ற திருப்தி ஒரு புறமும், உள்ளத்தில் அலைமோதின!

பூஜா யந்திரங்கள் என்ற தகடுகளையும், பூஜா மூர்த்திகளையும் எங்கே வைக்க வேண்டும், எப்படி வைக்க வேண்டும் என்றெல்லாம் எத்தனையோ விதிகளும் சட்டங்களும் நம்முடைய 'பட்டாங்கு' என்னும் சாஸ்திரங்களிலே சொல்லப்பட்டிருக்கின்றன! இவற்றையுங்கூட மற்ற விநோதப் பொருள்களின் மத்தியிலே பார்த்த போது ஏதேதோ உணர்ச்சிகள் என் மனத்தில் எழுந்தன!

ஒன்பதாம் நூற்றாண்டிலிருந்து பதின்மூன்றாம் நூற்றாண்டு வரையுள்ள சோழர் காலத்துச் சிற்பங்கள், 13—14 நூற்றாண்டுப் பாண்டியர் சிற்பங்கள், 14—16 நூற்றாண்டு விஜயநகர அரசர் சிற்பங்கள், பிறகு 16ம் நூற்றாண்டு மதுரை நாயகர் சிற்பங்கள் ஆகியவற்றை 'விக்டோரியா அன்ட் ஆல்பெர்ட்' காட்சி சாலையிலே பார்த்தேன்!

திருஞான சம்பந்தரின் வெண்கல உருவம் ஒன்று இருக்கிறது. அதில் எழுதி வைத்துள்ள குறிப்பு: "The Saivite Saint Tirugnanasambandha, as a boy, pointing upwards (to SIVA) with his right hand. Bronze. Tinnevelly Dt. Madras state. Late Chola style 13th Century A. D. Bequeathed by Lord Ampthill in 1935."

"பெம்மான் இவனன்றே" என்று பாடிக் கொண்டே ஞானசம்பந்தப்பிள்ளை சிவனைச் சுட்டிக் காட்டிய வரலாறு நமக்குத் தெரியும் அல்லவா? அந்த நிலையை விளக்குகிறது இந்த வெண்கலப் படிமம்!

"திருநெல்வேலியிலிருந்து லண்டனுக்குச் சென்றுள்ள சிற்பங்கள்" என்ற குறிப்பைப் பார்த்ததும், உள்ளூர் அபிமானம் மேலிட்டவனாக மேலும் ஆராய்ந்தேன்! நெல்லை நடராஜர், நெல்லைப் பார்வதி (காந்திமதி) ஆகிய படிமங்களைக் கண்டேன். இவை தவிர, கோயம்புத்தூர் கிருஷ்ணனும், திருவாரூர்



ரஸிகமணி டி. கே. சி. அவர்களின் பேரன் திரு குற்றாலலிங்கத்துக்கும் சௌ. ராஜம்மாள் அண்ணிக்கும் பிப்ரவரி 6-ந் தேதி திருக்குற்றாலத்தில் மிக விமரிசையாகத் திருமணம் நடைபெற்றது. மணமகள் திரு சோமசுந்தர முதலியார் அவர்களின் புதல்வி. திருமணத்துக்கு ஏராளமான உறவினர்களும், நண்பர்களும் வந்திருந்து மணமக்களை ஆசீர்வதித்தனர்.

மங்கையும், மதுரை வில்லேந்திய திருமேனியும், அங்கே கொலுவிருக்கிறார்கள்!

இந்தக் காட்சிச் சாலையில் இன்னொரு அதிசயப் பொருள், திப்பு சுல்தானின் புலிப் பொம்மை! ஒரு மிகப் பெரிய வெண்கலப் பொம்மை அது! ஜெனரல் ஹாரிஸ் என்ற தளபதி 1799 ம் ஆண்டில் ஸ்ரீரங்கப்பட்டணத்தைக் கொண்ட போது, திப்புவின் அரண்மனையில் இந்தப் பொம்மை அகப்பட்டதாம். அது சித்திரிக்கிற காட்சி என்ன தெரியுமா? பிரிட்டிஷ் அதிகாரி ஒருவரை ஒரு புலி தாக்கிக் கீழே தள்ளி, அவருக்கு மேலே ஏறி நின்று அமுக்கிப் பிசைகிறது. இந்தக் காட்சியை வெண்கலத்திலே வடிவாக்கி அந்தப் பொம்மைக்குள்ளே ஒரு துருத்தியும் பொருத்திருக்கிறது. அந்தத் துருத்தியின் விசையை முடுக்கினால், புலி சீறுகிற ஓசையும், கீழே கிடக்கிற மனிதரின் தீனமுறலும் கேட்குமாம் காற்றின் இயக்கத்தினால்! திப்புவுக்கு இந்தப் பொம்மை விளையாட்டு ஒரு பொழுதுபோக்காக இருந்ததாம்! இந்தக் கதையின் ஆதாரத்தைப் பற்றிப் பல கருத்து வேற்றுமைகள் ஆங்கில ஆசிரியர்களிடையே நிலவுகின்றன. எது எதானாலும், இப்படி ஒரு பொம்மை அங்கே இருப்பதும், அது திப்புவின் உடைமை என்பதும், அதைத் திப்புவின் மாளிகையிலிருந்து ஜெனரல் ஹாரிஸ் கொண்டு போனார் என்பதும், மெய்யான செய்திகளே!

இந்த அதிசயப் பொம்மையை ஒரு பெரிய கண்ணாடிப் பெட்டிக்குள்ளே வைத்திருக்கிறார்கள். அதற்குப் பக்கத்தில் திப்புவின் பாக்கெட் கடிகாரம், தங்கக் கடிகாரம் ஒன்றும், தங்கப்பிடியோடு கூடிய திப்புவின் கைத்தடி ஒன்றும் இருக்கின்றன.

இவற்றை யெல்லாம் பார்த்துக்கொண்டே இன்னொரு பெரிய அறைக்கு வந்தேன்! அங்கே மதுரையிலிருந்து சென்றுள்ள ஒரு பெரிய திரைச்சீலை தொங்குகிறது. " Hindu Temple Hangings from Madura " என்ற குறிப்போடு! துணியை நெய்யும்போதே ஊடும் பாவுமாக வர்ண நூல்களைக் கொண்டு சில கதைக் காட்சிகளை அதிலே நெய்து காட்டி யிருக்கிறார்கள். அற்புதம் நிறைந்த நம்முடைய தமிழ்நாட்டுக் கைத்தறிக் கலைஞர்கள்! ராமாயணக் காட்சிகளை வர்ண நூல்களிலே நெய்திருக்கிற அந்த அற்புதத்தை எப்படிப் புகழ்வது! ராம ராவண யுத்தத்தின் பல கட்டங்களையும் ஒவ்வொன்றாக நெய்து, அதற்குக் கீழே "ராமசுவாமி பாணங்களைத் தொடுப்பது" போன்று தமிழ் எழுத்துக்களால் குறிப்புக்களும் நெய்து கொடுத்திருக்கிறார்கள் நம்முடைய முன்னோர்கள்! ஒரு திரைச் சீலையில் பட்டாபிஷேகக் காட்சி. அதில் வாத்திய கோஷ்டி நிற்கிறது. அழகழகான தமிழ் எழுத்துக்களில், "தமுக்கு அடிக்கிறவன்" என்றும், "நாகசுரகாரன்," "தவுல் அடிக்கிறவன்," "நகரா அடிக்கிறவன்," "தாளம் அடிக்கிறவன்," "சங்கு ஊதுகிறவன்" என்றும் அங்கங்கே அடிக்குறிப்பும் வர்ண நூலினாலேயே துணியோடு துணியாக நெய்திருப்பதைப் பார்த்ததும் எனக்குப் பெருமை உண்டாயிற்று! "டை"க்குள்ளே கொடுத்துக் கொண்டிருந்த கழுத்து நிமிர்ந்தது! அந்தச் செந்தமிழ் எழுத்துக்களைக் கண்டு புயங்கள் விம்மின! தமிழ் அன்னையே தரிசனம் தந்ததுபோல் பரவசம் கொண்டேன்!

இந்த ஆனந்த உவகையோடு வெளியே வந்ததும் "கோஹினூர் வைரம் எங்கே இருக்கிறது?" என்று கேட்டேன் என்னுடைய ஆங்கிலேய நண்பர்களிடம்! 'லண்டன் டவரில்' என்றார்கள்.

கோஹினூர் வைரம் நம் நாட்டில் இருந்த கதையும், அது நம்மை விட்டுச் சென்ற கதையும் பற்றி எத்தனை செய்திகள் விதம் விதமான கற்பனையோடு நம்மிடையே வழங்கி வருகின்றன! இந்த அற்புதமான மாபெரும் வைரக் கல்லைப் பார்க்க வேண்டும் என்ற ஆவலுடன் 'டவர் ஆப் லண்டன்' என்ற சரித்திரப் புகழ் பெற்ற நிலையத்துக்குச் சென்றேன்.

(தொடரும்)

## மகத்தான ஆரம்ப விழா

**24-2-61 வெள்ளிக்கிழமை மாலை 6-30 மணிக்கு**

*அன்று இரவு 9-30 மணிக்கு இரண்டாவது ஆட்டம் உண்டு*

**எஸ். ஐ. ஏ. ஏ. கிரௌண்டில்** (மூர்மார்க்கெட் பின்புறம்)

*தினசரி இரண்டு காட்சிகள் : மாலை 6-30; இரவு : 9-30*

பிரதி சனி, ஞாயிறு மூன்று காட்சிகள் : பிற்பகல் 3; மாலை 6-30 இரவு 9-30

இதற்கு முன் பார்த்திராத பிரமிக்கத்தக்க வித்தைகள் நிறைந்த

# கிரேட் ஈஸ்டர்ன் சர்க்கஸ்

**(of 1961)**




- 300 அற்புத வீர வாலிபர்களும், கண்ணைக்கவரும் அழகிகளும் நிறைந்த ஒரு குழு செய்யும் அற்புத விளையாட்டுகள்.
- ஏராளமான பழக்கப்பட்ட வன விலங்குகள்.
- மற்றும் பல ஆச்சரியமான விளையாட்டுக்களும் வயிறு குலுங்க சிரிக்கவைக்கும் நிகழ்ச்சிகளும் பிரமிக்கத்தக்க மாஜிக் வேடிக்கைகளும் நிறைந்தது.

### டிக்கட் விபரம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பாக்ஸ் (5 பேர்) | ரூ. | 20.00 | முதல் வகுப்பு | ரூ. | 2.25 |
| பாக்ஸ் (தனி நபர் ஒன்றுக்கு) | ரூ. | 4.50 | இரண்டாம் வகுப்பு | ரூ. | 1.25 |
| டிரெஸ் ஸர்க்கில் | ரூ. | 3.25 | காலரி | ரூ. | 0.65 nP. |

**பண்டை நாளாலே நின்திரு—அருளும்**
**பங்கயத்தாள் திரு - அருளும்**
**கொண்டு, நின்கோயில் சீய்த்து பல்**
**படிகால்**
**குடிகுடி வழிவந்து, ஆட்செய்யும்**
**தொண்ட ரோர்க்கு அருளி, சோதி**
**வாய் திறந்து, உன்**
**தாமரைக் கண்களால் நோக்காய்-**
**தெண் திரைப் பொருநல் தண்பணை**
**சூழ்ந்த**
**திருப்புளிங்குடிக் கிடந்தானே**'

பண்டை நாளாலே—ஆதிகாலம் தொடங்கியே. நின் திரு அருளும் பங்கயத்தாள் திரு அருளும்—பகவான் அருளுக்குக் காரணமான பிராட்டியாரின் திரு அருளும் என்று சேர்த்து சொல்லுகிறார்.

என் அடியார் குற்றம் செய்ய மாட்டார்கள் என்கிற உன் திருவருளும், குற்றம் செய்யாதார் யாவர் என்று ஹநுமாரைக் கேட்ட பிராட்டியார் திருவருளும

நின் கோயில் சீய்த்து—பகவான் உகந்து அருளினகோயில்களில் துடைப்பம் கொண்டு கூட்டிச் சுத்தம் செய்து;

பல் படிகால்—தொன்று தொட்டு; குடிகுடி வழிவந்து—உற்றார் உறவினர்களோடு வம்ச பரம்பரையாக

ஆள்செய்யும் — அடிமை செய்யும்;

சோதிவாய் திறந்து—பூ அலருவது போல் வாய்திறந்து வார்த்தை அருளும்போது திருமுகத்தில் பிறக்கும் செவ்வியைச் சேர்ந்து சோதி வாய் திறந்து என்கிறார்.

தெண்திரை — தெளிந்த அலைகள், தண்பணை — குளிர்ந்த வயல்கள்

படுத்துக் கண்கள் மூடிய நிலையிலிருக்கிற பெருமாளைக் கண் திறந்து பேசச் சொல்லுகிறார்.

**ஓர் ஆயிரமாய் உலகேழ் அளிக்கும்**
**பேர் ஆயிரம் கொண்டது ஓர்பீடு**
**உடையன்,**
**கார் ஆயின காள நல் மேனியினன்,**
**நாராயணன் நங்கள் பிரான்-அவனே.**

ஒவ்வொரு திருப் பெயருமே ஆயிரமாகி ஏழ் உலகங்களையும் பாதுகாக்க வல்ல திருப்பெயர்கள். அத்தகைய பெயர்கள் ஆயிரம் உடையவனான நாராயணன் நமக்குப் பிரான் ஆவான்.

ஓர் பீடு உடையன்—ஒப்பற்ற பெருமையை உடையவன். கார் ஆயின காள நல்மேனியனன்—நீர்கொண்ட மேகம் போன்ற கரிய அழகிய திருமேனியுடையவன். பிரான் — உபகாரகன்.

பகவன் பகவான் என்றால் பகத்தை உடையவன். 'பகம்' என்பது செல்வம் செல்வத்தை ஆறு வகையாகப் பிரித்து நம் பெரியோர்கள் சொல்வார்கள் ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம். இந்த ஆறு செல்வங்களையும் கொண்டவனுவான் நாராயணன்

நாராயணனுக்குப் பெரியோர் வைத்திருக்கும் நாமங்களின் விசேஷம், அந்த நாமத்தைச் சொன்னாலே, பாவங்கள் தீர்ந்து காப்பு அடைவோம்.

சுடு விளக்கம்: செல்வந்தர்கள் ஏழைகளுக்கு உணவு அளிக்கச் சோறும் தண்ணீரும் வைத்திருப்பது போல் நாராயணன் ஆயிரம் பசுக்களைப் போல் ஆயிரம் திருநாமங்கள் வைத்துக்கொண்டு நம்மைக் காக்கக் காத்திருக்கிறான் என்பது இந்தப் பாசுரத்தின் பொருள்

**அவனே அகல் ஞாலம் படைத்து**
**இடந்தான்;**
**அவனே அஃதுஉண்டு உமிழ்ந்தான்,**
**அளந்தான்;**
**அவனே அவனும், அவனும், அவனும்;**
**அவனே மற்று எல்லாமும் -**
**அறிந்தனமே.**

அவனே விசால பிரபஞ்சத்தைப் படைத்தவன். மூழ்கியபோது இடந்து எடுத்தவன் பிரபஞ்சத்தை உண்டும் உமிழ்ந்தும் அளந்தவனும் அவன். அவனே திரிமூர்த்திகளும் ஆவான். எல்லாப் பொருள்களும் அவனே. இந்தப் பெருண்மையை விஷ்ணுபக்தர்களாகிய நாம் அறிந்து விட்டோம்.

வராக அவதாரமாகி இடந்தான் - திருவிக்ரமனாகி அளந்தான் அவனே' என்பதிலுள்ள ஏகாரத்துக்கு சுடு வியாக்கியானம்: படைத்தல் முதலிய காரியங்களில் வேறு துணைக் காரணம் இல்லை என்பதைக் காட்டுகிறது

வைஷ்ணவ பரம்பரையில் 'அவனும் அவனும் அவனும்' என்பதற்கு அவனே பிரம்மனும் அவனே சிவனும் அவனே இந்திரனும் என்பது. இதற்குப் பிரமாணம் :

" ஸபிரஹ்மா ஸ சிவ: ஸ இந்த்ர:" என்று சுருதி வாக்யம் என்பார்கள். மூவரில் ஒருவனை இந்திரனாக வைப்பதற்குப் பதில் பிரம்ம விஷ்ணு சிவன் ஆகிய மும்மூர்த்திகளில் ஒவ்வொருவனும் அவனே என்றும் வைத்துக் கொள்ளலாம்.

மற்று எல்லாமும் - சேதனம், அசேதனம் அதாவது அறிவுடை உயிர்கள், அறிவில்லாத பொருள்கள் அனைத்துக்கும் அவனே உயிர் என்பது வைஷ்ணவ சித்தாந்தம்.

**மனமே! உன்னை வல்வினையேன்**
**இரந்து,**
**கனமே சொல்லினேன் — இது**
**சோரேல் கண்டாய்!-**
**புனம் மேவிய பூந் தண் துழாய்**
**அலங்கல்,**
**இனம் ஏதும் இலானை அடைவதுமே.**

மனமே! அவனை விடாதேகாண் என்கிறார்.

கனமே சொல்லினேன் — உறுதியாகச் சொன்னேன் இது சோரேல் கண்டாய்—இதை விடாதே காண். இனம் ஏதும் இலான்—ஒப்பில்லாதவன் புனம் மேவிய—வாசனை பொருந்திய. அலங்கல்—மாலை. விஷ்ணுவின் வனமாலை. சாரங்கம், சங்கு, சக்கரம், கதை, வாள் இவற்றுடன் அவன் அணிந்திருக்கும் வன மாலையையும் சேர்த்துச் சொல்வது வழக்கம்.

**ஆகம் சேர் நரசிங்கம்-அது ஆகி. ஓர்**
**ஆகம் வள் உகிரால் பிளந்தான் உறை**
**மாக வைகுந்தம் காண்பதற்கு**
**என்மனம்**
**ஏகம் எண்ணும் — இராப்பகல்**
**இன்றியே.**
**இன்றிப் போக இருவினையும்**
**கெடுத்து,**
**ஒன்றி யாக்கை புகாமை உய்யக்**
**கொள்வான்**
**நின்ற வேங்கடம் நீள் நிலத்து**
**உள்ளது :**
**சென்று தேவர்கள் கைதொழு**
**வார்களே.**

நல்வினை, தீவினை இரண்டும் வாசனை அற இல்லாமல் போகும்படி அழித்து சரீர யாத்திரை இல்லாமல் ஆன்மாவுக்கு விடுதலை தருவதற்காகத் திருவேங்கடமலை இந்தப் பூமியில் நிற்கிறது. மக்கள் அங்கு சென்று தொழுதால் தேவர்களாவார்கள் என்கிறார்.

" ராமனுடைய அழகுபொருந்திய குண்டலங்களோடு கூடின முகத்தைப் பதினைந்தாவது ஆண்டு மீண்டும் யார் பார்ப்பார்களோ அவர்கள் மனிதர்கள் அல்ல தேவர்கள் ஆவார்கள்" என்று தசரதன் சொல்லி அழுது உயிர்நீத்தான் என்பது வால்மீகி ராமாயணம். பெரும் புண்ணியம் பெற்றவர்கள் தேவர்களுக்குச் சமம் என்று சொல்வது வழக்கம்.

**கண்ணே! உன்னைக் காணக்கருதி,**
**என்நெஞ்சம்,**
**எண்ணே கொண்ட சிந்தையதாய்,**
**நின்று இயம்பும் :**
**விண்ணோர் முனிவர்க்கு என்றும்**
**காண்பு - அரியாயை**
**நண்ணுதொழியேன் என்று நான்**
**அழைப்பனே.**

எனக்குக் கண்ணாக இருப்பவனே! உன்னைக் காணுவதற்காக என் நெஞ்சம் எண்ணிக்கையைக் கடந்து பல வகையாக எண்ணி அலறுகிறது. தேவர்களும் முனிவர்களும் உன்னைக் காண்பது அரிது. ஆயினும் உன்னை அடையாமல் விடமாட்டேன், பெற்றே முடிப்பேன் என்று அலறி அழுகிறேன் என்கிறார்.

**அழைக்கின்ற அடிநாயேன், நாய்**
**கூழை வாலால்**
**குழைக்கின்றது போல, என்உள்ளம்**
**குழையும் :**
**மழைக்கு அன்று குன்றம் எடுத்து**
**ஆ-நிரை காத்தாய்!**
**பிழைக்கின்றது அருள் என்று**
**பேதுறுவனே.**

அக்காலத்தில் மழையைத் தடுப்பதற்காக மலையை எடுத்துப் பசுக்களைக் காத்தவனே! ஒரு நாய் தன் கூழை வாலால் தன் ஆசையைக் காட்டுவது போல் நாயேன் உன்னை இறைஞ்சி உள்ளம் குழைந்து நிற்கிறேன் உன் அருள் வரவில்லையே என்று வருந்துகிறேன்.

பேதுறுதல் — வருந்தி மனம் கலங்குதல்.

நாய் தன் வாலால் தன் ஆசையைக் காட்டும், அந்த வால் கூழை வாலாக இருந்தாலும் நாய் அதை ஆட்டி ஆட்டிக் காட்டும். அதை வைத்து ஆழ்வார் தம் துக்கத்தைச் சொல்லுகிறார்.

## 11 அருட்செல்வர் எங்கே?

கதக் கண்ணன் என்ற பெயருக்குச் 'சினம் கொண்டு விரைந்து நோக்கும் ஆண்மையழகு பொருந்திய கண்களையுடையவன்' என்று பொருள். இந்தப் பொருட் பொருத்தத்தை யெல்லாம் நினைத்துப் பார்த்துத்தான் வீரசோழிய வளநாடுடையார் தம் புதல்வனுக்கு அப்பெயரைச் சூட்டியிருந்தார் என்று சொல்ல முடியாதாயினும் பெயருக்குப் பொருத்தமாகவே அவன் கண்கள் வாய்த்திருந்தன. தனக்கும் தன்னைச் சேர்ந்தவர்களுக்கும் துன்பம் நேரும் போது அதைக் களைவதற்கும், அதிலிருந்து காப்பதற்கும் சினந்து விரையும் கதக்கண்ணனின் நெஞ்சுரத்தை அவனுடைய முகத்திலும் மலர்ந்த கண்களிலும் காணலாம்.

இந்திரவிழாவின் இரண்டாம் நாளான அன்று நாளங்காடிச் சந்தியில், 'இளங்குமரன் எங்கே போனான் முல்லை?' என்று தன்னை விசாரித்துக் கொண்டு நின்ற தமையனின் முகத்திலும் கண்களிலும் இதே அவசரத்தைத்தான் முல்லை கண்டாள்.

"அண்ணா! யாரோ பட்டினப்பாக்கத்தில் எட்டிப் பட்டம் பெற்ற பெருஞ்செல்வர் வீட்டுப் பெண்ணும். பெயர் சுரமஞ்சரி என்று சொல்லுகிறார்கள். அவள் அவரைப் பல்லக்கில் ஏற்றித் தன் மாளிகைக்கு அழைத்துக் கொண்டு போகிறாள்" என்று தொடங்கி நாளங்காடியில் நடந்திருந்த குழப்பங்களையெல்லாம் அண்ணனுக்குச் சொன்னாள் முல்லை. அவள் கூறியவற்றைக் கேட்டதும் கதக்கண்ணனும், அவனோடு வந்திருந்தவர்களும் ஏதோ ஒரு குறிப்புப் பொருள் தோன்றும்படி தங்களுக்குள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். அப்போது அவர்கள் யாவருடைய விழிகளிலும் அவசரமும், பரபரப்பும் அதிகமாவதை முல்லை கவனித்துக் கொண்டாள்.

"என்ன அண்ணா? நீங்கள் அவசரமும், பதற்றமும் அடைவதைப் பார்த்தால் அவருக்கு ஏதோ பெருந்துன்பம் நேரப் போகிறது போல் தோன்றுகிறதே! நீங்கள் அவசரப்படுவதையும், அவரைப் பற்றி விசாரிப்பதையும் பார்த்தால் எனக்குப் பயமாயிருக்கிறது, அண்ணா!"

"முல்லை! இவையெல்லாம் நீ தெரிந்துகொள்ள வேண்டாதவை. ஆனால் ஒன்று மட்டும் தெரிந்து கொள். நாங்களெல்லாம் துணை



# மணிபல்லவம்

நா. பார்த்தசாரதி

யிருக்கும்போது இளங்குமரனை ஒரு துன்பமும் அணுகிவிட முடியாது. இளங்குமரன் செல்வம் சேர்க்கவில்லை. ஞானமும், புகழும் சேர்க்கவில்லை. ஆனால் இந்தப் பெரிய நகரத்தில் எங்களைப் போல் எண்ணற்ற நண்பர்களைச் சேர்த்திருக்கிறான். அவனுக்கு உதவி செய்வதைப் பெருமையாக நினைக்கும் இளைஞர்கள் அவனைச் சுற்றிலும் இருக்கிறார்கள் என்பது உனக்குத் தெரியாது.''

''தெரியும் அண்ணா! ஆனால் நண்பர்களைக் காட்டிலும் பகைவர்கள்தான் அவருக்கு அதிகமாயிருக்கிறார்கள் என்று தோன்றுகிறது.''

''இருக்கட்டுமே! பகைகள் யாவும் ஒரு மனிதனுடைய வலிமையைப் பெருக்குவதற்குத்தான் வருகின்றன. பகைகளை எதிரே காணும்போதுதான் மனிதனுடைய பலம் பெருகுகிறது, முல்லை!'' என்று தங்கையோடு வாதிடத் தொடங்கியிருந்த கதக்கண்ணன் தன் அவசரத்தை நினைத்து அந்தப் பேச்சை அவ்வளவில் முடித்தான்.

''முல்லை! நாங்கள் இப்போது அவசரமாக இளங்குமரனைத் தேடிக்கொண்டு செல்லவேண்டும். இந்த நிலையில் உன்னை வீட்டில் கொண்டுபோய் விடுவதற்காக எங்களில் யாரும் உன்னோடு துணை வருவதற்கில்லை. ஆனால் நீ வழி மயங்காமல் வீடு போய்ச் சேருவதற்காக உன்னை இந்த நாளங்காடியிலிருந்து அழைத்துப் போய்ப் புறவீதிக்குச் செல்லும் நேரான சாலையில் விட்டுவிடுகிறேன். அங்கிருந்து இந்திர விழாவுக்காக வந்து திரும்புகிறவர்கள் பலர் புறவீதிக்குச் சென்று கொண்டிருப்பார்கள் அவர்களோடு சேர்ந்து நீ வீட்டுக்குப் போய்விடலாம்'' என்று தமையன் கூறியதை முல்லை மறுக்காமல் ஒப்புக் கொண்டாள். தமையனுடைய அவசரத்துக்காக அவள் வீட்டுக்குப் போக இணங்கினாளே தவிர உள்ளூறத் தானும் அவர்களோடு செல்ல வேண்டும், சென்று இளங்குமரனுக்கு என்னென்ன நேருகிறதென்று அறிய வேண்டும் என்று ஆசையிருந்தது அவளுக்கு. வேறு வழியில்லாமற் போகவே அந்த ஆசைகளை மனத்துக்குள்ளேயே தேக்கிக் கொண்டாள்.

''நண்பர்களே! நீங்கள் சிறிது நேரம் இங்கேயே நின்று கொண்டிருந்தால் அதற்குள் இவளைப் புறவீதிக்குப் போகும் சாலையில் கொண்டு போய்ச் சேர்த்து விட்டு வந்துவிடுவேன். அப்புறம் நாம் இளங்குமரனைத் தேடிக்கொண்டு பட்டினப்பாக்கத்துக்குச் செல்லலாம்'' என்று சொல்லி உடன் வந்தவர்களை அங்கே நிற்கச் செய்துவிட்டு முல்லையை அழைத்துக் கொண்டு கதக்கண்ணன் பு பட்டான். எள் விழ இடமின்றிப் பூ சதுக்கத்தில் வழி உண்டாக்கிக் கொண் போவது கடினமாக இருந்தது.

போகும்போது இளங்குமரனைப் பற் மீண்டும், மீண்டும் சில கேள் களைத் தன் அண்ணனிடம் தூண்ட கேட்டாள் முல்லை. அந்தக் கேள்விக எல்லாவற்றுக்கும் கதக்கண்ணன் விள மாக மறுமொழி கூறவில்லை. சுருக்கம ஒரே ஒரு செய்தியை மட்டும் முல் யிடம் கூறினான் அவன்:

''முல்லை! அதிகமாக உன்னிட ஒன்றும் சொல்வதற்கில்லை. பலவித திலும் இளங்குமரனுக்குப் போதா காலம் இது. சிறிது காலத்துக்கு வெளிே நடமாடாமல் அவன் எங்கேயாவது தல மறைவாக இருந்தால்கூட நல்லதுதான் ஆனால் நம்மைப் போன்றவர்களி வார்த்தையைக் கேட்டு அடங்கி நட கிறவனா அவன்?''

''நீங்கள் சொன்னால் அதன்படி கே பார் அண்ணா! இல்லாவிட்டால் நம தந்தையாரோ, அருட்செல்வ முனிவரோ எடுத்துக் கூறினால் மறுப்பின்றி அதன்பட செய்வார். சிறிது காலத்துக்கு அவனை நம் வீட்டிலேயே வேண்டுமானால் மறைந்து இருக்கச் செய்யலாமே?''

''செய்யலாம் முல்லை! ஆனால் நட இல்லத்தையும் விடப் பாதுகாப்பான இடம் அவன் தங்குவதற்கு வாய்க்குமா என்று சிந்தித்துக் கொண்டிருக்கிறேன் நான். அவனைப் பற்றிய பல செய்திகள் எனக்கே மர்மமாகவும் கூடமாகவும் விளங்காமலிருக்கின்றன. முரட்டுக் குணத்தாலும், எடுத்தெறிந்து பேசும் இயல்பாலும் அவனுக்கு இந்த நகரில் சாதாரணமான பகைவர்கள் மட்டுமே உண்டு என்று நான் இதுவரை நினைத்துக் கொண்டிருந்தேன். இப்போதோ இவற்றையெல்லாம் விடப் பெரியதும் எனக்குத் தெளிவாக விளங்கிக் கொள்ள முடியாததுமான வேறொரு பகையும் அவனுக்கு இருக்கிறதெனத் தெரிகிறது. முல்லை! எது எப்படி இருந்தாலும் இதைப் பற்றி நீ அதிகமாகத் தெரிந்து கொள்ளவோ கவலை கொள்ளவோ அவசியமில்லை. ஆண் பிள்ளைகள் காரியமென்று விட்டுவிடு.''

தமையன் இவ்வாறு கூறியதும், முதல் நாள் நள்ளிரவுக்குமேல் அருட்செல்வ முனிவர், இளங்குமரன் இருவருக்கும் நிகழ்ந்த உரையாடலைத் தான் அரைகுறையாகக் கேட்க நேர்ந்ததையும், முனிவர் இளங்குமரனுக்குமுன் உணர்ச்சி வசப்பட்டு அழுததையும், அவனிடம் சொல்லிவிடலாமா என்று எண்ணினாள்

முல்லை. சொல்லுவதற்கு அவள் நாவும் கூட முந்தியது. ஆனால் ஏனோ சொற்கள் எழவில்லை. கடைசி விநாடியில் 'ஆண் பிள்ளைகள் காரியம் ஆண் பிள்ளைகளோடு போகட்டும்' என்று அண்ணனே கூறி பதை நினைத்தோ, என்னவோ தன் நாவை அடக்கிக் கொண்டாள் முல்லை. ஆயினும் அவள் மனத்தில் காரணமும் தொடர்பும் தோன்றாத கலக்கமும், பயமும் உண்டாயின. தன் நெஞ்சுக்கு இனிய நினைவுகளைத் தந்து கொண்டிருக்கும் இளங்குமரன் என்னும் அழகைப் பயங்கரமான பகைகள் தெரிந்தும், தெரியாமலும் சூழ்ந்திருக்கின்றன என்பதை உணரும்போது சற்றுமுன் நாளங்காடியில் அவன் மேற்கொண்ட கோபம் கூட மறந்துவிட்டது அவளுக்கு. நீர் பாயும் வாய்க்கால்களில், நீர் பாயாத நேரத்து நிமிர்ந்து நிற்கும் புல் நீர் பாயும்போது சாய்ந்து போவது போல் அவள் உள்ளத்தில் எழுந்திருந்த சினம் அவனைப் பற்றிய அநுதாப நினைவுகள் பாயும்போது சாய்ந்து படிந்தது: தணிந்து தாழ்ந்தது.





பூத சதுக்கத்து இந்திர விழாவின் கூட்டமும் ஆரவாரமும் குறைந்து நடந்து செல்ல வசதியான கிழக்குப் பக்கத்துச் சாலைக்கு வந்திருந்தார்கள் முல்லையும், கதக்கண்ணனும். விண்ணுக்கும் மண்ணுக்கும் உறவு கற்பிக்க எழுந்தவைபோல் இருபுறமும் அடர்ந்தெழுந்த நெடுமரச் சோலைக்கு நடுவே அகன்று நேராக நீண்டு செல்லும் சாலைதெரிந்தது. விழாக் கொண்டாட்டத்துக்காக நாளங்காடிக்கும் அப்பாலுள்ள அக நகர்ப் பகுதிகளுக்கும் வந்துவிட்டுப் புறநகர்ப் பகுதிகளுக்குத் திரும்பிச் செல்வோர் சிலரும் பலருமாகக் கூட்டமாயும், தனித்தனியாயும், அந்தச் சாலையில் சென்றுகொண்டிருந்தார்கள்.

"முல்லை! நீ இனிமேல் இங்கிருந்து தனியாகப்போகலாம். நேரே போனால் புறவீதிதான். நிறைய மக்கள் சென்றுகொண்டிருக்கிறார்கள். ஒரு பயமுமில்லை" என்று கூறித் தங்கையிடம் விடைபெற்றுக் கொண்டு வந்தவழியே திரும்பி விரைந்தான் கதக்கண்ணன். முல்லை தயங்கித் தயங்கி நின்று அண்ணனைத் திரும்பிப் பார்த்துக் கொண்டே கீழ்ப் புறச் சாலையில் நடந்தாள். அண்ணன் இந்திர விழாக் கூட்டத்தில் கலந்து மறைந்த பின்பு திரும்பிப் பார்க்க வேண்டிய அவசியமும் இல்லாமற் போயிற்று. அவள்தான் மெல்ல நடந்தாள்! அவளுடைய நெஞ்சத்திலோ பலவித நினைவுகள் ஓடின. 'பட்டினப்பாக்கத்தில் அந்தப் பெண்ணரசி சுரமஞ்சரியின் மாளிகையில் இளங்குமரனுக்கு என்னென்ன அநுபவங்கள் ஏற்படும்? அந்த ஓவியன் எதற்காக அவரை வரைகிறான்? அந்தப் பெண்ணரசிக்காக வரைந்ததாகக் கூட்டத்தில் நின்று கொண்டிருந்தவர்கள் பேசிக் கொண்டார்களே! அப்படியானால் அவருடைய ஓவியம் அவளுக்கு எதற்கு?' — இதற்கு மேல் இந்த நினைவை வளர்க்க மறுத்தது அவள் உள்ளம். ஏக்கமும், அந்தப்

பட்டினப் பாக்கத்துப் பெண் மேல் பொறுமையும் ஏற்பட்டது முல்லைக்கு. அதோடு, 'தன் தமையனும் மற்ற நண்பர்களும் எதற்காக இவ்வளவு அவசரமாய் இளங்குமரனைத் தேடிக் கொண்டு போகிறார்கள்?' என்ற வினவும் அவளுள்ளத்தே தோன்றிற்று. இப்படி நினைவுகளில் ஓட்டமும் கால்களில் நடையுமாகப் புற வீதியை நோக்கிச் சென்று கொண்டிருந்தாள் முல்லை. நுண்ணுணர்வு மயமான அகம் விரைவாக இயங்கும்போது புற உணர்வுகள் மந்தமாக இயங்குவதும் புற உணர்வு விரைவாக இயங்கும்போது அக உணர்வுகள் மெல்லச் செல்வதும் அப்போது அவள் நடையின் தயக்கத்திலிருந்தும், நினைவுகளின் வேகத்திலிருந்தும் தெரிந்து கொள்ளக் கூடிய மெய்யாயிருந்தது. நினைவுகளின் வேகம் குறைந்ததும் அவ நடையில் வேகம் பிறந்தது.

தான் வீட்டை அடையும்போது தன் தந்தை வீட்டிற்குள்ளே அருட்செல்வ முனிவரின் கட்டிலுக்கருகே அமர்ந்து அவரோடு உரையாடிக்கொண்டிருப்பார் என்று முல்லை எதிர்பார்த்துக் கொண்டு சென்றாள். அவள் எதிர்பார்த்ததற்கு நேர்மாறாக வீட்டு வாயில் திண்ணையில் முரசமும் படைக் கலங்களும் வைக்கப்பட்டிருந்த மேடைக்கருகிலே கன்னத்தில் கையூன்றி வீற்றிருந்தார் வீரசோழிய வளநாடுடையார்.

"என்ன அப்பா இது? உள்ளே முனிவரோடு உட்கார்ந்து சுவையாக உரையாடிக் கொண்டிருப்பீர்கள் என்று நினைத்துக் கொண்டு வருகிறேன் நான். நீங்கள் என்னவோ கப்பல் கவிழ்ந்து போனது போல் கன்னத்தில் கையூன்றிக் கொண்டு திண்ணையில் உட்கார்ந்திருக்கிறீர்களே? முனிவர் சோர்ந்து உறங்கிப் போய் விட்டாரா; என்ன?" என்று கேட்டுக் கொண்டே வாயிற்படிகளில் ஏறி வந்தாள் முல்லை.

முல்லை அருகில் நெருங்கி வந்ததும், "உறங்கிப் போகவில்லை அம்மா! சொல்லிக் கொள்ளாமல் ஓடிப் போய் விட்டார். நீயும் இளங்குமரனும் நாளங்காடிக்குப் புறப்பட்டுப் போன சில நாழிகைக்குப் பின் உன் தமையன் கதக்கண்ணனும், வேறு சிலரும் இளங்குமரனைத் தேடிக் கொண்டு இங்கு வந்தார்கள். அவர்களுக்குப் பதில் சொல்வதற்காக வாயிற்பக்கம் எழுந்து வந்தேன். வந்தவன் அவர்களுக்குப் பதில் சொல்லி அனுப்பி விட்டுச் சிறிது நேரங்கழித்து உள்ளே போய்ப் பார்த்தால் முனிவரைப் படுக்கையில் காணவில்லை. பின்புறத்துக் கதவு திறந்து கிடந்தது. பின்புறம் தோட்டத்துக்குள் சிறிது தொலைவு அலைந்து தேடியும் பார்த்தாகி விட்டது. ஆனால் காணவில்லை" என்று கன்னத்தில் ஊன்றியிருந்த கையை எடுத்துவிட்டு நிதானமாக அவளுக்குப் பதில் கூறினார் வளநாடுடையார்.

அதைக் கேட்டு முல்லை ஒன்றும் பேசத் தோன்றாமல் அதிர்ந்து போய் நின்றாள்.

## 12. ஒற்றைக்கண் மனிதன்!

பட்டினப்பாக்கத்து ஏழடுக்கு மாளிகையின் பூம்பொழில் நடுவே அப்படி ஓர் அதிசயத்தைச் சிறிதும் எதிர்பார்த்திராதவனான இளங்குமரன் தன் அருகில் நின்று கொண்டிருந்தவளையும், எதிர்ப்பக்கத்திலிருந்து வந்து கொண்டிருந்தவளையும் மாறி மாறிப் பார்த்தான். அவன் மனத்தில் தாங்க முடியாத வியப்பு ஏற்பட்டது. ஓவியன் மணிமார்பனும் வரைவதை நிறுத்தி விட்டு விழிகள் அகல அந்த அதிசயத்தைக் கண்டான்.

அவர்கள் உயிரும், உணர்வும் உடைய பெண்களா, அல்லது ஒரே அச்சில் வார்த்து அணிந்தும் புனைந்தும், உடுத்தும், அலங்கரிக்கப் பெற்ற இரண்டு பொற்பாவைகளா? 'அந்த இருவரில் யார் சுரமஞ்சரி? யார் மற்றொருத்தி?'- என்று அறிய மாட்டாமல் இளங்குமரனும், ஓவியனும் திகைத்து மயங்கிய போது எதிர்ப்பக்கத்திலிருந்து வந்தவள் அவர்களுடைய திகைப்பைத் தீர்த்து வைத்தாள்:-"இவளும் நானும் இரட்டைப் பிறவிகள். இவளுடைய பெயர் வானவல்லி. என்னுடைய பெயர் சுரமஞ்சரி. பெயரளவில்தான் எங்களுக்குள் வேற்றுமை. தோற்றத்தில் வேற்றுமை கண்டு பிடிக்க முயல்கிறவர்கள் பெரும்பாலும் ஏமாந்து தான் போவார்கள்" என்று கூறியவாறே இளங்குமரனுக்கும் ஓவியனுக்கும் பக்கத்தில் நின்று கொண்டிருந்த தன் சகோதரி வானவல்லிக்கு அருகில் வந்து அவளுடைய தோளைத்

தழுவினாற் போல் நின்று கொண்டாள் கரமஞ்சரி. அதன் பின்புதான் இளங்குமரனுக்கும், ஓவியனுக்கும் மனத்தில் ஏற்பட்ட குழப்பம் ஒருவாறு நீங்கியது.

'வானவல்லி என்று மின்னல் கொடிக்குப் பெயர். வானில் படரும் ஒளிக் கொடி போல் மின்னல் இலங்குவதால் யாரோ கவியுள்ளம் படைத்தவர்கள் தமிழில் மின்னல் கொடிக்கு இந்தப் பெயர் சூட்டியிருக்கிறார்கள்! ஆனால் விண்மண்டிலத்து மின்னற்கொடியைக் காட்டிலும் இந்த மண் மண்டிலத்துப் பூம்புகார் மின்னற்கொடிக்கு எவ்வளவு இயைபாக இருக்கிறது இப்பெயர்?' என்று தனக்குள் நினைத்தவாறே வானவல்லி என்னும் எட்டிகுமரன் வீட்டு மின்னல்கொடியை ஓவியனின் அழகு வேட்கைமிக்க தன் கண்களால் நன்கு பார்த்தான் மணிமார்பன்.



"நல்ல வேளையாக நீங்கள் வந்தீர்கள் அம்மா! உங்கள் சகோதரியார், 'நீங்கள் யார்? உங்களை யார் இந்த மாளிகைக்குள் வரவிட்டது?' என்று கேள்வி கேட்டு எங்களைவெளியே துரத்துவதற்கு இருந்தார். நீங்கள் வராவிட்டால் அந்தக் காரியத்தைச் செய்தே இருப்பார்" என்று ஓவியன் கரமஞ்சரியைப் பார்த்து நகைத்துக் கொண்டே கூறிய போது, 'பேச்சும் சிரிப்பும் இப்போது வேண்டாதவை! காரியம் நடக்கட்டும்' என்ற குறிப்பும் கடுமையும் தோன்ற அவனை உறுத்துப் பார்த்தான் இளங்குமரன். அந்த வலிய பார்வையே மணிமார்பனை அடக்கியாண்டது. அவன் மௌனமாக மேலே வரையலானான்.

"வானவல்லி! நேற்றுக் கடற்கரையில் அற்புதமாக மற்போர் செய்ததாகக் கூறினேனே, அந்த வீரர் இவர்தான்" என்று தன் சகோதரிக்கு இளங்குமரனைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தாள் கரமஞ்சரி சிறிது நேரத்தில் ஓவியம் நிறைவேறியது. இன்னும் சில நுணுக்கமான வேலைப்பாடுகள் ஓவியத்தில் எஞ்சியிருந்தாலும் 'அவற்றைச் செய்வதற்கு இளங்குமரனும் உடனிருக்க வேண்டியதில்லை' என்று மணிமார்பன் சொல்லி விட்டான்.

ஓவியம் முடிந்ததும் வானவல்லி இளங்குமரனுக்கு முன்னால் வந்து நின்று கொண்டு, "என்னை மன்னிக்க வேண்டும்! என் சகோதரி கரமஞ்சரிதான் உங்களை அழைத்துக் கொண்டு வந்திருக்கிறாள் என்பது தெரியாமல் அப்படிக் கேட்டு விட்டேன். நீங்கள் தவறாக எடுத்துக் கொள்ளக் கூடாது. முன்பே விவரம் தெரிந்திருந்தால் அப்படிக் கேட்டிருக்க மாட்டேன்...." என்று மன்னிப்புக் கேட்டாள்.

இளங்குமரன் வானவல்லியின் குயில் மொழிக் குரலைக் காது கொடுத்துக் கேட்காதவன்போல் வேறெங்கோ பார்த்துக் கொண்டு நின்றான்.

"இதோ பாருங்கள் ஐயா! படம் அற்புதமாக வாய்த்திருக்கிறது"-என்று ஓவியம் வரையப்பெற்ற திரைச் சீலையை உயரத் தூக்கி நிறுத்திக் காணுமாறு செய்தான் மணிமார்பன். இளங்குமரனிடமிருந்து இதற்கும் பதில் இல்லை.

கரமஞ்சரிதான் வியந்து கூறினாள்: "படத்திலிருந்து அப்படியே நீங்கள் இறங்கி நடந்து வருவதுபோல் தத்ரூபமாக இருக்கிறது. ஓவியரை எப்படிப் பாராட்டுவதென்றே தெரியவில்லை."

"பாராட்டு இருக்கட்டும்! அதுவாயிலே சொல்லாகப் பிறந்து செவியிலே ஒலியாக மடிவது. அதனால் வயிறும் நிரம்பாது; வாழ்வும் நிரம்பாது! ஓவியம் நன்றாக இருந்தால் நூறு பொற் கழஞ்சுக்குப் பதில் நூற்றைம்பது பொற் கழஞ்சாகக் கொடுத்து மகிழுங்கள்" என்று அதுவரை பேசாமலிருந்த இளங்குமரன் அவளுக்குத் துணிவாக மறுமொழி கூறினான்.

"கொடுத்து மகிழ்வதைப் பற்றி எங்களுக்குப் பெருமைதான்! ஆனால் அன்போடும், மதிப்போடும் கொடுப்பதை வாங்கி மகிழ்கிற சுபாவம் சிலருக்கு இல்லாமற் போய்விடுகிறதே! அதற்கு என்ன செய்வது?"

முதல் நாள் கடற்கரை நிகழ்ச்சியைக் குறிப்பாகக் கூறிக் குத்திக் காட்டுவது போல் இளங்குமரனைச் சொற்களால் மடக்கினாள் கரமஞ்சரி. இந்த வார்த்தைகளைக் கூறும்போது தன் கழுத்தில் அணிந்திருந்த மணிமாலையைத் தொட்டு விளையாடியது அவள் வலக்கரம். சகோதரியின் சாதுரியமான பேச்சைக் கேட்டு வானவல்லி புன்னகை புரிந்தாள்.

இளங்குமரன் அங்கிருந்து புறப்படச் சித்தமானான். "தம்பி! ஓவியத்தை முடித்துக் கொடுத்து விட்டு உனக்குச் சேர வேண்டிய பொற்கழஞ்சுகளை

# நீங்களே எங்களது கண்ணியமான விருந்தாளிகள்

பி. ஓ. ஏ. ஸி. காமட் ஜெட்-லைனரில் நீங்கள் ஏறின தருணத்திலிருந்தே நீங்கள் எங்களது கண்ணியமான விருந்தாளியாகிவிடுகிறீர்கள். எமது இந்திய ஹோஸ்டஸ் உங்களை ஆசார உபசாரத்துடன் வரவேற்று, பிரயாணத்தின் போது உங்களுக்கு வேண்டிய ஒவ்வொரு தேவைக்கும் கண்ணும் கருத்துமாக வினயமுடன் பணியாற்றுவர். உயர்தர ஐரோப்பிய உணவுகளிலும், முன்னறிவிப்பினால் தயாரிக்கப்படும் பலவகை இந்திய மரக்கறி உணவுகளிலும் உங்களுக்கு எது வேண்டுமோ அதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். ஒரே ஒரு தடவை பி. ஓ. ஏ. ஸி. காமட்டில் செல்லுங்கள்... அதன் சொகுசான சௌகரியத்தையும், வினயமுடன் அளிக்கப்படும் உயர்தர சேவையையும் நீங்கள் என்றுமே மறக்கமாட்டீர்கள்.

**B·O·A·C** பி. ஓ. ஏ. ஸி. உங்களை நன்கு பேணுகிறது.



பிரிட்டிஷ் ஓவர்ஸீஸ் ஏயர்வேய்ஸ் கார்ப்பரேஷன், ஏயர்-இந்தியா மற்றும் குவான்டாஸ் இவர்கள் கூட்டுறவால் நடத்தப்படுகிறது







நான் பலவீனமடைந்து களைப்புற்று வீட்டு வேலைகள் செய்ய முடியாமல் சிரமப் பட்டேன்.

எங்கள் அடுத்த வீட்டு மாமி தினமும் இரண்டு வேளை போர்ன் வீடா அருந் தவேண்டுமென்று சொன் னாள்.







அவர்களுடைய டாக்டரும் அதையேதான் சொன்னா ராம். நானும் அதைக் கடை பிடித்தேன். சக்தியும் பல மும் பெற்றேன்.

இப்பொழுது உடம்பும் முன் போல நன்றாகிவிட்டது.

எல்லாம் போர்ன்-வீடா தந்த சக்தி.




நான் என் வேலைகளை சக்தியுடன் செய்து வருவதற்குக் காரணம்

Cadbury's

# BOURN-VITA

சக்திக்கும் வலிமைக்கும்



வாங்கிக் கொண்டு போய்ச் சேர். நான் வருகிறேன். வாய்ப்பிருந்தால் மறு படியும் எங்காவது சந்திக்கலாம்'' என்று மணிமார்பனிடம் கூறிவிட்டு அவன் தெரிவித்த வணக்கங்களையும், நன்றி களையும் ஏற்றுக் கொண்டு இளங்குமரன் புறப்பட்டபோது,—

"இது இந்திரவிழாக் காலம்! இந்த மாளிகைக்கு வந்தவர்களை விருந்துண் ணச் செய்யாமல் அனுப்பும் வழக்க மில்லை. மாளிகைக்குள் வந்து உணவு முடித்துக்கொண்டு போகலாம்'' என்று சுரமஞ்சரியும், வானவல்லியும் சேர்ந்து அவனை வற்புறுத்தினார்கள்.

"நான்தான் முதலிலேயே சொல்லி விட்டேனே! இந்த மாளிகைக்கு விருந் தினனாக நான் வரவில்லை. ஓர் ஏழை ஓவியனுக்கு உதவ நேர்ந்ததற்காகவே வந்தேன்'' என்று கூறி அதை மறுத்து விட்டு இளங்குமரன் மாளிகையின் பிரதான வாயிலை நோக்கி நடக்க முற் பட்டபோது, "தம்பீ! நீ அப்படிக் கண்டிப்பாக மறுத் துச் சொல்லக் கூடாதப்பா. இருந்து ஒரு வேளை உண்டு விட்டுத்தான் போக வேண் டும்!'' என்று பின்புறமிருந்து இன்னொரு முதிர்ந்த ஆண் குரல் மிடுக்காக ஒலித்தது.

அந்தக் குரலைக் கேட்ட தும் இளங்குமரன் உட்பட எல்லாருமே வியப்போடு திரும்பிப் பார்த்தார்கள். அவர்கள் ஓவியம் வரைந்த இடத்திற்குப் பின்பக்கத்து மரங்களின் அடர்த்தியி லிருந்து உயர்ந்த தோற்ற மும் பருத்த உடலும், வலது காலைச் சாய்த்துச் சாய்த்து நடக்கும் நடையுமாக ஒரு முதியவர் வந்துகொண் டிருந்தார். அவர் கையில் ஊன்றுகோல் ஒன்றும் நடைக்குத் துணையாக இருந்தது.

"அப்பா! நீங்கள் எப்போது இங்கே வந்தீர்கள்? எங்களுக்குத் தெரியவே தெரியாதே'' என்று அவரைக் கண்ட தும் சுரமஞ்சரியும், வானவல்லியும் எதிர் கொண்டு சென்றதிலிருந்து அவர்தான் அந்தப் பெருமாளிகையின் உரிமையாள ரான எட்டிப் பட்டம் பெற்ற செல்வர் என்பது இளங்குமரனுக்கு விளங்கிற்று.

அவர் எதிர்பாராத விதத்தில், எதிர் பாராத நேரத்தில் அங்கே தோன்றிய தற்காகத் தன் திட்டத்தை மாற்றிக் கொள்ள வேண்டியதில்லை என்ற திட மான கருத்துடன் இளங்குமரன் மேலும் வாயிலை நோக்கி நடக்கலானான். ஆனால் அவர் அவனைச் செல்ல விடவில்லை.

"தம்பீ! இவ்வளவு அவசரம் எதற்கு? சற்றே நின்று போகலாமல்லவா?'' என்று கூறிக்கொண்டே அவனருகில் வந்து விட்டார் அவர். சுரமஞ்சரி இளங்குமரனின் மற்போர் வீரத்தைப் புகழ்ந்து சொல்லி அவனைத் தன் தந்தைக்கு அறிமுகம் செய்தாள்.

"நானே இந்தப் பிள்ளையை முன்பு எங்கோ பார்த்திருக்கிறாற் போல் நினை விருக்கிறதம்மா!'' என்று தான் நடந்து கொண்டிருந்த வழியையே மறிக்கிறாற் போல அவர் தனக்கு முன்னால் வந்து நின்றபோது இளங்குமரனால் மேலே நடக்க முடியவில்லை. நின்றான். அவனைத் தலையிலிருந்து கால்வரை நன்றாக உற்றுப் பார்த்தார் சுரமஞ்சரியின் தந்தை. அவனை எங்கோ பார்த்தாற்போல் நினை விருப்பதாக அவர் கூறினாலும் அவரைத் தான் எங்குமே அதற்கு முன் சந்தித்த தாக இளங்குமரனுக்கு நினைவில்லை. அவருடைய பார்வையும், தோற்றமும்



இளங்குமரனைத் தவிர வேறு சாதாரண மானவர்களுக்குப் பயமூட்டியிருக்கும்.

அவன் மேல் இடித்து விடுகிறாற்போல் அருகில் நின்று உற்றுப் பார்த்துக்கொண் டிருந்த அவர், "கருநாவற்பழம் போல் உன் கழுத்தின் வலது பக்கத்துச் சரிவில் எத்தனை அழகான மச்சம் இருக்கிறது, பார்த்தாயா? பிற்காலத்தில் நீ மகா யோகக்காரனாக விளங்கப் போகிறாய் தம்பீ இதுபோல் வலதுபுறத்தில் இவ்வளவு பெரிய மச்சம் எல்லாருக்கும் அமைவது அரிது!'' என்று வியந்து கூறிய வாறே அவனுடைய கண்களையும், முகத்தையும் கூர்ந்து நோக்கினார்.

இளங்குமரன் அவர் கூறியதையும், பார்ப்பதையும் கவனித்தும், சலனமின்றி அமைதியாக நின்றான். ஆனால் அவர் சிரித்துக் கொண்டே அடுத்தாற்போல் கேட்ட கேள்வி அவனுடைய சலன

மின்மையைக் கலேத்தது. அவன் ஆச்சரியமடைந்தான்.

"தம்பீ! அருட்செல்வ முனிவர் நலமாக இருக்கிருர் அல்லவா?" என்று இருந்தாற்போலிருந்து முன்பின் தொடர்பின்றி அவர் கேட்டபோது இளங்குமரன் திகைத்தான். 'முனிவரை இவருக்கு எப்படித் தெரியும்? அப்படியே எந்த வகையிலாவது தெரிந்திருந்தாலும் என்னைக் கண்டவுடனே அதை விசாரிக்காம விருந்து விட்டு இவ்வளவு நேரம் கழித்து நிதானமாக விசாரிப்பது ஏன்?' என்று சிந்தித்துக் குழம்பியது அவன் மனம். முனிவரைப் பற்றி விசாரித்து விட்டு அவர் தன் முகத்தையும் உற்றுப் பார்ப்பதை அவன் காணத் தவறவில்லை.

"என்ன அப்படித் திகைக்கிருய் தம்பீ? என்னுடைய முதுமைக்குள் இந்தப் பெருநகரில் எத்தனை கார் காலங்களையும், வேனிற் காலங்களையும் பார்த்திருப்பேன் தெரியுமா? மனிதர்களைப் பார்த்திருக்கவும் பழகியிருக்கவும் முடியாமலா போயிருக்கும்?" என்று மேலும் சொன்னுர் அவர்.

பின்னும் அவரிடம் பேச்சை வளர்க்க விரும்பாத இளங்குமரன், "முனிவர் நலமாக இருக்கிருர், ஐயா!" என்று கூறிவிட்டு மேலே நடந்தான். என்ன காரணமோ அவர் முகத்தை ஏறிட்டுப் பார்க்கவேவிருப்பமாயில்லை அவனுக்கு.



"தம்பீ! இன்றைக்குத்தான் உனக்கு அவசரம்! இன்னொரு நாள் ஒய்வாக இருக்கும் போது இங்கே வந்து ஒருவேளை உண்டு போக வேண்டும்" என்று அவர் கூறியதையும் சுரமஞ்சரியும், வானவல்லியும் தன்னைப் பின்தொடர்ந்து வருவதையும் பொருட்படுத்தாமல் பிரதான வாயிலைக் கடந்து அகலமான வீதியில் இறங்கி நடந்து சென்றுன் இளங்குமரன். வீதியில் இறங்கும் போது. "பல்லக்கு வருகிறது. ஏறிக்கொண்டு போகலாம்" என்று சுரமஞ்சரி கூவிய குரலுக்காகவும் அவன் நிற்கவில்லை. வேகமாக நடந்தான்.

மிகப் பெரிய அந்த மாளிகையிலிருந்து விலகி வீதியில் வெகு தொலைவு வந்த பின்னும் தன்னை யாரோ கூர்ந்து நோக்கியவாறே பின் தொடர்வது போல் இளங்குமரனுக்கு ஒரு பிரமை உண்டாயிற்று. பின்புறம் யாரோ வந்து கொண்டிருப்பது போல் பிடரியிலும் ஒருணர்வு குறுகுறுத்தது. வீதி திரும்பியதும் திருப்பத்தில் நின்று கொண்டு பின் பக்கம் பார்வையைச் செலுத்திஞன். அவன் சந்தேகப்பட்டது சரியாயிருந்தது. கண்ணெடுத்துப் பார்ப்பதற்கு விகாரமான முகத்தையுடைய ஒற்றைக் கண்ணன் ஒருவன் தயங்கித் தயங்கிப் பின்னுல் வந்துகொண்டிருந்தான். அந்த ஒற்றைக் கண்ணனுக்கும் பின்னுல் தோழிப் பெண் வசந்தமாலேயும் பதுங்கினுற் போல மெல்ல வந்துகொண்டிருந்தாள். அவர்கள் தன்னைத் தொடருகிருர்களா அல்லது தற்செயலாக வருகிருர்களா என்பதனைத் தெரிந்து கொள்வதற்காக நின்றும், வழிமாறிச் சென்றும் சோதனை செய்தான். சந்தேகமில்லாத வகையில் அவர்கள் அவனையே தொடர்வது தெரிந்தது. அவன் நின்ருல் அவர்களும் நின்ருர்கள். அவன் வழி மாறிஞல் அவர்களும் வழிமாறிஞர்கள் 'என்ன வந்தாலும் வரட்டும்! அடுத்து வருகிற வீதித் திருப்பத்தில் மறைந்து நின்று இந்த ஒற்றைக் கண் மனிதனை வழி மடக்கி விசாரிக்க வேண்டியதுதான்' என்றெண்ணிக் கொண்டான் இளங்குமரன் அவ்வாறே செய்வதற்கும் சித்தமாஞன்

ஆனல் அவன் நினைத்தபடி செய்ய முடியவில்லை! ஏனென்ருல் அந்த வீதி திரும்புமிடத்தில், ஏற்கெனவே நானங்காடியிலிருந்து தன்னைத் தேடி வந்து கொண்டிருந்த கதக்கண்ணனையும், பிற நண்பர்களையும் அவன் சந்திக்கும்படி நேர்ந்து விட்டது. (தொடரும்)

# அலென்பரீஸ்
# ரஸ்க்ஸ்

குழந்தைகள் அலென்பரீஸ் ரஸ்க்ஸ் பிஸ்கட்டுகளை சாப்பிடுவதனுடன் கூடத்து மெல்லுவது எப்படி என்பதை கற்றுக் கொள்ளுகிறார்கள். அவை மிருதுவாகவும், மொறமொறப்பாகவும் இருப்பதால், குழந்தைகள் திடமான ஆகாரம் சாப்பிட ஆரம்பிக்க அனுகூலமாக அமைந்துளது.




தயாரிப்பு
தி பிரிட்டானியா பிஸ்கட் கம்பெனி லிமிடெட்
கல்கத்தா • டெல்லி • பம்பாய்

JWTBC4327



**ப**ச்சை ஜிப்பா நீலவானம் பொழிந்து கொண்டிருந்த சூரிய ஒளியிலே தனித்து இனம் கண்டு கொள்ளும்படியாகத் தகதகவெனப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. அந்தப் பெருங்கூட்டத்திலும், அந்தப் பச்சை ஜிப்பா விஜல் மட்டும் யாருடைய கவனத்திலிருந்தும் தப்ப முடியாது. சொக்காயும் தலைப் பாகையும் அணிந்த நாட்டுப்புறத்தார்கள், கோட்டும் தொப்பியும் தரித்த நகரப்புறத்தார்கள், உடலை மறைக்கத் துணியின்றி வெற்றுடம்புடன் காட்சி அளித்த பிச்சைக்காரர்கள், வண்ண வண்ணப் புடவைகள் உடுத்திய பெண்மணிகள் எல்லோரும் கடைகளுக்கிடையே இருந்த குறுகலான பாதை வழியே நெருக்கியடித்துக் கொண்டு நகர்ந்து கொண்டிருந்தார்கள்.

எள்ளுப் போட்டால் எள்ளு விழாதபடி நெரித்த அந்தக் கும்பலில் சேர்ந்து போகிறவர்கள் ஒருவரையொருவர் பிரிந்து விட்டால், திரும்பக் கண்டு பிடித்துச் சேருவது சிரமசாத்தியமான காரியம். ஆனால் அந்தப் பச்சை ஜிப்பாவைப் பொறுத்த வரை அந்தக் கவலை [எழுமே நியாயம்! இல்லை. ஏனெனில் அதை அடையாளம் கண்டு கொள்ளாமல் தவற விடுவதுதான் சிரமசாத்தியமான காரியம். சந்தை இரைச்சல் என்று சொல்வது எவ்வளவு பொருத்தம்! ஒருபுறம் பொருளைப்பற்றிய வர்ணனை; இன்னொரு புறம் விலைபற்றிய பேரம்; மற்றொருபுறம் தர்க்கம்; வேறொருபுறம் கூலிப் பிரச்னை. இவற்றையெல்லாம் மேவிக்கொண்டு தர்மோபதேசகரின் குரல் தனித்து ஒலித்தது. அவர் கொஞ்சம் மூச்சுவிட நிறுத்தினால், இன்னொரு மூலையிலிருந்து சுகாதார இலாகாவைச் சேர்ந்த வண்டி யொன்று மலேரியா, காச நோய், க்ஷயம் ஆகியவற்றைப் பெரிது படுத்திக் கொண்டிருந்தது; கடுகை மலையாக்கி, எள்ளைப் பனையாக்கிப் பயமுறுத்திக் கொண்டிருந்தது.

இத்தனை சலசலப்பிலும் சந்தை இரைச்சலிலும் கூவாமல் கூவி, கவராமல் கவர்ந்து, அழையாமல் அழைத்தது அந்தப் பச்சை ஜிப்பா. எத்தனையோ முயன்றும் ராஜுவினால் அதை வேண்டாம் என்று ஒதுக்கித் தள்ளிவிட

# அவன் செய்த குற்றம்

ஆர். கே. நாராயண்



முடியவில்லை. 'வருந்தி அழைத்தாலும் வாராத வாரா' என்பதுபோல் அலட்சியம் செய்யும் குணம் ராஜுவுக்கு என்றுமே இருந்ததில்லை. அவன் அந்தக் கும்பலிலிருந்து கொஞ்சம் விலகியே இருந்தான். முழுக்க முழுக்க விலகி யிருப்பது என்பதும் அவனால் முடியாத காரியம். அதேபோல பகிரங்கமாகக் கூட்டத்தோடு கலந்து கொள்வது என்பதும் அவனால் ஆகாத காரியம். அவன் எங்கு இருந்தாலும், எங்கு சென்றாலும் போலீஸ்காரர்களின் பார்வையில் பட்டுவிடக் கூடாதே என்ற பயம் அவனை வாட்டிக் கொண்டே இருக்கும். அன்று அவன் முழங்கால் தெரியும்படி மூலைக்கச்சம் கட்டிக் கொண்டிருந்தான். சட்டை ஏதும் அணியவில்லை. தலையிலே பெரிய முண்டாக ஒன்று சுற்றியிருந்தான். அது முகத்தையே மூடி மறைத்தது. பார்ப்பவர்கள் தன்னைப் பட்டிக்காட்டிலிருந்து வந்த குடியானவன் என்று எண்ணுவார்கள் என்றே அவன் நம்பினான்.

அவன் ஒரு கடைக்குப் பின்னே, விசியெறியப் பட்டிருந்த வாழைக் கட்டைகளின்மீது உட்கார்ந்து கொண்டு, போய் வரும் ஜனத்திரளைக் கவனிக்கலானான். அவன் எதைக் கவனித்தாலும், உன்னிப்பாகவேதான் கவனிப்பான். அதுவே அவன் தொழில் முறையுங்கூட. சுபாவமாகவே அவன் சோம்பேறி. ஆனால் கும்பலைக் கண்குத்திப் பாம்பாகக் கவனிப்பதிலும், பிறர் பையில் கைபோடுவதிலும் அவன் ஆற்றல் பெற்றிருந்தான். அவன் மேற்கொண்டிருந்த அந்தத் தொழில் பெரிய தொரு சூதாட்டம் என்பதில் ஐயம் இல்லை. சிலசமயம் அவனது துணிச்சலுக்கேற்ற பலன் கிட்டுவதில்லை. பைக்குள் போய் வரும் விரல்கள் பத்திரமாகத் திரும்பி வந்தாலே பெரும் பாக்கியம் என்றுகூடத் தோன்றுவதுண்டு. சில சமயம் அவன் கையோடு பவுண்டன் பேனா வருவதுண்டு. நகராண்மைக் கழகத்துக்குப் பின்னால் இருந்து கொண்டு அதை வாங்குபவன், நான்கணா தரக்கூட மீன மேஷம் பார்ப்பான். அதோடு அந்தப் பேனாவின் உதவியைக்கொண்டே அவனைக் கண்டு பிடித்து விடக்கூடும் என்ற பீதி வேறு இருந்து கொண்டே இருக்கும். ராஜு ஒரு நாள் தனக்குத்தானே, 'பேனாவை மட்டும் தொடுவதில்லை. அப்படி யாராவது தட்டில் வைத்து வெற்றிலை, பாக்கு, பழம், தட்சிணையோடு கொடுத்தால்கூடக் கண் நிமிர்ந்தும் பார்ப்பதில்லை' என்று உறுதி பூண்டான். இந்தப் பேனா வியாபாரமே ரொம்பத் தொல்லை தரும் வியாபாரம். மசி கசியும், ஒழுகும்; நிப்பு குத்தும். அதை வாங்கிக் கொள்பவன் இன்னும் என்ன என்னவெல்லாம் கோளாறுகள் சொல்வானோ. ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம். கடிகாரங்கள்கூடப் பேனாவுக்கு வனப்பந்தான்.

ராஜுவுக்கு ரொம்பப் பிடித்தமான பொருள், மெத்தப் பருமனான பர்ஸ். எங்கேயாவது பார்த்து விட்டால், அதை அவன் எடுத்துக் கொள்ளும் பணிக்கே அலாதிதான். அதில் உள்ள பணத்தை எடுத்துக் கொண்டு, அதைத் தூர எறிந்து விட்டு, அன்றைய வேலையை நன்றாகச் செய்தோம் என்ற திருப்தியுடன் வீட்டுக்குப் போவான். முகத்தை ஒரு செம்பு நீர் விட்டுக் கழுவித் தலையை வாரிவிட்டுக் கொள்ளுவான். வீட்டுப்படி இறங்கி நாகரிக மனிதனாக உலாவப் போகுமுன், குழந்தைகளுக்கு மிட்டாய், புஸ்தகம், ஸ்லேட்டு என்று வாங்குவான். ஆடிக்கொரு நாள், ஆவணிக்கொரு நாள் தன் மனைவிக்கும் நல்ல ரவிக்கைச் சீட்டியாக வாங்கி வருவான். அவனுக்கு எப்பொழுதுமே தன் மனைவியைக் கண்டால் அவ்வளவாக ஆகாது. அவன் எப்பொழுதாவது கையில் கொஞ்சம் அதிகமாகப் பணம் புரள வீட்டுக்குச் சென்றால், முன் ஜாக்கிரதையாக உறையில் இட்டுக் கூரை யோட்டுக்குள் மறைத்து வைக்கும்படி ஆகும். இல்லாவிட்டால் அவள் இல்லாத பல கேள்விகள் கேட்டு அவனைத் தொணதொணத்து எடுத்து விடுவாள். அவன் திருந்தி விட்டான், நல்ல முறையில் தாருத் தொகையாகச் சம்பாதித்துள்ளான் என்று காணவே அவள் பிரியப்பட்டாள். தாருத் தொகை எப்படிக் கிடைக்கிறது. எங்கு கிடைத்தது என்றெல்லாம் கேட்டு அவள் தன்னை அலட்டிக் கொள்வ

முன்னெல்லாம் சிறியதாக எதையுமே செய்ததில்லை. அஜந்தா, புத்த கயா, மைசூர் குகைக்கோயில்களைப் பாருங்கள். முன்னெல்லாம் மனம் விரிவாக இருந்தது. அவகாசமும் வேலை செய்யச் சக்தியும் இருந்தன. இப்பொழுது நாம் ரொம்பச் சுருசுருப்பா யிருக்கிறோம். ஆனால் செய்வதென்னமோ ஒன்றுமில்லை. செய்ய முயற்சி செய்கிறோம். ஆனால் சாதனை சிறியதா யிருக்கிறது. —ராஜாஜி

இல்லை. தரகிலே வந்த சம்பாத்தியம் என்றாலே அது தனி என்று மகிழ்ந்து வந்தாள்.

* * *

ராஜு சட்டென்று வாழைக் கட்டை மீதிருந்து குதித்துப் பச்சை ஜிப்பாவைப் பின் தொடர்ந்தான். ஆனால் மூன்றடி பின் தங்கியே நடந்தான். அது மிக நேர்த்தியான, கணக்கான தூரம்; இயற்கை உணர்வும் அநுபவமும் தேடித் தந்த அருஞ் செல்வம். அந்தத் தூரம், முன் செல்லும் ஆசாமியின் கை பர்ஸுக்குப் போய் வருவதை மறைக்காது. அதோடு பார்ப்போருக்குச் சந்தேகத்தை எழுப்பித் தொல்லை தரும் கிட்டமும் இல்லை. தூரமும் இல்லாமல் கிட்டமும் இல்லாமல், ஆகா! என்ன கணக்கு! வேடன் தன் வேட்டையின் அடிச்சுவட்டைப் பின்பற்றிப் போனாலும் உயிருக்கு ஊறு நேராவண்ணம் பத்திரமாக வீடு திரும்ப வேண்டும் என்று கணக்கிட்டு நடப்பானே, அப்படி இருந்தது அவன் நடந்து கொண்ட முறை. ஆனால் இவ்வேடனின் வேலை முறை கொஞ்சம் சிக்கலானது. காட்டிலே வேட்டையாடச் செல்பவன், தான் தொடர்ந்து செல்லும் பிராணியை ஒரே போடாகப் போட்டு அடித்து வீழ்த்திவிட்டால் தனக்கு வெற்றி கிட்டி விட்டதாக முடிவு கட்டிவிடலாம். ஆனால் இங்கோ? உயிரை வைத்துத் தோலை உரிப்பது என்பார்களே, அதுபோல, இன்னொருவரின் உடலைப் புண் படுத்தாமலே, உள்ள பொருளைக் கவர்ந்து விட வேண்டும்.

ராஜு பொறுமையாகக் காத்திருந்தான். பச்சை ஜிப்பா தேங்காய்க் கடையில் இளநீர் அருந்த நீண்ட நேரத்தைச் செலவிடவே, அவனும் ஏதோ பாய்ச் சுருள்களைப் பார்வை யிடுபவன்போலப் பொழுதை ஓட்டினான். அவன் இளநீர்க் கடையில் நின்றதைப் பார்த்தால், அங்கு விட்டு நகரவே மாட்டானோ என்று கூடத் தோன்றியது. இளநீரை யெல்லாம் குடித்து முடித்தும், அவன் அந்தத் தேங்காயைப் பிளந்து, அதற்குள் இருக்கும் வழுக்கையைக் கடைக்காரன் கத்தியால் சீறித் தரும் வரை காத்திருப்பான் போலத் தோன்றியது. அவன் நினைத்தது போலவே, தேங்காய் வழுக்கை அவன் வாய்க்குள் விழுந்து மறைவதைக் கண்டபொழுது, ராஜுவுக்கும் நாக்கிலே நீர் ஊறிற்று. ஊறி வந்த அந்த ஆசையை வெகு சிரமப்பட்டு அடக்கிக் கொண்டான் ராஜு. ஒருவன் தன் தொழிலிலே ஈடுபட்டிருக்கும்பொழுது, இன்னொருவன் எதையாவது தின்பதிலும் அருந்துவதிலும் பொழுதைச் செலவிட்டால், அது நியாயமா? காரியத்தில் கண்ணுயிருப்பவன் அதைக் கண்ணுற்றுத் தன் காரியத்தில் தவறி விடலாம். அல்லது அவன் கைக்கு எட்டிய பழம் வாய்க்குக் கிட்டாமல் போய்விடலாம்.

பச்சை ஜிப்பாக்காரன் தன் பையிலிருந்து கருத்த பர்ஸ் ஒன்றை எடுப்பதைப் பார்த்தான் ராஜு. தேங்காய் வியாபாரியுடன் இளநீரின் விலைபற்றிப் பேரம் பேசுவதையும் கண்டான். அப்பப்பா! என்ன கனத்த கரகரப்பான குரல்! ராஜுவின் கவனத்தைக் குலைத்தது அது. புலி உறுமுவதுபோல் அல்லவா உறுமுகிறான்!

காட்டிலே வேட்டையாடச் சென்று பழக்கப்பட்டவன் உள்ளம் துணுக்குற திடீரெனப் புலி உறுமுகிறதே என்பதற்காகப் பயந்து பின் அடி எடுத்து வைப்பானா? பச்சை ஜிப்பா கடைக்காரனுடன் நடந்து கொண்ட முறை ராஜுவுக்குப் பிடிக்கவில்லை. அப்பன்! என்ன கஞ்சத்தனம்! காசிடம் இத்தனை ஆசையா? இம்மாதிரிக் காசாசை கொண்டவர்கள் குறுகிய உள்ளம் படைத்தவர்களா யிருப்பார்கள்; பெருந் தொல்லைக்காரர்களா யிருப்பார்கள்! பர்ஸ் தொலைந்து விட்டால் ஊரைக் கூட்டி விடுவார்கள். குய்யோ முறையோ என்று கூக்குரலிட்டு!... அப்பாடா! பச்சை ஜிப்பாக்காரன் ஒரு வழியாக இடம் பெயர்ந்து நகர்ந்தான். பறக்கும் வண்ண வண்ணப் பலூன் விற்கும் கடைக்கெதிரே போய் நின்றான். கடைக்காரனுடன் முடிவில்லா விவாதம் தொடங்கி முடித்துக் கொண்டு அவன் ஒரு பலூன் வாங்கினான். அவனுடைய அற்பத்தனத்துக்கு இன்னுமோர் அத்தாட்சி அது! "இது ஒரு தாயில்லாக் குழந்தைக்கு அப்பா! நான் கட்டாயம் வாங்கி வருவதாகச் சொல்லி விட்டேன். நான் வீட்டுக்குப் போவதற்கு முன்னால் இது உடைந்து போனாலும் கெட்டுப் போனாலும், அவன் இரவு முழுவதும் அழுது தீர்த்துவிடுவான். அவன் முகம் சிணுங்குவதை நான் சகிக்கமாட்டேன்!" என்றான் அவன்.

அவன் ஒரு குறுகிய நடைப்பு வழியே நடந்து கொண்டிருந்த பொழுது, ராஜுவுக்கு அவன் எதிர்பார்த்திருந்த அந்த அரிய வாய்ப்பு கிடைத்தது. மகாத்மா காந்தி பத்திரிகை படிப்பதுபோல சமைக்கப்பட்டிருந்த மெழுகுச் சிலையைக் காண்பதற்காக மக்கள் முண்டியடித்து முன்னேறிக் கொண்டிருந்தார்கள். கிடைத்தற்கரிய வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளத் தவறவில்லை ராஜு.

* * *

பதினைந்து நிமிஷங்களுக்குப் பிறகு ராஜு அந்தப் பர்ஸுக்குள் இருந்ததைச் சோதனையிட்டுக் கொண்டிருந்தான். உபயோகத்திலிராத பாழுங் கிணறு ஒன்றுக்குப் பின்னால் போய்த் தனியாக அமர்ந்து கொண்டான். அதன் இடிந்துபோன கைப்பிடிச் சுவர் அவன் அலுவல்களுக்கு நேர்த்தியான மறைவிடமாக

கல்கெமிகோவின்

# காந்தரால்

நறுமணமுள்ள காந்தரிடைன் ஹேர் ஆயில்




கேசத்திற்கும் சிரசிற்கும் நன்மை பயக்கக்கூடிய ஆலிவ் எண்ணெய் கலக்கப்பட்டுள்ள கூந்தல் தைலம் இது ஒன்றே. பேரழகி கிளியோபாட்ராவின் அடர்ந்த கூந்தல் வளப்பின் ரகசியத்துக்குக் காரணமாயிருந்ததும் ஆலிவ் எண்ணெய்தான்!

கல்கத்தா கெமிகல் கோ. லிட்.,
கல்கத்தா - 29.

CAR-TR-4

தென் இந்தியா ஆபீஸ்: 5/149, பிராட்வே, மதராஸ் - 1

---

# "மூலம் தீராத வினையன்று"

## பாதிக்கப்பட்டவர்கள் கூறுகிறார்கள்-புதிய நிவாரணி அரிப்பு, எரிச்சல் மற்றும் வலியிலிருந்து குணமளிப்பதுடன் மூலத்தையும் சுருக்குகிறது.



உலகப் பிரசித்தமான ஆராய்ச்சிக் கூடமொன்று மூலத்தைச் சுருக்குவதுடன், வலியற்றமுறையில் குணப்படுத்தக்கூடிய புதிய பொருள் ஒன்றைக் கண்டு பிடித்திருக்கிறது. அப்பொருள் சில நிமிடங்களிலேயே அரிப்பையும் வலியையும் போக்குவதுடன் பாதிக்கப்பட்ட தசைநார்களையும் குணப்படுத்துகிறது. உண்மையாகவே, சுருக்கமும் ஏற்படுகிறது. டாக்டர்களின் மேற்பார்வையில் நடத்தப்பட்ட பரிசோதனைகளும்-10, 20 வருஷங்களான கேஸ்களில்கூட-இதை நிரூபித்தன. மேலும் வியக்கத்தக்கதென்னவென்றால், இந்த நல்ல முன்னேற்றம் பல மாதங்களுக்கு நீடித்திருந்தது. உண்மையாகவே பாதிக்கப்பட்டவர்கள், இதனால் அடைந்த பூரணக் குணத்தைக் கண்டு வியந்து "மூலம் தீராத வினையன்று" எனக்கூறினார்கள். இவ்வளவு பலன்களும், எந்த விதமான போதை தரும் மருந்துகளோ, அல்லது துவர்ப்பு பொருள்களோ, மயக்க மருந்துகளோ, உபயோகிக்காமல் அடையப் பெற்றவை. இரகசியம் என்னவென்றால், இந்த விசேஷமான புதிய நிவாரணி (பயோ-டைன்*) புண்ணான இடத்தைச் சீக்கிரத்திலேயே குணப்படுத்தி, மறுபடியும் ஆரோக்கியமான தசை துரிதமாக வளர உதவுகிறது. இப்பொருள் களிம்பு வடிவத்தில் ப்ரிப்பரேஷன் H* என்ற பெயரில் கிடைக்கிறது. உண்மையாகவே மூலத்தைச் சுருக்குவதுடன்-ப்ரிப்பரேஷன் H*, வழவழப்பாக்குவதன் மூலம் கழிவுப் பொருள் வெளியேறும் போதுள்ள வலியைக் குறைக்கிறது. அது மூலத்தின் முக்கிய காரணமான இரணம் பரவுவதையும் தடுக்கிறது.

இப்பொழுது இந்தியாவில் தயாரிப்பாளர்கள்:

ஜாப்ரே மானேர்ஸ் & கோ (பி) லிட்.

டிரேட்மார்க் உரிமையாளர்கள்:

ஒயிட்ஹால் லாபரட்டரீஸ், U.S.A.

**ப்ரிப்பரேஷன் H***

களிம்பு

* டிரேட் மார்க்,

அமைந்தது. அந்தப் பர்ஸில் பத்து ரூபாய் நாணயமாகவும் இருபது ரூபாய் நோட்டாகவும், சில அணுக்காசுகள் நிக்கலிலும் இருந்தன. ராஜு அந்த அணுக் காசுகளை எடுத்து மடியில் செருகிக் கொண்டான். 'யாராவது பிச்சைக்காரர்களுக்குப் போட்டு விடலாம் இவற்றை' என்று அவன் தாராள மனத்துக்குத் தோன்றியது. பொருட் காட்சியின் நுழைவிலே குருடன் ஒருவன் 'கண்ணில்லாக் கபோதி ஐயா' என்று கதறிக் கொண்டிருந்தான். யாருமே அவனை இலட்சியம் செய்யவில்லை என்பது அவனுக்கு நினைவு வந்தது.

இந்த நாட்களில் மக்களுக்கு அநுதாப குணம் என்பது அறவே மரத்துப் போய் விட்டது போலும்! அவன் தன் முண்டாகத் துணியை எடுத்து முப்பது ரூபாயை ஒரு மூலையில் முடிபோட்டுப் பழைய படியே முண்டாசைக் கட்டிக் கொண்டான். மாதத்தின் மிகுதி நாட்களை ஓட்ட அது போதுமெனத் தோன்றியது. பதினைந்து நாட்களுக்காவது அவன் நல்ல படியாக உண்டு உடுத்து வாழலாம். மனைவியையும் குழந்தைகளையும் ஒரு படத்துக்குக்கூட அழைத்துச் செல்லலாம்.

அப்பொழுது அவன் கைக்குள்ளே அந்தப் பர்ஸ் முடங்கிக் கிடந்தது. அதைத் தலையைச் சுற்றிக் கிணற்றுக்குள் வீசியெறிந்து விட்டுக் கையைத் தட்டிக் கொண்டு, ராஜா மாதிரி மிடுக்காக அவன் புறப்பட்டுவிட வேண்டியதுதான். கிணற்றுக்குள்ளே எட்டிப் பார்த்தான். அடி மட்டத்திலே ஏதோ கொஞ்சம் தண்ணீர் இருந்தது. பர்ஸ் மிதக்கலாமே! மிதக்கும் பர்ஸ், உலகத்தில் இல்லாத தொல்லைகளையெல்லாம் கொணர்ந்து சேர்க்கக்கூடுமே! விட்டெறிவதற்கு முன்னால், அதில் கூழாங்கற்களை இட்டு நிரப்பலாமே என்று எண்ணிப் பர்ஸைத் திறந்தான். அதன் ஒரு புறத்து அறையிலே பலூன் ஒன்று மடித்துச் செருகி வைக்கப்பட்டிருப்பதைக் கண்டான். 'அட! இது அவன் வாங்கியதல்லவா?' தாயில்லாக் குழந்தையைப் பற்றி அவன் பேசியதெல்லாம் ராஜுவுக்கு நினைவு வந்தது. 'சுத்த மடையன்! இதைக் கொண்டு போய்ப் பர்ஸுக்குள் வைத்துக் கொண்டிருக்கிறானே!' என்று உள்ளம் கூறியதை உதடுகள் எதிரொலித்தன. 'என்ன அஜாக்கிரதை இந்தப் பெற்றோர்களுக்கு? குழந்தைகளை இப்படியா அல்லல்களுக்கு உள்ளாக்குவது?'—என்று மனத்துள் கடிந்து கொண்டான். ஒரு கணம் அவன் கண்ணெதிரே சலனப்படம் ஒன்று ஓடியது. புலி போல் உறுமும் தந்தை வீடு திரும்புகிறான். வாங்கி வருவதாக அவன் சொல்லிச் சென்ற பலூனை எதிர்பார்த்து வாசல் வாசற்படியிலேயே தாயில்லாக் குழந்தை அவனுக்காகக் காத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறது. அவனோ பர்ஸ் பறிபோன ஆத்திரத்தோடு திரும்புகிறான்...அப்பப்பா! நினைத்துப் பார்க்கவே நெஞ்சம் பதறுகிறதே!

தாயில்லாக் குழந்தையின் ஏமாற்றத்தை எண்ணிப் பார்க்கவே, ராஜுவுக்கு இதயம் விம்மி வெடித்துவிடும் போலாகி விட்டது. அந்தக் குழந்தையைத் தேற்றுவார் யாருமே கிடையாது. பலூன் வாங்கி வராததால் ஏமாற்றமுற்ற அந்தக் குழந்தை நீண்ட நேரம் அழுமேயானால், அந்தக் கிராதகன் கண் — மண் தெரியாமல் அடித்தாலும் அடித்துவிடுவான். அந்தப் பச்சை ஜிப்பாக்காரனைப் பார்த்தால், சின்னஞ் சிறு கிள்ளைகளின் மதலை மொழியைப் புரிந்துகொள்ளும் ஆற்றல் பெற்றவனாகத் தோன்றவில்லை. அந்தக் குழந்தையை எண்ணி ராஜுவின் மனம் பாகாக உருகியது. ஒருவேளை அவனுடைய இரண்டாவது மகனையொத்தவனாக இருக்கலாமோ அந்தச் சிறுவன்? அந்தச் சிறுவனின் தாயார் இறந்ததுபோல் அவன் மனைவியும் இறந்து விட்டால்...

தனிப்பட்ட முறையில் பார்க்கப்போனால் அவனுக்கு அதனால் பல அநுகூலங்கள்கூட ஏற்படலாம். முதலாவதாகப் பணம் — காசைக்கூரையில் ஒளித்து வைக்கவேண்டிய அவசியம் ஏற்படாதல்லவா?

இந்தத் தகாத எண்ணம் நமக்கு எதற்கு என்று அதை மனத்திலிருந்து கிள்ளியெறிய முயன்றான். அவன் மனைவி இறந்துவிட்டால், அவனுக்கு வேண்டாத பல தொல்லைகளும் துயரங்களும் வந்து சேரும். சின்னஞ் சிறு குழந்தைகளைச் சமாதானப்படுத்தி வைத்துக் கொள்வதற்குள் அவனுக்குப் போதும், போதுமென்றாகிவிடும். புத்தியே பேதலித்து விடக் கூடும். அவனது விரோதிக்குக்கூட அந்த அவல நிலை வேண்டாம். அந்தத் தாயில்லாக் குழந்தைக்கு எப்படியாவது இந்தப் பலூன் கிடைத்துவிட வேண்டும் என்று ராஜு முடிவு செய்தான். ஆனால் சேர்ப்பிப்பது எப்படி? இடித்த கைப்பிடிச் சுவரின் இடுக்கு வழியே தூரத்திலிருந்த கூட்டத்தை எட்டிப் பார்த்தான். பலூனைக் கொண்டு போய்த் திருப்பிக் கொடுக்க முடியாது. வெற்று மணிபர்ஸில் பழைய படியே வைத்து முடியுமானால் அவன் சட்டைப் பைக்குள் போட்டு விடலாம்.

பச்சை ஜிப்பாக்காரன் அங்கே நடைபெற்றுக் கொண்டிருந்த தர்மோபதேசத்தைக் கேட்டுக்கொண்டிருந்தான். பிரசங்கி தாம் எடுத்துக் கொண்ட பொருளைப் பற்றிக் காரசாரமாகப் பேசிக் கொண்டிருந்தார். அரை வட்டம் ஒன்று 'எங்கே உன் கடவுள்?' என்று கேட்கவே, அங்கே பேரிரைச்சல்

> பிறர் என்னை வைதால், நானும் அவர்களை வைய வேண்டுமென்ற அவசியம் கிடையாது. மற்றவர்கள் பொறுமையற்றவர்களாயிருந்தால், அது தவறு என்று குறை கூறுவது நமது கடமை என்று நாம் எண்ணிவிடலாகாது. பிறர் பொறுமையில்லாமல் இருந்தால் என்ன? நாம் பொறுமையோடிருப்போம். — ராஜாஜி

எழுந்தது. ராஜு பச்சை ஜிப்பாவை அணுகி நின்று கொண்டான். பலூன் மட்டுமே இணைக்கப்பட்டிருந்த பர்ஸ் அவன் கையில் இருந்தது. அவன் அதை அந்தப் பச்சை ஜிப்பாவின் பையில் மெதுவாகப் போட்டான்.

அடுத்த கணமே ராஜுவுக்குத் தன் தவறு விளங்கிவிட்டது. பச்சை ஜிப்பாக்காரன் அவன் கையை இறுகப் பற்றிக் கொண்டு, 'திருடன், திருடன்!'' என்று உரக்கக் கத்தி விட்டான். தர்மோபதேசம் கேட்டுக் கொண்டிருந்தவர்கள் அதன் கவலையை மறந்தனர். எல்லோருடைய கவனமும் ராஜுவின் பக்கம் திரும்பியது. அநாவசியமாகத் தன்னை அவமானப் படுத்துவதுபோலத் திமிறி அவன் தன்னைத் விடுவித்துக் கொள்ள முயன்று கொண்டிருந்தான். 'என்னை விடு' என்றும் கூவினான். அவன் என்ன செய்யப்போகிறான் என்பதை ராஜு அறிவதற்கு முன்னதாகவே, பச்சை ஜிப்பாக்காரன் கையை ஓங்கிக் கன்னத்தில் பலமாக ஓர் அறை விட்டான். கண்ணெதிரே கும்மிருட்டுச் சூழ்ந்தது. அரைக் கணம் ராஜுவின் பொறி கலங்கியது. 'நாம் யார், எங்கு இருக்கிறோம்?' என்பதை யெல்லாம் மறந்தான். இருள்பனி மூட்டம் பிரிந்து அவன் மீண்டும் தன் பார்வையைப் பெற்ற பொழுது, தன்னெதிரே முதன் முதலாகப் பார்த்தது பச்சை ஜிப்பாக்காரனைத் தான். தொடுவானத்தையும் தாண்டிக் கொண்டு தூர நிற்பதுபோன்று தோற்றினான் அவன். அவன் கைகள் மீண்டும் அடிக்கத் தயாராக எழும்பியிருந்தன. அதைக் கண்டதும் ராஜு வெல வெலத்துப் போய்த் தலைகுனிந்தான்.

''நான்...நான் உன் பர்ஸைத் திரும்பவும் உன் பைக்குள் போடத்தான் முயன்றேன்!'' என்றான். அதைக் கேட்டதும் பச்சை ஜிப்பாக்காரன், பற்களைக் காட்டிப் பேயெனக் கட கடவென்று சிரித்துக் கைகளை நறநறவென்று நெறித்தான். கூட்டம் பேரொலி எழுப்பிக் கெக்கெலி கொட்டி நகைத்து அவனைத் துன்புறுத்தலாயிற்று. சிலர் மீண்டும் அவன் தலையில் தங்கள் பலம் கொண்ட மட்டிலும் ஓங்கிச் சாத்தினார்கள்.

* * *

நீதிபதிக்கு முன்னிலையிலும்கூட ராஜு, 'நான் பர்ஸைத் திரும்பவும் பைக்குள் போடத்தான் முயன்றேன்' என்று திரும்பத் திரும்ப அதே பல்லவியைத்தான் பாடினான். கேட்ட யாவரும் சிரித்தார்கள். அது போலீஸ் உலகத்திலே நிரந்தர நகைச்சுவைத் துணுக்காகக்கூட நிலைத்து விட்டது. ராஜுவின் மனைவி அவனைச் சிறைச்சாலையில் பார்க்க வந்தாள். 'எங்களைத் தலைதூக்க வொட்டாமல் அவமானப்படுத்தி விட்டாயே!' என்று கூறி அழுது தீர்த்து விட்டாள்.

.''ஏன்? நான் திரும்பவும் போடத்தானே முயன்றேன்!'' — ராஜு அதே பதிலை அவளுக்கும் அமைதியாகச் சொன்னான்.

அவன் பதினெட்டு மாதங்கள் சிறைவாசம் செய்துவிட்டு மீண்டும் புல்வுலகுக்குத் திரும்பி வந்தான். என்ன செய்வது, ஏது செய்வது என்று ஒன்றும் புரியாமல் கண்ணைக் கட்டிக் காட்டில் விடப் பட்டவனைத்தான் வந்தான். ஆனால் தனக்குள் ஒன்றே ஒன்றை மட்டும் சொல்லிக் கொண்டான். 'என்றைக்காவது எதையாவது நான் எடுக்க நேர்ந்தால், அதைத் திரும்பவும் போடக் கூடாது. இதை மட்டும் நான் உறுதியாகக் கடைப்பிடித்தே ஆக வேண்டும்' என்பதுதான் அந்த ஒன்றே ஒன்று. அன்று முதல் அவன் கடவுள் தனக்கு ஒரே ஒரு விதத்தில் மட்டும் சாமர்த்தியத்தை அளித்திருப்பதாக நம்பினான். தன் விரல்கள்,—எடுக்கும் பழக்கம் உள்ள விரல்கள் — எடுத்தது எதையும் திருப்பப் போடுவதற்காக ஏற்பட்டவை அல்ல என்பதே அவன் முடிவாகக் கொண்ட நம்பிக்கை.

தமிழாக்கம்: ரா. வீ.

# டினோபால்

## பெண்ணுடன் நட்பு செய்து கொள்ளுங்கள்

நீங்கள் இந்த பெண்ணை எங்கும் பார்க்கலாம்–கவர்ச்சியாகவும், எடுப்பாகவும் உள்ள புதிய டினோபால் பிவிஎன் கார்ட்டனின் மேல் பாகத்தில் இந்த பெண்ணை பார்க்கலாம். டினோபால் பிவிஎன் காட்டன் மற்றும் ரேயான் வெள்ளைத் துணிகளை வெள்ளை வெளேரென்று ஆக்குகிறது.

இந்த பெண்ணை நீங்கள் பரிபூர்ணமாக நம்பலாம். ஏனெனில் நீங்கள் போலிகளை வாங்குவதை தடுக்க, கெய்கி ட்ரேட் மார்க் ரெஜிஸ்டர்டு செய்யப்பட்டது.

இந்த பெண்ணை நீங்கள் நிச்சயமாக நம்பலாம்–ஏனெனில் 25 கிராம்கள் நிறையுள்ள டினோபால் கொண்ட பளிங்கு போன்ற பிளாஸ்டிக் டப்பா பில்பர்-ப்ரூப் சீலுடன் கூடியது.






## டினோபால் பிவிஎன்

வெள்ளைத் துணிகளை மிக வெண்மையாக்குகிறது

டினோபால் என்ற வார்த்தை ஜே. ஆர் கெய்கி எஸ். ஏ. பாஸ்ல், ஸ்விட்ஸர்லாந்து என்பவர்களுடைய ரெஜிஸ்டர்டு ட்ரேட் மார்க்காகும்.

தயாரிப்பாளர்கள்: சுஹ்ரித் கெய்கி பிரைவேட் லிமிடெட், வடோதரா. பரோடா.

பூரண விநியோகஸ்தர்கள்: சுஹ்ரித் கெய்கி டிரேடிங் பிரைவேட் லிட்., த. பெ. 965, பம்பாய்-1

AML SH/A'S-SC-12A

சித்திரை மாதத்துக் கடுங்கோடை!

தலைக்கு மேல் வந்த கதிரோனின் கொடுமை தாளாமல் உலகத்து ஜீவராசிகள் அனல் புழுவாகத் துடியாய்த் துடித்துக் கொண்டிருந்தன.

வீட்டுக்குள் காலடி எடுத்து வைத்ததும், கொதிக்கும் மண்ணில் பாதங்களைப் புதைத்து விட்டது போல் குதித்தார், கூச்சல் போட்டார் சிவப்பிரகாசம். உடல் தெப்பமாக நனைந்து விட்டது.

"ஏன் தொண்டை கிழியக் கத்துறீங்க? பசிக்குதுன்னு சொல்லுங்க. இலை போடறேன்." அரைத் தூக்கத்தில் ஆடிக் கொண்டிருந்த அவர் மனைவி எழுந்து விட்டாள்.

"இதோ பாரு, உன் திருக்குமாரன் செய்திருக்கிற வேலையை..." என்றவர் கையிலிருந்த கடிதத்தை அவள் முன் வீசி எறிந்தார்.

"அவன் உங்களுக்கும் பிள்ளைதானே?" என்றவள் கடிதத்தைக் குனிந்து எடுத்தாள். பாவம், பள்ளிக்கூடத்து நிழலில் கூட ஒதுங்காத அவளுக்கு எழுத்து வாசனையா தெரியப் போகிறது?

"என்ன செய்திருக்கான், அதைச் சொல்லுங்க முதல்லே?"

"அவனுக்கு ஒருத்தி காதல் கடிதம் எழுதியிருக்கா?"

"காதல் கடிதமா?" பார்வதியின் முகத்துச் சுருக்கங்கள் ஆச்சரியத்தால் விரிந்தன. புருவங்கள் பாதி நெற்றியை எட்டிப் பிடித்து விட்டன.

"எழுதினவ யாரு?" பார்வதியின் குரல் தாழ்ந்து விட்டது.

"கோமதிக்கு மகள்தான்."

"உங்க தங்கச்சி பெண்ணு?"

"தங்கச்சியா? அவளைத் தலை முழுகி வருஷம் பத்தாகப் போவுது. பயல் வரட்டும்" என்று உறுமிக் கொண்டார்.

"அவன் வந்ததும் 'டாம், டூம்'னு குதிக்காதீங்க. விடலைப் பருவம். பக்குவமா சொல்லணும்!"

"ம்...எனக்கு ஒன்றும் நீ உபதேசம் பண்ணவேண்டாம். உன் வேலையைப் போய்ப் பாரு. துரை இப்போ வருகிற நேரம்தான். இலையைப் போட்டு வை" என்றவர் வார்த்தைகளில் ஏளனத்தை அள்ளி வீசினார்.

பார்வதி உள்ளே போய்விட்டாள்.

சிவப்பிரகாசம் வயற் பக்கம் போய்விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தபோது தபால்காரர் எதிரே வந்தார்.

"உங்க பையனைப் பஞ்சாயத்து ஆபீஸிலே போய்ப் பார்த்தேன். காணல்லே. அவருக்கு ஒரு கடுதாசி வந்திருக்கு. அதுக்கு ஸ்டாம்பு ஒட்ட மறந்திட்டாங்க. இரண்டு மடங்கு கூலி கொடுத்து வாங்கணும். வாங்கிக்கிறீங்களா?" என்று கேட்டார் தபால்காரர்.

"அதற்கென்ன?" என்றவர் மடியிலிருந்து சில்லறையை எடுத்துத் தபால்காரரிடம் கொடுத்தார்.



# பச்சை மண்

வனமாலிகை

காக்கி நிறச் சட்டைப் பையில் சில்லறை விழுந்ததும் கடிதம் கைமாறியது.

சிவப்பிரகாசம் கடிதத்திலுள்ள தபால் முத்திரையைப் பார்த்தார். அது திருவட்டாறு தபால் நிலையத்தில் போடப்பட்ட கடிதம். கையெழுத்தும் பெண்கள் கையெழுத்து மாதிரி... நெஞ்சில் சந்தேகப் புழு நெளிந்தது.

உறையைக் கிழித்துக் கடிதத்தைப் பிரித்தார்.

கூடை நெருப்பை நெஞ்சில் கொட்டிவிட்டாற்போல் அது பற்றி எரிந்தது! இரத்த நாளங்கள் புடைத்தன. உடல் நடுங்க, உள்ளம் வெலவெலக்கக் கடிதத்தைப் படித்து முடித்தார்.

அவரது தங்கை கோமதியின் மகள் குந்தவை அவரது செல்வ மகனுக்கு எழுதியிருந்தாள்.

அவர் நடந்தார். எண்ணம் பின்னோக்கிப் பாய்ந்தது.

★

சிவப்பிரகாசத்தின் தங்கை கோமதியின் கணவன் ஆதிகேசவன் அவளது நகை, சொத்துக்கள் எல்லாவற்றையும் பத்து ஆண்டுகளுக்குள் பச்சை நோட்டுகளாக மாற்றித் திருவிளையாடல் புரிந்துவிட்டார். பணப் பசி பத்து ஆண்டுகளுக்கு மேல் ஏற்பட்டுவிட்டது. சுயநலத் தேவைக்காகப் பட்டணத்தில் சில இல்லங்களுக்குப் படியளப்பவர் அவர். பூம்புகார் நகரில் செல்வத்தில் பிறந்த கோவலன் ஒருத்திக்காக உடைமைகளை இழந்து பிறந்த மண்ணை உதறிவிட்டு மதுரைமா நகர் வந்த



கதையைச் சிலம்பு கூறுகிறது. கோமதியின் கணவன் பத்து ஆண்டுகளில் பல ஆயிரங்களை அழித்துவிட்டு ஆளாய்ப் பறந்ததில் ஆச்சரியப்பட என்ன இருக்கிறது? அவரது ஆசை நாயகிக்கு ஆயிரம் ரூபாய் அவசரத் தேவை. ஆதிகேசவன் திருவட்டாற்றுக்கு வந்து பல வீட்டுப் படிகளை மிதித்துப் பார்த்தார். காலணாப் புரளவில்லை. எல்லாரும் கையை விரித்து விட்டார்கள். சோர்ந்து போய், பஸ் நிலையம் பக்கத்தில் வந்தார். அங்கே சிவப்பிரகாசம் நின்றுகொண்டிருந்தார்.

தங்கையைத் தானம் கொடுத்துவிட்டு வேதனையைத் தத்து எடுத்துக் கொண்டவர் சிவப் பிரகாசம். ஆதிகேசவனைப் பார்த்ததும் அவர் உள்ளம் பற்றி எரியத்தான் செய்தது. பத்து வருஷங்களாகத் தங்கைக்காகக் கண்ணீர் சுரியாத நாட்களே கிடையாது, உள்ளமும் ஒரு விதத்தில் மரத்துத் தான் போய்விட்டது.

ஆதிகேசவன் அவரிடம் ஆயிரம் ரூபாய் கடன் கேட்டுப் பார்த்தார். அவர் வெளிச்சம் உலகறிந்த கதையாயிற்றே. சிவப்பிரகாசம் சல்லிக்காசு இல்லையென்று சொல்லிவிட்டார்.

ஆசை நாயகியின் முகம் ஆதிகேசவன் முன் தோன்றியது. பசி வந்தால் பத்தும் பறந்து போம் என்பார்கள். பணப்பசி வந்துவிட்டால் பத்தோடு உயிருமல்லவா போய்விடும்!

உடனே பழைய சீதனத்தில் ஆயிரம் ரூபாய் பாக்கி இருப்பதாகச் சொன்னார். சிவப்பிரகாசம் இல்லையென்று சொல்லிப் பார்த்தார்.

இருவருக்கும் வார்த்தை நீண்டது. ஆதிகேசவன் கையை நீட்டினார். அடி மேலே விழாமல் இருப்பதற்காகச் சிவப்பிரகாசம் சற்று விலகிக் கொண்டார். அடிக்க வந்த வேகத்தில் ஆதிகேசவன் பக்கத்தில் நின்ற விளக்குக் கம்பத்தில் மோதிக் கொண்டார். நெற்றியில் பலமான அடிபட்டு மயக்கமாக விழுந்துவிட்டார். இதற்குள் வேடிக்கை பார்த்துக் கொண்டு நின்றவர்கள் கூடிவிட்டார்கள்.

செய்தி அறிந்த கோமதி புயலாகப் பாய்ந்து வந்தாள். கொண்டவன் கிடக்கும் கோலத்தைக் கண்டதும் 'கோ'வெனக் கதறியழுதாள். உடன் பிறந்தவனை வாயில் வந்தபடி திட்டினாள். நாலு பேர்கள் முன் சிவப்பிரகாசம் தலை குனிந்துவிட்டார். அதிலிருந்து அவர்களுக்குள் பாசமும் பந்தமும் நையத் தொடங்கிவிட்டன. ஒருவர் வீட்டு நல்லது கெட்டதில் ஒருவர் கலந்து கொள்வதில்லை.

பதினாறு வயதில் ஒரு பெண்ணையும் உலகத்துத் துன்பங்களையெல்லாமும் ஒன்று திரட்டிக் கோமதியின் முன் குவித்துவிட்டுக் கண்களை மூடிக்கொண்டார் ஆதிகேசவன்.

*

"அம்மா!"

வாசற்படியை மிதித்ததும் ராகவனின் வாய் தன்னையறியாமலே அழைத்துவிடும்.

"வாடா ராஜா வா" என்று உள்ளேயிருந்து பதில் குரல் கொடுப்பாள் தாய். இது வழக்கம்.

"அம்மா!"

பதில் இல்லை!

முன் கூடத்தில் கைகளைப் பின்பக்கமாகக் கட்டிக்கொண்டு அங்குமிங்கும் நடந்து கொண்டிருந்த சிவப்பிரகாசம் மெதுவாகத் தலையை மட்டும் திருப்பி மகனைப் பார்த்தார். அவரது கண்கள் அனல் கட்டிகளாக மாறியிருந்தன.

கூடத்தைக் கடந்து அடுத்த அறைக்குச் சென்ற ராகவனைத் தந்தையின் குரல் பிடித்து நிறுத்தியது.

"என்னப்பா?" — தந்தையிடம் மகனுக்குள்ள பாசத்தை, வாஞ்சையை, மதிப்பைக் குரல் வெளிப்படுத்தியது.

சிவப்பிரகாசம் வாய் திறப்பதற்குள் பார்வதி முந்திக் கொண்டாள்.

"முதல்லே ரெண்டுபேரும் சாப்பிடுங்க. அப்புறம் பேசிக்கலாம்."

"நீ வாயை மூடு. மனுஷனுக்கு வயிறு பற்றி எரியுது. இவனுக்குச் சாப்பாடு பெரிசாயிட்டுது" என்றவர் விறுவிறு என்று மேசையின் பக்கம் சென்றார். மேசையிலிருந்த கடிதத்தை எடுத்து மகனிடம் கொடுத்தார்.

"இதைப் படிச்சுப் பாரு!"

அர்ச்சகரிடம் பிரசாதம் பெறும் பக்தனைப் போல் கடிதத்தைப் பெற்றுக் கொண்டான் ராகவன். கடிதத்தைப் படித்ததும் நெஞ்சில் தேள் கொட்டியது போலாகிவிட்டது அவனுக்கு. நெஞ்சு நிலைகொள்ளவில்லை. சில கணங்கள் கடிதத்தைப் படிப்பது போல் பாவனை செய்தான். உருவாகப் போகும் புயலிலிருந்து விடுபடும் வழியைத் தேடி அலைந்

தது அவன் மனம். ஓரக்கண்ணால் தந்தையைப் பார்த்தான். அவர் மூக்கு சிவப்பேறி விட்டது.

''என்ன சொல்கிறாய்?'' கர்ஜித்தார் அவர். இன்னும் சில கணங்களுக்குள் நரசிம்ம அவதாரம் எடுத்துவிடுவார் அவர்.

தலைக்கு மேல் வெள்ளம் ஓடிவிட்டது! தந்தையைப் பரிதாபமாகப் பார்த்தான்.

''அப்பா!''

''ம்... சொல்ல வேண்டியதைச் சீக்கிரமாகச் சொல்லித் தொலை. மார்த்தாண்டத்துக்காரர் நடைமேல் நடையாக நடக்கிறார். ரொக்கம் பத்தாயிரமும், நகையும் போடுவதாகச் சொல்கிறார். பொண்ணும் ஒளியாட்டமிருப்பாள்.'' மகன் வேறு பாதையில் கால் வைக்கும் முன் தன் பாதைக்கு இழுக்க வார்த்தைகளைத் தூண்டிலாகப் போட்டார்.

''குந்தவையை...'' பயத்தால் வார்த்தை நின்றுவிட்டது.

''அந்தக் குடிகேடன் மகள் என் வீட்டுக்கு வருவதா?''

''அப்பா!'' குரல் சற்றுப் பலமாக ஒலித்தது.

சொல்லவேண்டியதை ஒரு கணம் மனத்துக்குள் ஒத்திகை பார்த்துக் கொண்டான் ராகவன்.

''குந்தவையைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன்.''

புயல் வீசப் போகிறது என்பது அவனுக்குத் தெரியும். வளையா நெடுமரமாகி விட்டான் அவன்.

அந்த அறையில் பிரளயம், ஊழிக்கூத்து எல்லாம் ஏற்பட்டுவிட்டன. தந்தை சீறினார்; சினங்கொண்டார்; வார்த்தைகளில் அனலை அள்ளித் தெளித்தார். பணத்தைக் காட்டிப் பயமுறுத்தினார்.

ராகவன் ஐயனார் கோயில் சிலை மாதிரி அசையாமல் நின்றான்.

பெற்றவர் பொரிந்து தள்ள, பிறந்தவன் நெஞ்சில் வைராக்கியம் உடும்புப் பிடியாகப் பிடித்துக் கொண்டது.

''என் வாக்குப்படி கேட்டு நடந்தா உள்ளே போ; இல்லேன்னு இப்பவே இறங்கிடு. எனக்குப் பிள்ளையே பிறக்கலேன்னு இருந்து விடுவேன்.''

மோட்டு வளைக்கும் பூமிக்கும் குதித்தவர் தம் முடிவைச் சொல்லிவிட்டு ஊஞ்சலில் இடிந்துபோய் உட்கார்ந்து கொண்டார்.

பார்வதி வாய் திறக்க வேண்டுமே? சிலையாக நின்று கண்ணீர் விட்டாள்.

பெற்றெடுத்து வளர்த்த அன்புத் தாயை விழிகளில் நீர் ஏந்திப் பார்த்தான் ராகவன். அவனும் பேச முடியவில்லை.

அவள் உடல் நடுங்கியது. முந்தானையால் வாயைப் பொத்திக்கொண்டு விம்மி விம்மி அழுதாள்.

''வருகிறேன்'' என்றவன் வேகமாக வெளியேறிவிட்டான்.

ஆறு மாதங்களுக்கு முன் ராகவன் திருவட்டாற்றில் 'டைப்' படிக்கச் சென்றான். அப்போது குந்தவையும் 'டைப்' நிலையத்தோடு சேர்ந்த 'டுட்டோரியல் காலேஜி'ல் படித்துக் கொண்டிருந்தாள். அவர்கள்

கண்ணோடு கண் கலந்து உறவாடத் தொடங்கிவிட்டனர். உறவு முறை அன்பைச் சுரக்கச் செய்து நெஞ்சில் காதலை வளரவிட்டு விட்டது.

கண்ணுக்குக் குளிர்ச்சியை அள்ளித் தெளிக்கும் கிராமத்துக் கிளி குந்தவை.

ஒரு வாரத்துக்குள் சொன்னதைச் செயலில் காட்டிவிட்டான் அவரது குலக் கொழுந்து. அக்னி சாட்சியாக, அம்மி மிதித்து, அருந்ததி பார்த்து ஆடம்பரமாக அவன் திருமணம் செய்துகொள்ளவில்லை, திருவட்டாறு ஆதி கேசவப் பெருமாள் கோயிலில் அவன் குந்தவையின் கழுத்தில் மாங்கல்ய நாண் ஏற்றி விட்டான்.

தந்தைக்கும் மகனுக்கும் ஏற்பட்ட பிளவு நாளொரு அகலமாக விரிந்துகொண்டேயிருந்தது. அவர்கள் ஒரே ஊரில் இருந்து கொண்டும் ஒருவர் முகத்தில் ஒருவர் விழிப்பதில்லை.

பார்வதிக்கு எப்போதாவது மகனைப் பார்க்கவேண்டும் என்று ஆசை வந்தால் காலையில் ஆற்றுப் படித்துறைக்குப் போய் விடுவாள். ஆசை தீர, கண் குளிரப் பார்த்துக்கொள்வாள் மகனை. அவனோடு பேசக்கூடாதென்பது உரியவரின் கட்டளை. பெற்றெடுத்த அன்னை மகனிடம் ஊமையாகி விட்டாள்.

காலம் ஓடியது! அதற்கு உலகத்தைப் பற்றிய அக்கறை ஏது!



குந்தவை நிறை மாதக் கர்ப்பிணி. வாயும் வயிறுமாக அவள் நின்றாள். இன்றைக்கோ நாளைக்கோ பிரசவமாகிவிடும். குந்தவைக்குத் துணையாக அவள் தாயார் கோமதி வந்திருந்தாள். அவளுக்குப் பிரசவ வேதனை ஏற்பட்டதும் குலசேகரம் ஆஸ்பத்திரிக்குப் போய்விடவேண்டும் என்பது அவர்களின் திட்டம்.

அன்றைக்குப் பார்த்து ராகவன் ஆபீஸ் விஷயமாக வெளியூர் போய் விட்டான்.

பொழுது சாய்ந்து விட்டது!

குந்தவைக்கு இலேசாக, அடிவயிற்றில் வேதனை ஏற்பட்டது. வெளியே சொல்ல வெட்கப்பட்டு ஒரு மணி நேரமாகப் பொறுத்துப் பார்த்தாள். வினாடிக்கு வினாடி வேதனை அதிகரித்தது. மகள் உட்காரவும் முடியாமல் படுக்கவும் முடியாமல் தவித்துக் கொண்டிருப்பதைப் பார்த்துவிட்டாள் தாயார். உடனே பக்கத்து வீட்டு ஆளை அனுப்பிக் கார் கொண்டுவர ஏற்பாடு செய்தாள்.

இரவு எட்டு மணி! குந்தவை பக்கத்து வீட்டு அம்மாளின் துணையோடு காரில் ஏறிக் கொண்டாள். மகளின் வேதனைக் குரல் கேட்டுக் கோமதி செயலற்றுப் போனாள்.

கார் சற்றுத் தூரம் போயிருக்கும்.

"அம்மா, காரை நிறுத்தச் சொல். பக்கத்தில் ஏதாவது..." வேதனையால் குந்தவைக்கு அதிகம் பேச முடியவில்லை.

காரை நிறுத்திவிட்டு, பக்கத்து வீட்டுக் கதவைப் போய்த் தட்டினான் டிரைவர்.

கோமதி குந்தவையைக் கைத்தாங்கலாக அழைத்துச் சென்றாள்.

கையில் அரிக்கேன் விளக்குடன் வந்து கதவைத் திறந்தவர் திகைத்துப் போய் நின்று விட்டார். வாயும் வயிறுமாகப் பிள்ளைத் தாச்சி!

மழையில் நனைந்த கோழி உடலைச் சிலிர்த்துக் கொள்வதைப் போல் சிவப்பிரகாசத்தின் மனமும் சிலிர்த்துக் கொண்டது.

"உள்ளே வாங்க" வாய் தானாகப் பேசியது.

"பார்வதி, சீக்கிரம் எழுந்திரு! ராகவன் படுக்கும் அறையிலுள்ள சாமான்களை அப்புறப்படுத்து" என்றவர் தாமாகவே பம்பரமாக வேலை செய்யத் தொடங்கி விட்டார்.

அறையில் பிரசவ வேதனை...ஓலம்!

மடியில் நெருப்பைக் கட்டிக் கொண்டவரைப் போல் அரை மணி நேரமாகத் தவித்தார் சிவப்பிரகாசம்.

"குவா...குவா..." குழந்தையின் முதற் குரல் குவலயத்தில் ஒலித்தது.

சிவப்பிரகாசம் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டுக் கொண்டார். அவர் மனைவி வாய் நிறைந்த சிரிப்போடு வந்தாள்.

"உங்களுக்குப் பேரன் பிறந்திருக்கான்."

சிவப்பிரகாசத்தின் உதட்டில் சிரிப்பு மலர்ந்தது. தாத்தாவாகிவிட்ட பெருமை அதில் படிந்திருந்தது.

தந்தைக்கும் மகனுக்குமுள்ள பிளவைப் புதிய ஜீவன்—ஆண்டவன் பிடித்துப் போட்ட பச்சை மண்—ஒட்ட வைத்து விட்டது.

# குருதேவரின் குரல்

**பேராசிரியர்: அ. சீநிவாச ராகவன்**

## மழைப்பாட்டு

பொழுது அடைய ஒரு நாழிகை இருக்கும். வெளியிலே சிறு தூற்றல் தான். என்றாலும் பெருமழை கொட்டப் போகிறது என்று தோன்றியது. வானத்தில், கிழக்கிலும், வடக்கிலும், கார் மேகங்கள் தாழ்ந்து, மெல்ல, மிக மெல்ல அசைந்தன, மிகப் பெரிய யானைகளைப் போல. அவற்றை, 'போங்கள், போங்கள்' என்று மின்னல் அங்குசம் இங்கும், அங்கும் பாய்ந்து முறுக்கியது. நாலைந்து காகங்கள் தோட்டச் சுற்றுச் சுவர்மேல் இடித்துக் கொண்டு பறந்து, தோப்புக்குள் சாடி மறைந்தன. முதன் முதலில், ஏகாந்தமாகத் தன் நாயகனைச் சந்திக்கும் புது மணப் பெண்ணைப் போல, நெஞ்சில் கிளுகிளுப்புடன், உடம்பை அசைக்காமல் நின்றன மரங்கள். மழையின் காற்று விரல் தென்னையின் கூந்தலை மிருதுவாகக் கோதியது. தூற்றல். தூற்றலா, மரங்களின் ஆனந்தக் கண்ணீரா? இடியின் எச்சரிக்கைக் குரைப்பு; வயற்காட்டில், தவளைகளின் கொன்னக்கோல்.

சரேலென, சில்லிட்டு இரைந்து சுழன்றது காற்று. மரங்கள் படபடவென்று இலைகளை வீசி, நிலை அடைந்தவை போலச் சுழலத் தொடங்கின. வானை வெட்டியது மின்னல். யார் அவிழ்த்து விட்டார்களோ, இடி கொட்டி முழக்கி, தாவித் தாவி, மேக மந்தையைக் குதறியது. தூற்றல் வலுத்தது, சோ வென்று தாரையாய்ச் சாய்ந்தது மழை!

பிறகென்ன? பாரதியார் பாடிய பயங்கரக் கோலாகலந்தான்:

**அண்டங் குலுங்குது, தம்பி! தலை**
**ஆயிரம் தூக்கிய சேடனும் பேய்போல்**
**மிண்டிக் குதித்திடுகின்றான் — திசை**
**வெற்புக் குதிக்குது; வானத்துத் தேவர்**
**செண்டு புடைத்திடுகின்றார் — என்ன**
**தெய்விகக் காட்சியைக் கண்முன்பு**
**கண்டோம்**
**கண்டோம், கண்டோம், கண்டோம்...**

பாரதியாருடைய சொற்கள் நம்மை எங்கேயோ தூக்கிச் செல்கின்றன. பிரும்மாண்டமான இயற்கைச் சக்திகள் மோதி ஆர்ப்பரிக்கும் ககன வெளி அரங்கத்திற்கே நாம் போய் விடுகிறோம். பாட்டில் அவ்வளவு வேகம், அவ்வளவு எழுச்சி, மழையின் விசுவரூபத்தையே நாம் கண்டு விடுகிறோம்.

ஆனால், இந்தப் பாட்டில், நமது வீட்டு வாசலில் பெய்யும் மழையை நாம் காணவில்லை. வேறொரு இடத்திலே பாரதியார் நம் தினசரி வாழ்க்கையோடு இணைந்தும் மழையைப் பற்றிப் பாடியிருக்கிறார்:

**தூற்றல் கதவு சாளரமெல்லாம்**
**தொளைத்தடிக்குது பள்ளியிலே**
**நேற்றிருந்தோம் அந்த வீட்டினிலே**
**இந்த நேரமிருந்தால் என்படுவோம்?**

இந்த முறையில் குருதேவர் பாடியுள்ள ஒரு மழை வருணனைகளைப் பார்க்கலாம். இதோ ஒன்று; 'க்ஷணிகா' என்ற கவிதைத் தொகுதியிலிருந்து இப்பாடற் பகுதி எடுக்கப்பெற்றது; இதில்......நான் சொல்வானேன், நீங்களே பார்த்துக் கொள்ளலாம்:

**கன்னங் கரிய கார்மேகம் — வானைக்**
**கட்டிக் கவிந்து மறைத்தது காணும்.**
**முன்வித் திரள் திரளாக — நாரை**
**மூண்டு பறந்தன அக்கரை மேலே.**
**மன்னியெழு மழைக் காற்றே — பொட்டல்**
**மார்பின்மேல் விட்டு விட்டே அடித்தாடும்.**
**துன்னும் வெருட்சியில் மந்தை — துள்ளித்**
**தொட்டியில் உள்ள தம கொட்டிலுக் கோடும்.**

மழை வருவதற்குச் சற்று முன் உள்ள காட்சி இது. இதைவிட இன்னும் மும்முரமாக வரும் மழை ஒன்று, வேறொரு பாடலில் வருகிறது:

**காட்டு விளிம்பிற்கு மேலே — கனத்**
**கார்முகில் கோடி கணத்தினில் கூடும்**
**மேட்டுக் குளக்கரை மீதில் — பத்தி**
**மீறிய தென்னை மரங்கள் உலைந்தே**
**மூட்டத் திரண்டிடும் வானில் — தலை**
**முட்டி முட்டி முட்டி முட்டியே மோதும்**
**ஓட்டைப் புளியினிற் காகம் — குரல்**
**ஒய்ந்து கலைந்த சிறகொடு சாயும்.**

இப்படி மழை வரும்போது, வாசலில் குழந்தையை யாராவது விளையாட விடுவார்களா? 'மழை ஒரே அடியாய் இருண்டு வருகிறது, உள்ளே வா, வீட்டுக் குள்ளேயே இரு' என்று வெளியிலே அலையும் குழந்தையை, தாய் அழைப்பது

நாம் எத்தனையோ முறை பார்த்த ஒன்று. இந்தச் சிறு செய்தியோடுதான், பாடல் தொடங்குகிறது:

**வீட்டுக்குள்ளே இரு, கண்ணே — மழை**
**வீசி அடித்திடும், வானம் துடித்திடும்**
**வீட்டுக்குள்ளே இரு, கண்ணே.**

இப்படிப் பேசுகின்ற ஒரு தாய்-கிராமத்திலே உள்ள சாதாரணப் பெண் - அவள் தன் வீட்டு வாசலில் இருந்து மழையைப் பார்க்கிறாள். அதுதான் பாடல்.

வெளிப் புறத்திலே உள்ள பசு, மழையில் வெருண்டு வீறிடுகிறது. 'அதை உள்ளே கொண்டு வந்து கொட்டிலில் கட்ட வேண்டும்' என்று எண்ணுகிறாள் அந்தப் பெண். குழந்தையைப் பார்த்து 'நீ இங்கேயே இரு. நான் போய் மாட்டைப் பிடித்துக் கொட்டிலில் கட்டி விட்டு வந்து விடுகிறேன். மழையிலே எங்கும் ஓடிவிடாதே' என்று புறப்படுகிறாள் அவள். 'ஏன், அம்மா, என்னை வெளியிலே போகாதே என்கிறாய்? அதோ பார், அங்கே ஒரே கூட்டம். நானும் போகிறேன்' என்று குழந்தை பிடிவாதம் பிடிக்கிறதோ என்னவோ, 'அந்தக் கூட்டமா, அது ஒன்றுமில்லை. குட்டத்தில் தண்ணீர் வழிந்து ஓடுகிறது. தண்ணீரோடு தண்ணீராய் வெளியிலே ஓடும் மீன்களைப் பிடிக்க ஊர்க்காரர்கள் அங்கே கூட்டம் போட்டுக் கும்மாளம் அடிக்கிறார்கள். நீ போகாதே' என்று சொல்லி விட்டுத் தாய் போகிறாள்:

**வெள்ளைப் பசு வெளிப் பக்கம் — நின்று**
**வீறிட்டலறுது பார், அதைக் கொட்டிலில்**
**உள்ளே கொணரும் வரையில் — நீ**
**ஓடாமல் இங்கே இருந்திடு, கண்ணே.**

**வெள்ளம் நிறைந்த வயலில் — நீர்**
**விம்மி வழிந்திடும் குட்டத்து வாயில்**
**துள்ளித் தப்பி ஓடும் மீனை — தொட்டுத்**
**தொட்டுப் பிடித்திடத் துள்ளினர் ஊரார்.**

பசுவைக் கட்டி விட்டு, வீட்டுக்குத் திரும்புகிறாள் தாய்: வீட்டு வாசலில் நின்று கொண்டு, தெருவை ஆவலோடு பார்க்கிறது குழந்தை. தாய் சிரிக்கிறாள். 'என்ன அப்படிப் பார்க்கிறாய்? உன் மாதிரிதான், குறும்பு செய்யும் குழந்தையைப் போலத்தான் இந்த மழைத் தண்ணீர் ஓடுகிறது. தெரிகிறதல்லவா?' என்கிறாள். இதற்குள், தொலைவிலிருந்து, ஏதோ குரல் கேட்கிறது. 'அது என்ன?' என்கிறது குழந்தை. 'ஒன்றுமில்லை. தோணித் துறையில் யாரோ தோணி வேண்டும் என்று கூப்பாடு போடுகிறார்கள். நீ பேசாமல் இரு. இந்த மழையிலே யார் தோணி விடப் போகிறார்கள்?' என்கிறாள் தாய்:

**குறும்பு நினைந்து தன்தாயை — விட்டுக்**
**கும்மாளி போடும் சிறுவனைப் போலே**
**குறுகிய வீதியில் எங்கும் — மழை**
**கோல அருவிகளாய்க் குதித்தோடும்.**

**துறையினில் ஆறுகடக்க — யாரோ**
**தோணிக்காரா என்று கூவிடல் கேளாய்.**
**துறையினில் தோணி இன்றேது — பகல்**
**தூங்கி வழிந்தது வெய்யிலும் ஏது?**

ஆமாம், வெய்யில் இல்லை என்பது மாத்திரமா? பகலின் மங்கல் ஒளியும் சாய்கிறது. இருள் சூழ்கிறது. ஆற்றிலிருந்து நல்ல தண்ணீர் கொண்டு வர வேண்டும். மழை வலுக்கும் போல் இருக்கிறது. அதோ, பெண்கள் எல்லோரும் தண்ணீர்க் குடம் ஏந்தி, அவரவர் வீட்டுக்கு விரைகிறார்கள். மழை வலுத்து விட்டது. ஆகாசத்தைப் பார், ஓடுகிறது. அதுவா, அது ஆறு சீறிப் பாயும் சத்தம்.

**நிறையும் இருள் வரலாச்சு — அந்தி**
**நேர விளக்கையும் ஏற்றிடலாச்சு.**
**சிறிய குடங்கள் நிறைத்தே — வீடு**
**சேர நினைந்து விரைந்தனர் பெண்கள்.**

**வெறியினில் ஆடும் மழைமேல் — ஏறி**
**வேகச் சவாரி விசைத்தது வானம்.**
**சிறையினில் சிக்கியதே போல் — சீறிச்**
**சீறி இரைந்து சுழன்றிடும் ஆறு.**

தண்ணீர் கொண்டு வரவும் முடியாது. நாளைக்குச் சந்தைக்குப் போகவும் முடியாது;

**சந்தைக்குச் செல்லும் இச் சாலை — இன்று**
**சந்தடியின்றி வெறிச்சோடிப் போச்சு.**
**வந்து நதிக்குத் திரும்பும் — மிக**
**வாகான பாதை வழுக்கிடலாச்சு.**

வீட்டிலே இருக்க வேண்டியதுதான். காற்று அடிக்கிற அடியைப் பார். எங்கே வெளியிலே போவது?

**வெந்து புழுங்கிடும் மூங்கில் — கொத்தில்**
**வீழ்ந்து வலைப்பட்ட வெம்புலி போலே**
**சிந்தை குமுறித் திமிறி — காற்று**
**சில்லென்று பாடும் குடைந்திடும் சாடும்.**

**வீட்டினிலே இரு, கண்ணே — மழை**
**வீசி அடித்திடும், வானம் துடித்திடும்**
**வீட்டினிலே இரு, கண்ணே.**

மழையைப் பற்றி எத்தனை எத்தனையோ விதங்களில் கவிஞர்கள் பாடி இருக்கிறார்கள். தாகூரும் பாடி இருக்கிறார். 'வளர்பிறை' என்ற நூலிலிருந்து எடுக்கப்பெற்ற இந்தப் பாடலில், நமது வீட்டு வாசலும் மழையும் ஒன்றாகப் பின்னி, ஒரு தனி அனுபவமாக நமது நெஞ்சில் இடம் பெறுகின்றன.

# மரகதச் சிலை

கதை: வாண்டுமாமா
சித்திரம்: விஜு















நாகநந்தினியைத் தூக்கிக் கொண்டு
தெம்பிழந்து கிடக்கும் ஆதித்தனை
யும் இழுத்துக் கொண்டு வெங்க
லக் கோட்டைக்குச் சென்ற மலை
விழுங்கி ஆதித்தனைப் பாதாளச்
சிறையில் கொண்டு
தள்ளினான்.


ஐயோ! என் பலமெல்லாம் எங்கே?
உடைவாளைத் தூக்கவும் முடியவில்லையே.
என் உள்ளமும் உடலும் ஏன் இப்படி நடுங்
குகின்றன? இந்தப் பாதாளச் சிறையிலேயே
நான் செத்து மடிய வேண்டியதுதானா?


நாகநந்தினி இனி நீதான் இந்தக்
கோட்டையின் தலைவி. எனக்கு
விருப்பமானதை உனக்கு விருந்து
வைக்கிறேன். வா!


உனக்கு ஒரு பரிசு தரப் போகிறேன்.
மந்திர தந்திரங்களை மட்டும் இனி
நீ நம்பி இருக்க வேண்டாம். இதோ
பார்... இந்தக் கார்க் கோடகனை...


உனக்கு அடிமையாக்கு
கிறேன். ஏழுதலை நாகமான
இதை யாராலும் வெல்ல முடியாது.
இதன் விஷக்காற்றிலே மனிதர்கள் சாம்பலாகி
விடுவார்கள். இனி இது உன் பாதுகாவலன்.


'ஆதித்தனை எப்படியும்
விடுவித்தாக வேண்டும்'—
என்ற முடிவுடன்
நாகன் அங்கி
ருந்து கிளம்
பினான்.
தொடரும்

# தொழில் வளம் பெருகுது காணீர்!



ஜெயந்தி

**ர**யிலில் ஏறிக் கொண்டேன். 'சட்டுப் புட்டெ'ன்று மெல்ல ஊர்ந்தது அது. சில நிமிஷங்களில் பம்பாய் இந்துஸ்தான் லீவர் கம்பெனியை ஒரு நோட்டம் பார்த்து விட்டு கல்கத்தா உஷா தையல் மிஷன் கம்பெனிக்குப் போய்ச் சேர்ந்தேன். அடுத்தாற் போல் சென்னை ஸ்டாண்டர்டு மோட்டார் கம்பெனி அருகே வந்து இறங்கிக் கொண்டேன்.

'சட்டுப் புட்டென்று மெல்ல ஊர்ந்து செல்லும் ரயிலில் இத்தனை இடங்களுக்கும் சில நிமிஷங்களுக்குள் சென்று வருவதா? என்ன பிதற்றல்' என்று யோசிக்கிறீர்களா? பிதற்றலும் இல்லை, உளறலும் இல்லை. சென்னை தீவண்டு மைதானத்தில் ஓடிக் கொண்டிருக்கும் விளையாட்டு ரயில் தொடரில் ஏறிப் பாருங்கள். மேற்சொன்னவை யெல்லாம் முழு உண்மை என்பது உங்களுக்கே புலனாகும்.

பொதுப்பணி இலாக்கா ஓட்டும் இந்த ரயில் 'சட்டுப்புட்'டென்று சத்தம் போடுகிறது ஆனால் மெல்ல ஊர்ந்துதான் செல்கிறது! இருப்பினும் பணிமனைகளில் நடைபெறும் காரியங்கள் இந்த ரயிலைப் போலன்றி விரைவாகத்தான் நடந்தேறுகின்றன என்பதற்குப் பொருட் காட்சியில் பொதுப்பணி இலாக்கா எடுத்துக் கொண்டுள்ள பகுதிக்கு முன்னால் நிற்கும் நீண்ட பெரு வரிசையே அத்தாட்சி!

* * *

**எ**ல்லாம் தெரிந்தவன் போல நடந்து கொள்ளும் நண்பன் ஒருவன் உங்களுக்குண்டா? அவன் கொட்டத்தை அடக்க இதோ ஒரு சுலபமான வழி. ஸ்ரீ அனந்தராம கிருஷ்ணன் அவர்களை சேர்மனாகக் கொண்ட அமால்கமேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டில் அடங்கியுள்ள கம்பெனிகள் எத்தனை என்று கேட்டுப் பாருங்கள். நிச்சயமாகத் திருதிருவென்று விழிப்பான். குருட்டாம்போக்கில் பதினேழு என்று சரியான பதிலைக் கூறிவிட்டாலும் அவற்றின் பெயர்களை விவரிக்கச் சொல்லுங்கள். பரிதாபமாகக் காட்சியளிக்கும் அவன் முகம்! இந்தத் தொழிற்சாலைகள் தொடரில் இன்னும் சிறிது காலத்துக்குள் புதிய கம்பெனிகள் பலவும் இணையப் போவதாகக் கேள்வி! இந்தியா பிஸ்டன்ஸ் என்ற ஸ்தாபனத்தில் மோட்டார் கார் இஞ்சினில் மிக முக்கியமான ஒரு பகுதியாகிய பிஸ்டன்களை சென்னை செம்பியத்தில் தயாரிக்கிறார்கள். பிஸ்டன் இயங்கும்போது எரிமலையைக் காட்டிலும் அதிகமான வெப்பம் உருவாகிறதாம் அதனுள்ளே. ஆழ் கடலைக் காட்டிலும் அதிகமான அழுத்தம் உண்டாகிறதாம். அப்படி இருக்கும்போது அதன் உற்பத்தியில் எவ்வளவு அக்கறை காட்ட வேண்டியிருக்கும்?

* * *

**சீ**லன் இன்ஜினீரிங், என்பீல்ட் இந்தியா கம்பெனிகளின் ஸ்டால்கள் அருகருகே அமைந்திருக்கின்றன. மோட்டார் சைக்கிள்கள் செய்து குவிப்பதில் பேர் போன என்பீல்ட் இந்தியா ஸ்தாபனத்தார் இப்போது ஸ்கூட்டர்களும் செய்ய முற்பட்டிருக்கிறார்கள். மூவாயிரம் ரூபாய்க்குள் அடங்கும் இந்த ஸ்கூட்டர்களில் புதிய அம்சங்களைப் புகுத்தியுள்ளார்களாம்.

இப்பால் "லாம்பிரெட்டா" ஸ்கூட்டர் ஒன்றும் அழகையும் உறுதியையும் பறைசாற்றுவதுபோலக் கம்பீரமாக நின்று கொண்டிருக்கிறது. அதெல்லாம் சரிதான்; மோட்டார் சைக்கிளும் ஸ்கூட்டரும் ஓட்டும் இளைஞர்களுக்கு மெதுவாகச் செல்ல வேண்டியதன் அவசியத்தை யார் எப்போது எடுத்துச் சொல்லப் போகிறார்கள்?

எல்லாரும் மோட்டார் சைக்கிள்களில் சவாரி செய்ய முடியுமா? ஏழைகளின் நண்பனான சைக்கிள்களை நேர்த்தியாகத் தயாரிக்கும் டி. ஐ. சைக்கிள் தொழிற்சாலை அம்பத்தூரில் செயல்படும் விதத்தை தீவண்டு மைதானத்திலேயே ஓரளவுக்குக் கண்டறியலாம்.

* * *

**ப**ம்பாய்க்கருகே உள்ள காம்பே என்னுமிடத்தில் எண்ணெய் அகப்பட்டிருக்கிறது என்று மத்திய மந்திரி கூத்தாடாத குறையாகப் பார்லிமெண்டில் கூறுகிறார். அளவு கடந்த ஆனந்தத்துடன் வாழ்த்துச் செய்திகள் தந்தி மூலம் அனுப்பப்படுகின்றன. ஏதோ காணாததைக் கண்டுவிட்டது போலக் குதிக்கிறார்களே இது என்னவென்று பார்ப்போம். கன்னங்கரிய வழவழப்பான சற்றுக் கடினமான திரவம் ஒன்றை புட்டியில் போட்டுப் பத்திரமாக வைத்திருக்கிறார்கள் இந்தப் பொருட் காட்சியிலே, அரசாங்க இயற்கை வாயு, எண்ணெய் இலாக்காவினர். அதைக் கண்டதுமே 'பூ இவ்வளவுதானா' என்று தோன்றும் நமக்கு. அதனைப் பலவிதமாகவும்















பதப்படுத்திப் பிரித்தெடுத்த பின்னர், பெட்ரோல், மண்ணெண்ணெய், தார், பாரபின் மெழுகு போன்ற எத்தனையோ பொருள்கள் கிடைக்கின்றன. அமெரிக்கா, ஈரான் முதலிய நாடுகளில் உள்ளது போல் நமக்கும் அதிர்ஷ்டம் இருந்து பெருமளவுக்கு இந்த எண்ணெய் கிடைத்துவிட்டால் நமது நாட்டின் பொருளாதார நிலையையே மாற்றி அமைத்துவிடும். அது என்னும்போது அலட்சியப் படுத்துவதற்கில்லை என்பது தெளிவாகும்.

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னும் ஜீவித்திருந்து மண்ணுள் புதையுண்டு போன விசித்திர மிருகங்களே இன்றைக்குத் தோண்டும்போது எண்ணெய் ஊற்றுகப் பீறிடுகின்றன என்கிறார்கள் ஆராய்ச்சியாளர்கள். வாழ்க ஆதிகாலத்து மிருகங்கள்; வாழ்க பல்லாண்டு பூமிக்கு அடியிலே!

* * *

ஸ்டாண்டர்டு மோட்டார் கம்பெனியார் உச்சியில் ஏற்றி வைத்துள்ள மோட்டார் எந்தக் கணத்தில் தலையில் விழுந்து விடுமோ என்ற பிரமை ஆட்கொள்ள அச்சத்துடன் ஒதுக்குப் புறமாக நடந்து 'சடக்'கென்று உள்ளே புகுந்தேன். 'ஹெரால்ட்' என்ற பெயரிலே புதியதொரு மோட்டார் தயாரிக்கப் போகிறார்களாம் அவர்கள், வண்டலூரிலே. இத்தாலி தேசத்தவர் ஒருவர் இந்தக் காரின் அமைப்பை—தோற்றத்தை வகுத்துத் தந்திருக்கிறார். இஞ்சின் ஸ்டாண்டர்டு மோட்டார் எஞ்சினே. வனப்பும் உழைப்பும் இணைசேர்ந்து எழிலூட்டப் போகின்றன.

இத்தாலி என்றதுமே பியட் காரும், விற்பனையாளர்களான டி. வி. எஸ். ஸ்தாபனமும் நினைவுக்கு வரும். கார்கள் சம்ரட்சணையில் டி.வி.எஸ்.ஸுக்கு இணை அவர்களேதான். அதை எடுத்துக் காட்டும் வகையில் வாயிற்புறத்தில் ஓவியம் அமைந்திருக்கிறது. டி.வி.எஸ். மனிதன் சாலையில் போகும் மோட்டார்களைப் பாதுகாப்பது போல.

* * *

சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்பைத் தயாரிக்கும் ஹிந்துஸ்தான் லீவர் பகுதியை அடைந்ததும் பம்பாயில் முன்பு எப்போதோ அவர்களுடைய பிரும்மாண்டமான தொழிற்

சாலையைச் சுற்றிப் பார்த்தது நினைவுக்கு வந்தது. அணிவகுத்துச் செல்லும் ராணுவ வீரர்கள்போல இயந்திரங்களின் வாயிலிருந்து அடுக்கடுக்காக வெளிப்படும் சோப்புக்கட்டிகள், நளினமான விரல்களால் அவற்றைக் காகிதத்தில் சுற்றி எடுத்துப் பெட்டியில் அடைக்கும் அணங்குகள், மாடியிலிருந்து கீழே கடபுடா ஒலியுடன் டால்டா டின்கள் சறுக்குக் கட்டைகளில் உருண்டு வரும் காட்சி எல்லாம் நினைவில் நிழலாடின. குடும்பக் கலையில் தாய்மார்களுக்கென்று சில உபயோகமான தகவல்களை அச்சடித்துத் தருகிறார்கள் இந்த ஸ்டாலில்.

இந்தியாவில் நூலுக்கும் நாருக்கும், உரிய சாயம் தயார் செய்து தரும் அதுல் கம்பெனியாரைப் பற்றிக் குறிப்பிட வேண்டும். இதுகாறும் சாயங்கள் வெளிநாட்டிலிருந்துதான் இறக்குமதி செய்து வந்தோம். அதுல் கம்பெனியாரின் சாதனை காரணமாக, வெளிநாடுகளில் செய்யப்படும் சாயத்துக்குச் சமமாக அதுல் சாயங்கள் இருக்கவே, வெளிநாட்டு இறக்குமதி குறைந்துவிட்டதாம்!

புகழ்பெற்ற பனாமா சிகரெட்டுகள் செய்து குவிக்கும் கோல்டன் டுபாக்கோ கம்பெனியார் மட்டும் கலால் வரியாக வருஷத்துக்கு இரண்டு கோடி ரூபாய் தருகிறார்களாம், சர்க்காருக்கு! புகை பிடிப்போர் கவனிக்கவும்!

பின்னி அண்டு கம்பெனி துணி வகைகளில் செய்யும் வர்ண ஜாலங்களை ரசித்து விட்டு, மின்சார போர்டு தமிழ் நாட்டில் எழுப்பியுள்ள மின் உற்பத்தி நிலையங்களைப் பற்றி விவரிப்பதையும் கண்டறிந்து கொண்டு இன்னும் பல ரசமான காட்சிகளையும் பார்த்துக் களிப்பதற்குள் கால்கள் களைத்துப்போகும். அந்தச் சமயத்தில் இந்தியா காப்பி ஸ்டாலில் சூடாக ஒரு கப் காப்பி சாப்பிட்டுவிட்டு நாட்டிய நாடக அரங்கத்துக்குப் போய் விச்ராந்தியாக உட்கார்ந்திருக்கலாம்.

நாட்டில் தொழில் வளம் பெருகி வரும் வேகத்தை உணர ஐலண்டு மைதானத்தில் நடைபெறும் பொருட்காட்சிக்கு அவசியம் போகலாம். தென் இந்திய வர்த்தக சபையின் சார்பில் திரு எம். ஏ. சிதம்பரத்தைத் தலைவராகக் கொண்ட செயற்குழு இந்தப் பொருட்காட்சியை நடத்துவது பாராட்டுக்குரியது.












சந்தன நறுமணம்

நாள் முழுவதும் கமழ...

# மேட்டூர் சந்தன சோப்

மேட்டூர் சந்தன சோப்பை உபயோகிப்பதனுல் சீரிய சந்தன நறுமணம் மட்டுமின்றி, உங்கள் சருமம் ஒரு தனி மெருகுடன் சோபிக்க உதவுகிறது. மேலும் அதனின்று ஏற்படும் உற்சாக உணர்ச்சி நெடுநேரம் நீடித்திருக்கின்றது.

நீங்கள் எப்பொழுதும் கேட்டு வாங்கவேண்டிய சோப் மேட்டூர் சந்தன சோப்.





தயாரிப்பு :

**மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிட்.**

மேட்டூர் அணை R. S. சேலம் ஜில்லா.

மானேஜிங் ஏஜெண்ட்ஸ் :

சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட்

MC-841



# தூரத்துப் பச்சை

**காஞ்சிநாதன்**

"மணி, அவர் யார் தெரியுமா?"

"தெரியாதே! யார் அவர்?"

"ஓர் அதிகாரி!"

"ஓஹோ!"

"நம் தெருவில் நேற்றுத்தான் குடி வந்தார்."

"அப்படியா?"

நான் ஆச்சரியத்தை வார்த்தைகளில் கலந்து வெளியிட்டேன். எங்கள் தெருவே ஓர் அலாதியான தெரு. தினமும் பல ரக மனிதர்களைப் பார்க்கலாம். விதம் விதமான திட்டுகளைக் காது கொடுத்துக் கேட்கலாம். அழுகை, கூச்சல், அமளி எல்லாவற்றுக்கும் ஒரு பூரணத்துவம் கொடுத்து அதிலே மனித வாழ்வின் உயிர் நாடிகளைப் பிடித்துப் பார்க்க ஆசைப்பட்டவர்கள் எங்கள் தெருவை அவசியம் பார்க்கவேண்டும். இப்படிப்பட்ட ஒரு தெருவுக்கு கௌரவம் மிகுந்தவர் வந்து குடியேறுவதா? அதுவும் ஓர் அதிகாரியா வந்தார்? என்னால் முதலில் நம்பத்தான் முடியவில்லை. கால் சராயும், சில்க் சட்டையும், வட்ட வடிவான மூக்குக் கண்ணாடியும், உயர்ந்த கான்பூர் செருப்புமாகப் பார்த்த பிறகும் 'இப்படியும் இருக்குமா?' என்ற சந்தேகமே என் மனத்தில் எழுந்தது. நான் என் கண்களை அவரிடம் செலுத்தினேன். அதிகாரியென்ன, அதுவும் சாதாரணமாக நடப்பதைக் கவனித்தேன்.

'உம். மனிதர் கொடுத்து வைத்தவர். நல்ல சம்பளம்போல் இருக்கிறது. இருக்காதா பின்னே? அதிகாரி ஆயிற்றே!' என்று எனக்குள் சொல்லிக் கொண்டேன்.

வீட்டினுள் நுழைந்தேன். "அப்போல்! அந்தக் கப்பு என்னைக் கீழே தள்ளிட்டான் அப்பா. அப்பா! எனக்கு நல்ல சொக்காய் இல்லே. எனக்கு வெக்கமாக இருக்கு. எனக்கும் தான் அப்பா இல்லே. நீ சில்க் சட்டை வாங்கி வாப்பா." என் உயிரின் உயிர்கள் கூறும் மொழிகளைக் கேட்டுக் கேட்டுப் பழகியவன்தானே நான்? 'ஆகட்டும்' என்று சொல்லி முடிப்பதற்குள் ஓர் எண்ணம் மனத்தில் தோன்றியது.

'அதிகாரியின் வீட்டில் இப்படியாயிருக்கும்? ஒரு குழந்தை சாக்லெட் கேட்கும். ஒருத்தி 'சைக்கிள்' கேட்பாள். மற்றொருத்தி 'காரம் போர்டு' கேட்பாள். உம்! நமக்கென்று பிறந்தவை கேட்பதை எல்லாம் வாங்கிக் கொடுக்க மனம் இருந்தாலும் பணம் இல்லையே கையில்.'

"உங்களைத்தானே..."

நிமிர்ந்தேன். என்னை ஒரு விசித்திர பாவத்தோடு பார்த்துக் கொண்டிருந்தாள் என் மனைவி.

'என்ன?'—கண்ணால் கேட்டேன்.

"நம் தெருவுக்கு ஓர் அதிகாரி வந்திருக்காராம்." வாய் அழகாகத்தான் பேசியது.

அவள் பேச்சையோ, உருவப் பொலிவையோ, உள்ளிருக்கும் இதய வேட்கைகளையோ நான் கவனித்தேனா? என் சிந்தனையே வேறாயிற்றே. நான் எந்தவிதமான பதிலும் சொல்லாமல் குளிக்கப் போனேன்.

தலையில் நீர் கொட்டிக் கொண்டே நினைத்தேன். 'இந்த ஓர் ஆனந்தம்தானே எனக்கு. வெளியே நல்ல சட்டை போட்டுக் கொண்டு நாலு பெரியவர்களுடன் உட்கார்ந்து பேச முடிகிறதா? ஏதோ வேளைக்குச் சாதத்தைப் பிசைந்து சாப்பிடுவது. பள்ளிக்கூடம் போவது போர்டில் நாலும் மூணும் எழுதுவது. கையை நெற்றியில் வைத்துக்கொண்டு 'ஈசுவரா' என்று குந்திக் கிடப்பது? சே...சே...பெரிய வேலையாம்! வாத்தியாராம்? நான் எழுத்தறிவிக்கும் இறைவனும்!...'

"சீக்கிரம் குளித்து விட்டு வாருங்கள்" உள்ளே யிருந்து அவள் பேசுவது கேட்டது. சிந்தனையை மூட்டை கட்டிவைத்து விட்டுத் தட்டின் முன் போய் உட்கார்ந்தேன்.

தட்டில் விழுந்த காய்கறிகள் வாயில் அடைக்கலமான போதுதான் நான் அவள் முகத்தைக் கவனித்தேன். பாகற்காய் கூட்டு எனக்குப் பிடிக்குமென்று நன்றாகவே சமைத்துப் பரிமாறி யிருந்தாள்.

"உங்களுக்குப் பிடித்த தக்காளி ரசம்கூட வைத்திருக்கிறேன்" என்று சொல்லிச் சிரித்தாள். அதில் அழகிருந்தது உண்மை. நான் தினமும் நல்ல உணவை இப்படியே சாப்பிடக் கொடுத்து வைத்தவனா? மாதம் பிறந்த முதல் நான்கு நாட்கள் தானே என் நாக்கு சப்பு கொட்டும். பிறகு இருபத்தாறு நாட்கள் ஏங்கும்; மனமும் ஏங்கும்.

"நன்றாகச் சமைத்திருக்கிறாய், தங்கம்!"

"பாவம், மாதத்தில் மூன்று நாட்களோ, நாலு நாட்களோ தானே குழந்தைகளும், நீங்களும் சாப்பிடுகிறீர்கள். நாம் என்ன பெரிய அதிகாரி வீட்டைச் சேர்ந்தவர்களா?"

நான் திடுக்கிட்டு மீண்டும் நிமிர்ந்தேன். என் எண்ணங்கள் போலவா அவன் இதயத்திலும் பிறக்க வேண்டும்?

நான் சாக்குக் கட்டியுடன் கரும் பலகையை நெருங்கினேன். என் வேலையின் ஆரம்ப கட்டம் அது. பையன் கணக்கைப் படிக்க ஆரம்பித்தான்.

''ஒருவர் மாதம் முந்நூறு ரூபாய் சம்பளம் வாங்கி அதில்...''

சாக்குக்கட்டி கையில் விறைத்து நின்று விட்டது. மாதம் ரூபாய் முந்நூறு வாங்கி... வாங்கி...பாங்கியில் ரூபாய் நூறைப் போட்டு, மீதியில் நூறை நகைகள் வாங்கி...மீதியை...

கற்பனை கொடி கட்டிப் பறந்தது மனத்தில்.

''என்ன சார்?''

நான் திடுக்கிட்டு விழித்தேன்.

''டேய். இயாகு கணக்கைப் படி மறு படியும்!''

''ஒருவர் மாதம் ரூபாய் முந்நூறு சம்பளம் வாங்கி...''

அவன் படித்து முடிப்பதற்குள் சின்னப் பையன் ஒருவன் மற்றொருவன் காதில் ஏதோ சொன்னான். பாடம் கவனிக்காமல் பேசுவதா ?

''டேய் சுந்தர்...என்ன பேச்சு அங்கே?''

''ஒண்ணுமில்லே சார். 'மாதம் முந்நூறு ரூபாய் நம் சார் வாங்குவாரா?' ன்னு கேட்கிறான் சார்.''

''ஓஹோ''

''நீங்கள் அதிகாரியாக இருந்தால் ரூபாய் முந்நூறுக்குமேல் கிடைக்கும்இல்லையாசார்?''

''உம்!''

பையன்கள் சகஜமான பாவத்துடன் கேட்டார்கள். நானும் ஏதோ பதில் சொன்னேன். கணக்குப் புத்தகத்தில் இலக்கமியின் வருமானத்தையா போட்டுக் காட்டுகிறார்கள்? ஏதோ என்னால் முடிந்த மட்டும் மாதம் ரூபாய் முந்நூறு சம்பளம் வாங்கும் அதிகாரியின் கணக்கை முடித்தேன்.

வீட்டுக்குப் புறப்பட்டு விட்டேன். மனத்தில் என் வீட்டுக் குழந்தைகளின் அரைகுறை ஆசைகள் வார்த்தைகளாக மாறி ஒலிப்பதை உணர்ந்தேன்.

பள்ளிக்கூடத்திலிருந்து முப்பது கஜம் நடந்து ஒரு கடையின் முன் போய் நின்றேன். அந்தக் கடையில் பீடா, வாகிரி வஸ்துக்கள். கமகம வென்று வீசும் சாம்பிராணிப் புகை, கடை நடுவே மாட்டியுள்ள சின்ன முருகர் படம் எல்லாவற்றையும் நான் தினமும் தரிசித்து விட்டுப் போவேன். கடைக்காரனும் ''வாத்தியாரையா வாங்க. வணக்கமுங்க'' என்பான். மற்றப்படி எந்த விதமான பேரமும் கிடையாது.

''வாத்தியாரையா. நம்ம தெருவுக்கு யாரோ பெரிய உத்தியோகஸ்தர் வந்திருக்காராமே!''

''ஆமாம்! கேள்விப்பட்டேன்.''

''அதோ போகிறார், பாருங்கள்.''

கண்கள் அதிகாரியைப் பார்த்தன. அவர் மெள்ள நடந்து போய்க் கொண்டிருந்தார். அவர் ஏன் நடந்து போகவேண்டும்? ஒரு சைக்கிளில் போகலாமே? இல்லையெனில் ஒரு வண்டியிலாவது போகலாமே !

''வாத்தியாரையா, நமக்குப் பணமிருந்தா எப்படியெல்லாம் புத்தி போகுது. அதனும் தான் ஆண்டவன் நமக்குக் கொடுக்கலே. பணத்தை அளவா உபயோகப்படுத்த தெரிஞ்சவங்க நம்ம அதிகாரிங்க.''

கடைக்காரன் சொல்வதைக் கேட்ட வண்ணம் நான் மீண்டும் நடையை அதிகப் படுத்தினேன். 'வாழ்வும், தாழ்வும் எல்லோருக்கும் சமம். இதிலே மனிதர்களைப் பணத்தைக் கொண்டு எடை போடக்கூடாது. மனித மனத்தை எடை போடவேண்டும்' என்று என்னுள் நானே பேசிக்கொண்டு, அந்த நேர தத்துவ விசாரத்துக்குத் தலை வணங்கி நடந்தேன்.

மறுநாள்.

வேலைக்காரி, ''கேட்டியா அம்மா. அவரே காய்கறி எல்லாம் வாங்கறார்'' என்றாள்.

''யாருடி அது?''—என் மனைவியின் குரல்.

''புதுசா வந்தவராம். பெரிய உத்தியோகமாம்.''

''அதிகாரியா?''

''அப்படித்தான் சொல்றாங்க. நமக்கு எங்கேம்மா கோண எழுத்து வாயில் வருது?''

ஜன்னல் மூலம் கண்கள் வெளியே பார்த்தாலும் காதுகள் சம்பாஷணைகளைக் கேட்டன. அதிகாரியே காய்கறி வாங்குகிறார் ! ஆச்சரியம் !

ஒருவேளை இன்ன இன்ன காய்கறிகளை அவரே எடுத்துச் சமையலுக்குக் கொடுப்பார் போலும். இது பெரிய விஷயமா? பெண்களுக்கெல்லாம் இதெல்லாம் பெரிதாகப் படுவதேன்! அதிகாரி வாங்கக்கூடாதா, என்ன? நான் சிரித்துக் கொண்டே அன்றைய வகுப்புப் பாடங்களைத் தயார் செய்தேன்.

''மணி...! மணி!...''

பழைய குரல்போல் தென்படவே எட்டிப் பார்த்தேன். நண்பன் சேதுராமன்தான் கூப்பிட்டவன்.

''வாடா...வா...எங்கே இப்படி?''

''ஒண்ணுமில்லே...சும்மா வந்தேன். நம் தெருவில் உள்ள புதிய ஆளைப்பார்த்தாயா?''



''என்னடா இது? எல்லோரும் அவரையே பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறீர்கள். எனக்கு அவர் லட்சியவாதி மாதிரி தெரிகிறது. அநாவசியமாக அவர் காரியங்களைக் கவனிப்பது நம் வேலையா? இது நல்லதாடா?''

சேதுராமன் என்னை விறைத்துப் பார்த்தான். பிறகு ஏதோ நினைத்து முடிவாக ''மணி, நம்போல் எல்லோரும் இல்லை. அந்த அதிகாரி கத்த கஞ்சன் என்று வெளியே பேசிக் கொள்ளுகிறார்கள். அவ்வளவுதான் எனக்குத் தெரியும்'' என்றான்.

நான் திகைத்தேன். என் திகைப்புக்குக் காரணமான அந்த அதிகாரி மீண்டும் தெரு வழியே நடந்தார். கையில் ஒரு பை. கூட ஒருவன். ஒருவேளை பியூனாயிருக்கலாம்!

நானும் சேதுராமனும் ஒரு நிமிடம் மௌனமாக இருந்துவிட்டு ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டோம்.

''மணி! அந்த அதிகாரி மாதம் கிட்டத்தட்ட நானூறு ரூபாய்க்கு மேல் சம்பளம் வாங்குகிறாராம். வீட்டில் இருப்பது யார்யார் என்று முடிவாகத் தெரியவில்லை. ஒரு மகன், ஒரு பெண் இருப்பதாகத் தெரிகிறது. எல்லா வற்றிலும் மீதிவைத்து, தாமும் சாப்பிடாமல், பிறருக்கும் பிடிக்காதவரா யிருந்து என்ன சாதிக்கப் போகிறாரோ...?''

சேதுராமன் என் எண்ணங்களைக் கிளறி விட்டு விட்டு மௌனமாகப் போய் விட்டான்.

'அப்படியும் இருக்குமா? ஏன் இருக்கக் கூடாது? அதிகாரி சேர்த்து வைத்துப் பெண்ணுக்கு வரன் தேடுகிறாரோ? ஒருவேளை பையன் மேல் படிப்புக்காகச் சேர்க்கிறாரோ? உம். குறிப்பிட்ட எல்லை வகுத்துக்கொண்டு வாழவேண்டி யிருக்கிறதே என் போன்றவர்கள்!...'

அன்றைய வகுப்பில் நான் சிறுவர்களுக்கு என்னதான் சிரமப்பட்டுக் கணக்கைச் சொல்லிக் கொடுத்தாலும் எனக்கே திருப்தி ஏற்படவில்லை. மனத்தின் ஏதோ ஒரு மூலையில் திடீர் திடீரென்று 'நீ என்ன அதிகாரியா?' என்று கேள்வி வந்து போவதுபோல உணர்ந்தேன். எனக்கு என் பலவீனம் நன்றாகவே தெரிந்தது.

அன்று மாலை.

உள்ளூர்ப் பூங்காவில் உலவ ஒரு சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொண்டு நடந்தேன். ஒரு சாதாரண இடத்தில் அதிகாரி உட்கார்ந்து ஏதோ யோசித்தவண்ணம் இருந்தார். என்ன யோசனையோ?

அவருடைய முகத்தில் மகிழ்ச்சிக்குரிய பாவமோ, சிரிப்பின் அலையோ தெரியவில்லை. கண்கள் எதையோ நினைத்து விசாரப்படுவது போல் இருந்தன. என்னைக் கண்டு அவரோ, அவரைக் கண்டு நானோ 'வணக்கம்' சொல்லிவிட்டுப் பேச்சைத் தொடங்க முடியாதவர்களாக இருந்தோம். எனவே நான் சிறிது நேரத்துக்குப் பிறகு பார்க்கிலிருந்து வெளியே வந்தேன்.

'ஐயா உள்ளே எங்காவது இருக்காங்களா, சார்?' என்று அவசர அவசரமாக வந்த அதிகாரியின் வேலைக்காரன் கேட்டான்.

''இருக்கிறார்...இருக்கிறார். என்ன அவசரம்? படபடப்பாக இருக்கிறாயே!'' என்று நானே அவனிடம் வலியப் பேசினேன்.

'' ரொம்பப் பரிதாபம் சார், எங்க அதிகாரியின் கதை'' என்று அவனே வேகமாக ஆரம்பித்தான். நான் காது கொடுத்துக் கேட்கத் தயாரானேன்.

'எங்க அதிகாரியின் கஷ்டம் சொல்லி முடியாது சார். அவர் சம்சாரத்துக்கு டி. பி. யாம். பட்டணத்துலே எங்கோ சேர்த்து வைத்தியம் செய்கிறார். அவர் பையன் பெரியவனுக்குச் சித்தப் பிரமையாம். கையிலும் காலிலும் விலங்கு போட்டு வீட்டில் கட்டி வைத்திருக்கிறார். அந்தப் பையன் மனம் தெளியத் தினம் வைத்தியம், பூஜை, மந்திரம், ஜபம் நடக்கின்றன. அதோடு விட்டதா? அதிகாரியின் மூத்த பெண் புருஷனுடன் வாழாமல் சண்டை போட்டுக் கொண்டு அப்பாவுடன் இருக்கிறது. தினமும் சண்டைதான் வீட்டில். சமைக்க ஓர் அத்தை வந்திருக்கிறாள். உறவோ, இல்லையோ 'நான் அத்தை' என்று சொல்லிக் கொண்டு திருட்டுத்தனமாகச் சாப்பிட்டு விட்டுச் சண்டைக்குத் தூபம் போடுகிறாள். அதிகாரி ஐயா இலங்க இட்டே தினமும் படும்பாடு நரகம் தான். என்ன சம்பாதித்து என்ன புண்ணியம் சொல்லுங்க சார்? மனுஷனுக்கு நிம்மதி வேணுமுங்களா? எங்கே சார் அவர்? இன்றைக்கு அந்தச் சித்தப் பிரமைக்கும் அந்தப் பெண்ணுக்கும் ஒரே சண்டை. பார்க்கவே பயமாயிருக்கு. அவர்தான் தீர்த்து வைக்கணும். ஐயா எங்கே இருக்கார்? அந்த மூலையிலா? வர்றேன் சார்...''

அந்த வேலைக்காரன் போய்க் கொண்டிருந்தான். அந்த அதிகாரி சில நிமிட நிம்மதி தேடி வந்திருந்தாரோ, என்னமோ? அந்த நிம்மதியைக் குலைக்க வீட்டுச் சண்டையுடன் இந்தப் படுபாவி வந்துவிட்டானே! என் மனம் அவருக்காக உருகியது. பாவம், அதிகாரி!





# படித்துப் பாருங்கள்



## ஆராமுது அசடா?

அப்படித்தான் நினைப்போம் நாம் முதலில். ஆனால் அப்படி நினைக்கும் நம்மையே கடைசியில் அசடாக்கிவிடுகிறார் இந்த நாடகத்தை எழுதியுள்ள ஸ்ரீ டி. கிருஷ்ண மூர்த்தி. ஆம், அசடு மாதிரித் தோன்றியே சிக்கல்களை அவிழ்த்து வைக்கும் சமர்த்துப் பிள்ளையாக்கும் ஆராமுது. சம்பவங்களில் சிறப்பையோ, கோவையையோ தேடாது, ஹாஸ்யம், காதல், கோபம் முதலிய உணர்ச்சிகளை மட்டும் காண விரும்புவோர் இந்தப் புத்தகத்தை வாங்கிப் பார்க்கலாம்.

எழுத்தில் ருசித்த பல கதைகள் மேடையில் சோபை குன்றியதுண்டு; மேடையில் வெற்றி கண்ட இந்த நாடகமும் எழுத்தில் 'ஒரு மாதிரி'தான் இருக்கிறது. எழுத்தில் மர்மமாகக் காணும் புதிர்கள் மேடையில் எடுத்த எடுப்பிலேயே வியக்தமாகி விடுவதுண்டு; மேடையில் மர்மமாக இருந்த புதிர்களைக் கூட ஆசிரியர் தமது ''நாடகப் பாத்திரங்கள்'' என்ற குறிப்பில் முதலிலேயே உடைத்திருப்பதுதான் ஏனென்று புரியவில்லை.

பிரசுரம்: அமுத நிலையம், தேனாம்பேட்டை, சென்னை-18; மலிவுப் பதிப்பு, 30 காசு; கிளேஸ் பதிப்பு ரூ. 1-25.

## ஆற்றின் மோகம்

இந்தப் புத்தகத்தைப் பற்றிச் சொல்ல வேண்டுமானால், ராஜாஜி அவ்வப்போது எழுதிய வேதாந்தக் கட்டுரைகளையும் வேறு சில கட்டுரைகளையும் கொண்டது என்று சுருக்கமாகச் சொல்லி விடலாம். ஆனால் வேதாந்தம் மற்றவர் சொல்லும்போது, இன்றைய வாழ்க்கைக்குப் பயன்படுமா என்ற சந்தேகம் எழுகிறது. இன்றைய மனிதனின் நிலைமையை யுணர்ந்துகொண்டு சொன்னதாக இருக்கிறது.

மேனாடுகளில் நாகரிகமும் வாழ்க்கை வசதிகளும் பெருகப்பெருக மக்கள் மன நிம்மதியையும் சந்தோஷத்தையும் அடையவில்லை. மூளைக் கோளாறும் மன வியாதியும் பிடித்தவர்களின் எண்ணிக்கை பெருகி வருகிறது என்று படிக்கிறோம். இதைப் படித்துவிட்டு ராஜாஜியின் பின்வரும் மொழிகளைப் படிக்கும்போது நம் மனத்துக்கு ஆறுதல் ஏற்படுகிறது.

''பக்தியும் கடவுளைத் தேடும் முயற்சியும் அதனால் அடையும் ஆனந்தமும் இல்லாமற் போனால் வியாதி நிச்சயம். சித்தக் கோளாறு நிச்சயம். இது இயற்கை நியதி!''

இவ்வளவு வேகம் பொருந்திய வாக்கியங்களை ராஜாஜியைத் தவிர யாரால் எழுத முடியும்! வேதாந்தத்தின் உண்மை நிலையையும் நாம் நன்கு உணர்கிறோம்.

''யுவர்களுக்கு வேண்டுகோள்'' என்ற கட்டுரையில், சமுதாய சீர்திருத்தம் என்ற பெயரில் பரம்பரை பரம்பரையாக வந்த நல்ல பழக்கங்களைத் தற்காலத்து இளைஞர்கள் விட்டுவருவதை மிகவும் வருத்தத்தோடு பேசுகிறார். அத்துடன் தேசம் இளைஞர்களிடம் என்ன எதிர்பார்க்கிறது என்பதையும் மிகத் தெளிவான மொழிகளில் கூறுகிறார்.

''இளைஞர்களே! நாட்டுக்கு நீங்கள் புரிய வேண்டிய மகத்தான பணியிருக்கிறது. மகத்தான ஒழுக்கப் புரட்சி உங்களால் செயல்பட வேண்டும் என்று தேசம் காத்திருக்கிறது.''

''நடிகக்கலை'' என்ற அருமையான கட்டுரையில், அக்கலை மிக உயரியதாயினும், அது வரம்புக்குட்பட்டே தொழிற்பட வேண்டியிருக்கிறது என்பதை எடுத்துக்காட்டியிருக்கிறார். அதனால் ''நாடகங்களையும் படங்களையும் பார்த்து, காவியங்களைப் படிக்கும் பழக்கத்தையும் ருசியையும் இழந்து விடலாகாது'' என்று எச்சரிக்கை செய்கிறார்.

பிரசுரம்: பாரதி பதிப்பகம், சென்னை-17. விலை: ரூ. 1.75

## பொதுமக்களும், சட்டங்களும்

உங்கள் தாய்வழிப் பாட்டனார் உயிலை எழுதாமல் இறந்துவிட்டால் அவர் சொத்தில் நீங்கள் பங்கு பெறுவீர்களா? கணவனை வழிக்குக் கொண்டு வருவதற்காக வசிய மருந்து கொடுத்து அவனைக் கொன்றுவிட்ட அப்பெண் சட்டப்படி கொலைகாரிதானா? நிதி மசோதா நிறைவேற்றத்தில் ராஜ்ய சபைக்கு அதிகாரமே கிடையாதா? பார்லிமெண்ட் நிறைவேற்றும் மசோதாக்கள் எல்லாவற்றையும் ஜனாதிபதி அங்கீகரிக்கத்தான் வேண்டுமா?

இவைபோன்ற—தேச நிர்வாகம், குடும்ப வாழ்க்கை, சமூக வாழ்வு—குறித்த பல வினாக்களுக்கும் விடையளிக்கிறது 'பொது மக்களும் சட்டங்களும்' என்ற இந்நூல்.

அதோடு, இன்றைய கோர்ட்டில் ஹரிச் சந்திரன்மீது விசுவாமித்திரர் தாவா தொடர்ந்தால் ஜெயிப்பாரா என்பதுபோன்ற ரசமான கேள்விகளுக்கும் பதில் சொல்கிறது.

அது சரி, அந்த விளக்கம் எல்லோருக்கும் விளங்குமா என்றால் அது வேறு விஷயம். ஆம், ஆங்கில நூல் ஒன்றின் இத் தமிழாக்கம் இன்னும் சரளமாகவும், தெளிவாகவும் இருந்திருந்தால் நூலின் சீரிய நோக்கம் பலிதமாயிருக்கும். கூடிய மட்டும் வழக்கிலுள்ள 'பரிபாஷை'களையும், அவற்றின் ஆங்கிலப் பிரதி பதங்களையும் கொடுத்திருக்கலாம். சட்டத்தைச் சொல்ல வரும் இப் புத்தகத்தில் ACCUSED என்பதற்கு 'எதிரி' என்று இல்லாமல் 'குற்றவாளி' என்று கண்டிருப்பது ஆச்சரியமாக இருக்கிறது.

மூலத்தின் ஆசிரியர்: ஜி. வி. வெங்கட சுப்பாராவ்; தமிழாக்கம்: கே. ராஜாராம்; (தென்இந்திய மொழிகள் புக்டிரஸ்டுக்காக) வெளியீடு: தமிழகம், 59, பிராட்வே, சென்னை-1. விலை ரூ. 2-60.




# திருமண ஊர்வலம்




திருமணப் பாதத்தை மிக
அழகாகவும் சௌகரியமாகவும்
பொருந்தச் செய்ய அருகிலிருக்கும்
பாடா ஸ்டோருக்குச் செல்லுங்கள்.
அங்கு திருமணத்திற்கேற்ற நேர்த்தியான
பலரக காலணிகளைப் பார்க்கலாம்







**Bata**

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஒரேயொரு தரமே தேய்ப்பில் கால்கேட் டென்டல் கிரீம் துர்நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சத விகிதத்தை ஒழிக்கிறது.

கால்கேட் உடனடியாக வாய் துர்நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான பரிசோதனைகள் நிரூபித்தன்னன! இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு! சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித்தால் மட்டும் போதாது—சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டென்டல் கிரீமினால் உங்கள் பற்களை நன்றாகத் துலக்குங்கள். இதன் வீர்யமும், ஊடுருவும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர்நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் நீடித்திருக்கும் அதன் நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்.

வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது!

- ✔ துர்நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பினால், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்மையான பற்களைப் பெறவும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிறார்கள்.

OCG.12 QT-TAM



பொள்ளாச்சி கல்வி ஏஜண்ட் திரு மாணிக்கம் செட்டியாரின் புதல்வி சௌ. சரஸ்வதிக்கும் சிரஞ்சீவி திருஞானத்துக்கும் திருமணம் நடைபெற்றது.



டாக்டர் சிவானந்தா அவர்களின் புதல்வி சௌ. தனலக்ஷ்மிக்கும் திரு சொக்கலிங்கத்துக்கும் மாயவரத்தில் திருமணம் விமரிசையாக நடைபெற்றது.



திருவெண்காடு கல்வி ஏஜண்ட் திரு ரங்கநாத நாயுடு அவர்களின் புதல்வர் திரு ராஜகோபாலுக்கும் சௌ. கமலா பாய்க்கும் திருமணம் நடைபெற்றது.



பம்பாய் ஓவர்சீஸ் கம்யூனிகேஷன்ஸைச் சேர்ந்த திரு கோபாலனுக்கும் சௌ. கல்யாணிக்கும் வெகு விமரிசையாக விவாகம் நடந்தது.



சுகாதார இலாகா உதவி டைரக்டர் திரு வி. ராமய்யர் அவர்களின் புதல்வி டாக்டர் பார்வதிக்கும் டாக்டர் ராஜகோபாலுக்கும் விவாகம் நடந்தது.



தென்றல் துணை ஆசிரியர் திரு ப. புகழேந்தி அவர்களுக்கும் சௌ. கருணை கமலவல்லிக்கும் நாகர்கோயிலில் சிறப்பாக விவாகம் நடந்தது.

# அவசரம்
# அவசரம்
# அவசரம்

கடுமையான சுரம். உடல் நிலை கவலைக் கிடமாயிருக்கிறது... உடனே செய்தி அனுப்ப வேண்டும்

அதற்காகவே "ப்ரயாரிட்டி" தந்தி உள்ளது

நோய், விபத்து, மரணம் இம்மாதிரி சந்தர்ப்பங்களில் "ப்ரயாரிட்டி" தந்தியை உபயோகியுங்கள்.

எல்லா எக்ஸ்பிரஸ், அவசர தந்திகளைவிட இது வேகமாகப் போய்ச்சேரும், செலவும் அதிகம் இல்லை. வழக்கமான எக்ஸ் பிரஸ் தந்திக்கு உள்ள கட்டணம்தான் இதற்கும்.

தந்தியை அனுப்பும்போது மட்டும் "ப்ரயாரிட்டி" என்று குறிப்பிடுங்கள்

உங்களுக்கு சிறந்த முறையில்
சேவை செய்ய எங்களுக்கு உதவுங்கள்

தபால் தந்தி இலாகா

DA 60/623

# நாமக்கல் நரசிம்மர்

## தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான்

கோவையில் ஒரு பரம பக்தர். புகழ் மிக்க பி. எஸ். ஜி. குடும்பத்தினரில் ஒருவர். கிட்டத்தட்ட எண்பது வயது நிரம்பியவர். வேங்கடசாமி நாயுடு என்ற பெயர் உடையவர். அவர் தம் நெற்றி முழுவதிலும் நாமம் போட்டுக் கொள்பவர். நெற்றி நிறைய நீறு பூசுவது அல்லது நாமம் போட்டுக் கொள்வது எல்லாம் நாகரிகம் அல்ல என்று கருதும் இந்த நாளிலும் இப்படி நாமம் போட்டுக் கொண்டு வெளி வருவது என்றால் அதற்கு எவ்வளவோ துணிவு வேண்டும். துணிவைவிட அழுத்தமான பக்தி வேண்டும். இவரை ஓர் இளைஞர் அணுகிக் கொஞ்சம் எகத்தாளமாக, 'பெரியவரே, இதைவிடக் கொஞ்சம் பெரிய நாமமாகப் போட்டுக் கொள்ளக் கூடாதா?' என்று கேட்டபோது, அவர் 'அப்பனே, இதைவிட அகலமாகப் பெரிதாக நாமம் இட்டுக் கொள்ள என் நெற்றியில் இடம் இல்லையே?'' என்றாராம். இந்தப் பெரியவர் போன்றவர்கள், பெருமாளின் இருவடிகளைத் தங்கள் தலையிலே நாம வடிவிலே தாங்குவதில் எல்லையற்ற இன்பம் பெறுகின்றவர்கள்.

சேலம் நகரத்துக்குக் கிழக்கே உள்ள மலைமேலே ஒரு நாமம் பளிச்சென்று தெரியும்படி போட்டிருக்கும். ஒருவரிடம் ஒரு காரியத்தை எதிர்பார்த்து அந்தக் காரியம் நடவாமல், எதிர்பார்த்ததற்கு நேர்மாறாக நடந்துவிட்டால், ஏமாந்தவரிடம் மக்கள் காட்டுவது இந்த மலைமேல் இடப்பட்டிருக்கும் நாமத்தையே என்கிறார்கள் சேலத்து மக்கள். நாமம் போடுவது என்றால் ஏமாற்றுவது என்று பொருள் எப்படியோ ஏற்பட்டு விட்டது. அப்படி ஏமாற்றுக் கச்சவடம் ஒன்றும் செய்யாமலேயே ஒரு தலம் நாமக்கல் என்று பெயர் பெற்றிருக்கிறது. அங்குள்ள மலைமீதும் பெரிய நாமம் ஒன்றையும் காணோம். நா என்றால் நாம் செய்யும் பாபங்களையெல்லாம் நாசம் செய்யக் கூடியது. ம என்றால் மங்களத்தைக் கொடுக்கக் கூடியது என்று பொருள். இப்படிப் பாபத்தைப் போக்கி, மங்களத்தைத் தரும் பகவானின் நாமம் விளங்கும்படி உயர்ந்திருக்கும் மலையே நாமக்கல் ஆகும். இந்த நாமக்கல் என்னும் தலத்துக்கே செல்கிறோம் நாம் இன்று.

நாமக்கல் சேலம் ஜில்லாவில் உள்ள ஒரு பெரிய ஊர். சேலம் நகரத்துக்கு நேர் தெற்கே முப்பத்தொரு மைல் தொலைவில் இருக்கிறது. இந்தத் தலத்துக்குச் செல்ல ரயில் வசதி கிடையாது. சேலம் ஜங்ஷனில் இறங்கி பஸ்ஸிலோ காரிலோ செல்லலாம். போகிற வழியில் பொய்மான் கரட்டையும் பார்க்கலாம். ஊரையடுக்கும்போது நாமக்கல் மலையும் அதன் மீது ஒரு கோட்டை கட்டியிருப்பதும் தெரியும். இத்தலத்தை மகாவிஷ்ணு முழுக்க முழுக்க ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறார். மற்ற இடங்களில் கோட்டை விட்ட இவர் இங்கு மலைக்கோட்டையையே கைப்பற்றி நின்று இருக்கோலத்தில் கோயில் கொண்டிருக்கிறார். மலையின் மேல்புறம் நரசிம்மராகவும், மலையின் கீழ்ப்புறம் ரங்கநாதராகவும், மலைமேல் கோட்டையுள்ளே வரதராகவும் இடம் பிடித்து உட்கார்ந்திருக்கிறார். இப்படி மூன்று மூர்த்தங்களில் இவர் இருந்தாலும் பிராதான்யம் எல்லாம் நரசிம்மருக்குத்தான். ஆதலால் நரசிம்மர் இங்கு கோயில்கொள்ள எழுந்தருளிய வரலாற்றைத் தெரிந்து கொண்டே மேல் நடக்கலாம்.

மகாவிஷ்ணு நரசிம்மாவதாரம் எதற்காக எடுத்தார் என்பது தெரியும். இரணியனைச் சம்ஹரித்த நரசிம்மரது வடிவம் பார்க்கப் பயங்கரமானதாக இருந்திருக்கிறது. திருமகளாம் லட்சுமிகூட அவர் பக்கலில் செல்ல அஞ்சுகிறாள். தேவர்களும் கண்டு நடுங்குகின்றனர். எல்லோரும் அந்தப் பரம பாகவதனாகிய பிரகலாதனையே வேண்டிக்கொள்கின்றனர், உக்கிர நரசிம்மரது உக்கிரத்தைத் தணிக்க. பிரகலாதன் வேண்டிக் கொண்டபடியே சாந்தமூர்த்தி சாளக்கிராம வடிவில் கண்டகி நதிக் கரையில் அமர்கிறது. இதற்கிடையில் பரந்தாமனைப்பிரிந்த திருமகள் கமலவனத்திடையே ஒரு கமலாலயத்தை அமைத்துக் கொண்டு கடுந் தவம் புரிகிறாள். இப்படி கண்டகி நதிக் கரையில் பரந்தாமனும் கமலாலயக் கரையில் திருமகளும் இருக்கும்போது அனுமன் ராம லக்ஷ்மணர்க்காகச் சஞ்சீவி பர்வதத்தை எடுத்து வரச் செல்கிறான். சென்று திரும்பும்போது கண்டகி நதிக் கரையில் உள்ள சாளக் கிராம நரசிம்மரைக் காணுகிறான். அவரையும் எடுத்துக்கொண்டே வருகிறான். வருகிற வழியில் கமலாலயத்தைக் கண்டதும் அங்கு நீர் அருந்த இறங்குகின்றான். நரசிம்மரைக் குளக்கரையில் வைத்துவிட்டு நீர் அருந்துகிறான். திரும்பி வந்து நரசிம்மரை எடுத்தால் அவர் கிளம்ப மறுத்து விடுகிறார். அவர் திருமகளைப் பிரிந்துதான் எவ்வளவு காலம் ஆகிவிட்டது. அவளோ இக்கமலாலயக் கரையில் தவக்கோலத்தில் இருக்கிறாள். அவளுக்கு அருள் புரிய வேண்டாமா? ஆதலால் அங்கேயே தங்கி விடுகிறார். லட்சுமியையும் சேர்த்துக் கொண்டு லட்சுமி நரசிம்மராகவே சேவை சாதிக்கிறார். லட்சுமிக்கும் தனியாக ஒரு கோயில், நாமகிரித் தாயார் சந்நிதி என்று. இருவரையும் இணைத்து வைத்த அனுமாருக்கும் இங்கே ஒரு விசேஷ சந்நிதி.

வண்டிக்காரர்களுக்கு நாம் கோயில் பார்க்க வந்திருக்கிறோம் என்று தெரிந்தாலே அவர்கள் நம்மை நேரே அனுமனது சந்நிதியில் கொண்டுதான் நிறுத்துவார்கள். அவர் கிழக்கு நோக்கியவராய்ச் சுமார் 18 அடி உயரத்தில் அஞ்சலி ஹஸ்தராய் நிற்கிறார். நல்ல கம்பீரமான திரு உரு. இவரைச் சுற்றிக் சுவர் எழுப்பிக் கட்டிக்



**நாமக்கல் நரசிம்மர்**

கதவெல்லாம் போட்டிருக்கிறார்கள். அதனால் அர்ச்சகர் இல்லாவிட்டாலுமே கண்டு வணங்க வாய்ப்பு உண்டு. இந்தக் கட்டிடத்துக்கு விமானம் அமைக்கவில்லை.

இவர் கைகூப்பி நிற்கும் திசை நோக்கி நடந்தால், நரசிம்மர் நாமகிரித் தாயாருடன் கோயில் கொண்டிருக்கும் சந்நிதி வாசலுக்கு வந்து சேருவோம். நரசிம்மரைத் தரிசிக்கக் கொஞ்சம் படி ஏறலாம், ஏறவேணும். அக் கோயில் குடைவரைக் கோயில். மகேந்திர வர்ம பல்லவ காலத்தியது. அனுமார் கொண்டு வந்தது சாளக்கிராம வடிவம் என்பது புராணக் கதை. இன்று நம் கண் முன் காண்பது நல்ல சிலை வடிவம். உட்புற உருவில், பெரியதொரு சிம்மாசனத்தில் நரசிம்மர் வீற்றிருப்பார். 'அளந்து இட்ட தூணை அவன் தட்ட, ஆங்கே வளர்ந்திட்டு, வாள் உகிர்ச் சிங்கமாய் உளந்தொட்டு, இரணியன் ஒண் மார்பு அகலம் பிளந்திட்ட பெருமான்' அல்லவா? ஆதலால் அந்த மூர்த்தியின் திருக்கரங்களில் இன்றும் செந்நிற வண்ணம் இருக்கிறது. திருமாலின் திரு அவதாரங்கள் அத்தனையிலும் ஈடுபட்டு நின்ற அந்த மங்கை மன்னன், நரசிம்மமூர்த்தியை நினைந்து ஒரு நல்ல பாட்டுப் பாடியிருக்கிறார்.

தளை அவிழ் கோதை மாலை
இருபால் தயங்க, எரிகான்று
இரண்டு தறுகண்
அளவு எழ, வெம்மை மிக்க
அரி ஆகி, அன்று பரியோன்
சினங்கள் அவிழ
வளைஉகிர் ஆளி மொய்ம்பின்
மறவோனது ஆகம் மதியாது
சென்று ஓர் உகிரால்
பிளவு எழ விட்ட குட்டம்,
அது வையம் மூடு பெருநீரில்
மும்மை பெரிதே.

என்பதுதான் அவரது பாட்டு. ரத்தக் கறையைக் காண்கிறோமே ஒழிய ரத்தக் கடலைக் காணவில்லை. அதையெல்லாம் இவ்வளவு காலம் கழுவித் துடைக்காமலா வைத்திருப்பார்கள்? நரசிம்மரது கண்களில் அருள் பொழியும் கருணையே நிறைந்திருக்கும். கல் வடிவில் இதனைக் காண இயலாதவர்கள், முன்னால் எழுந்தருளப் பண்ணியிருக்கும் உற்சவ மூர்த்தத்தில் கண்டு மகிழலாம். நரசிம்மன் வெறும் லக்ஷ்மிநரசிம்மனாக மட்டும் இல்லை. ஸ்ரீதேவி பூதேவி சகிதமே எழுந்தருளி யிருக்கிறார். இந்தக் குடைவரையில் காண வேண்டியவர் இந்த நரசிம்மர் மாத்திரம் அல்ல. இன்னும் திரிவிக்கிரமர், வராகர், வாமனர், அனந்தநாரணர் எல்லாம் மூலமூர்த்தியின் இருமருங்கும் பெரிய பெரிய வடிவங்களில் இருக்கின்றனர். எல்லாம் கல்லைக் குடைந்து சுவினித்த வடிவங்கள் என்றால் நம்பவே முடியாது; அத்தனை அழகு ஒவ்வொரு வடிவிலும். 'ஊன்கொண்டவள் உகிரால் இரணியன்தன் உடல் கிழிக்கும்' கோலம் கொஞ்சம் அச்சம் எழுப்புவதாகவே இருக்கும். இங்குள்ள சித்திர வடிவங்களில் சிறப்பானவை அனந்தநாராயணனது வடிவந்தான். பன்னக சயனனாக இருந்தவர் எழுந்து கம்பீரமாக அனந்தனையே ஆசனமாகக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார். தேவர்களெல்லாம் தொழுத கையினராக இருந்தும் நின்றும் ஏவல் கேட்கிறார்கள். திரிவிக்கிரம சரிதம் முழுவதுமே கல்லில் வடித்திருக்கிறான் சிற்பி. வாமனனாக வந்து மாபலியிடம் தானம் பெறுவதும், பின்னர் வாமனன் வளர்ந்து திரிவிக்கிரமனாக உயர்வதும் கண்கொள்ளாக் காட்சி. இவர்களைப் போலவே பூமிதேவியைத் தாங்கிவரும் வராகரும். இவர்களை எல்லாம் காண்பதன்மூலம் தமிழ் நாட்டின் சிற்பக் கலைவளம், கிட்டத்தட்ட ஆயிரத்து முந்நூறு வருஷங்களுக்கு முன் எவ்வளவு சிறந்திருந்தது என்று கொஞ்சம் தெரிந்து கொள்ளலாம் அல்லவா? நரசிம்மரைத் தொழுதபின் நாமகிரித் தாயார் சந்நிதிக்கும் சென்று வணங்கலாம். நரசிம்மர் மேற்கு நோக்கி இருந்தால் நாமகிரித் தாயார் கிழக்கு நோக்கி யிருக்கிறாள். நிறைய அணிகள் பூண்டு, பட்டாடை உடுத்தி, அவள் பெயருக்கு ஏற்ப நல்ல நாமமும் தரித்துக் கம்பீரமாகவே கொலு இருக்கிறாள். இவள் சந்நிதியில் வந்து பிரார்த்தனை செய்து கொள்பவர் பில்லி சூனியம் முதலியவைகளினின்றும் விடுபடுவர் என்பது நம்பிக்கை.

நரசிம்மருக்கு நேரே உள்ள சுவரில் ஒரு துவாரம். அதன் வழியே அனுமாரைப் பார்க்கலாம். இந்தத் துவாரம், நரசிம்மரது கால் அளவுக்கு உயர்ந்திருக்கிறது என்பர். அனுமனது கண்கள் நரசிம்மரது திருவடிகளில் பதிந்திருக்கிறது என்று காட்டவே இதனைச் செய்து வைத்திருக்கிறார்கள் என்றெல்லாம் கூறுவர். இவற்றையெல்லாம் பார்த்துவிட்டே வெளியே வந்து வடக்கு நோக்கி மலையைச் சுற்றலாம். மலையை அரை வட்டம் சுற்றினால் ரங்கநாதர் சந்நிதி செல்லும் படிக்கட்டின் பக்கம் வந்துசேரலாம். படிக்கட்டுகள் ஏறுவது சிரமமாக இராது. இவற்றை ஏறிக் கடந்தால்



திரிவிக்கிரமர்

மூன் மண்டபத்தோடு கூடிய ஒரு குடைவரைக் கோயிலுக்கு வந்து சேருவோம். இக்கோயிலுள் ரங்கநாதர் கார்க்கோடகன்பேரில் தெற்கே தலையும் வடக்கே காலுமாக நீட்டிப் படுத்துக் கொண்டிருப்பார். ரங்கநாதர் கார்க்கோடகன் இருவரையும் உள்ளடக்கிய மண்டபம் எல்லாம் கல்லைக் குடைந்து செய்தவை. அரங்கநாதர் காலடியில் சுவரில் சங்கரநாராயணன் வேறே காட்சி கொடுப்பார். இன்னும் தேவர்கள் முனிவர்கள் எல்லாம் குடைவரையில். இம்மலையைக் குடைந்து குடைவரை கட்டியவனும் மகேந்திர வர்ம பல்லவனே. நல்ல மலையைக் கண்ட இடங்களில் எல்லாம் குடைவரை அமைக்கத் தோன்றி யிருக்கிறது அவனுக்கு. இனி இதற்குப் பக்கத்தில், வெகு காலத்துக்குப் பின்னால் கட்டப்பட்டுள்ள கோயிலில் இருக்கும் ரங்கநாயகித் தாயாரையும் வணங்கலாம். கார்க்கோடகன் எப்படி மலைவழி ஏறி வந்து அரங்கநாதனுக்குப் பாயலாய் அமைந்தான் என்பதையுமே காணலாம். அவன் மலைமீதுஏறி வந்த தடத்தைக் கரிய நிறத்தில் காணலாம்.

ரங்கநாதரைத் தரிசித்த பின் படிக்கட்டுகளில் இறங்கித் தளத்துக்கு வந்து திரும்பவும் கிரிப்பிரதக்ஷிணத்தைத் தொடர்ந்தால் நாம் காண்பது கமலாலயம். இதுதான் அன்று அனுமனது தாகவிடாய் தீர்த்திருக்கிறது. இன்று நாமக்கல் மக்களுக்குப் பிரதான குடிதண்ணீர்க் குளமாக விளங்குவதும் இதுதான். இனித்தான் மலை ஏறி வரதராஜரைக் காண வேண்டும். மலை ஏறுவது சிரமந்தான். வசதியாக ஏறப் படிக்கட்டுகள் இல்லை. அங்கு ஒரு கோட்டை இருக்கிறது. கோட்டைக்குள்ளே கோயில் இருக்கிறது. கோயில் உள்ளே இருக்கிறார் வரதராஜர். இவர் இவ்வளவு உயரத்தில் வந்து ஏறி யிருப்பதற்கு ஒரு வரலாறு உண்டு. பக்கத்திலுள்ள காஞ்சி சென்று கச்சி வரதனைக் கண்டு சேவிக்கும் பழக்கம் உடைய அந்தணர் ஒருவர். வயது முதிர்ந்த போது தளர்ச்சி அடைகிறார். கச்சிக்கு முன்போல் செல்ல முடியவில்லை. அது காரணமாக ஏங்குகிறார். வரதன் அருளாளன் அல்லவா? 'நீர் நம்மைத்தேடிவர இயலாவிட்டால் நாம் உம்மைத் தேடி வருகிறோம்' என்று சொல்லி இங்கு வந்து மலைமீது ஏறி நின்றிருக்கிறான். வரதன் செய்தது ஒரு தப்புத்தான். காஞ்சிக்கு வர இயலாத அந்தணருக்காக இந்த நாமகிரிக்கு வந்தவர் மலை அடிவாரத்தில் அல்லவா இருந்திருக்க வேணும்? மலைமேல் ஏறி நின்று கொண்டால்? நமக்குக்கூட எவ்வளவு தூரம் ஆனாலும் கச்சிக்குப் போய் வருவது எளிதாகப் படுகிறது. இந்த நாமக்கல் மலைமேல் ஏறுவதை விட.

மகேந்திர வர்மன் குடைந்த குடைவரைகளே இங்குள்ளவை என்று கண்டோம். இங்குள்ள கோயில்களைப் பின் வந்த மன்னர்களே கட்டியிருக்க வேண்டும். இக்கோயில் கல்வெட்டுக்களில் இந்தத் தலத்தை அதியேந்திர விஷ்ணு கிருஹம் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. விஷ்ணு கிருஹமே பின்னர் விண்ணகரமாக ஆகி யிருக்கிறது. சங்க இலக்கியம் படித்தவர்களுக்குத் தகடூர் (இன்றைய தர்மபுரி) அதிகமான் நெடுமான் அஞ்சி நன்கு அறிமுகம் ஆகியிருக்க வேண்டுமே. அவன் தானே ஔவைக்கு நெல்லிக்கனி கொடுத்தவன். அவன்வழித்தோன்றல்களே அதிகர் (அதிகப் பிரசங்கிகள் அல்ல) என்று வழங்கப்பட்டிருக்கின்றனர். இந்த அதிகர் குலத்து மன்னன் ஒருவனே கோயிலைக் கட்டியிருக்கலாம். அதனால் அதியேந்திர விஷ்ணுகிருகம் என்று பெயர் பெற்றிருக்கலாம் என்று தோன்றுகிறது.

நாமக்கல் வந்து நரசிம்மர், ரங்கநாதர், வரதர் இவர்களைப் பார்த்ததோடு திரும்பி விட முடியாது. பக்கத்திலே இருப்பது கொல்லிமலை. அங்கு அன்று கொல்லியம் பாவை இருந்தாள் என்பர் சங்க காலச் சான்றோர். அவள் இருந்தாளோ இல்லையோ? இன்று நாமக்கல்லிலிருந்து 15 மைல் தூரத்தில் உள்ள பேளுக்குறிச்சியை (வேளுக்குறிச்சி தான் இப்படி மாறி இருக்கிறது) அடுத்துள்ள கொல்லிமலைச்சாரலிலே ஒரு சிறிய குன்றின் பேரிலே முருகன் நிற்கிறான் வேட்டுவக் கோலத்தில். தலையிலே வேட்டுவனது கொண்டை, வலக்கையிலே தண்டு, இடக்கையிலே ஒரு கோழி. இந்தக் கோலத்தில் தான் வள்ளியை மணம் புணர வந்திருக்கிறான். கொல்லி மலைச் சாரலைக் கண்டதும் அங்கேயே தங்கியிருக்கிறான். அவன் பேரில் ஒரு பாட்டு ஜுருக்கள் ஒருவர் பாடியிருக்கிறார்.

வள்ளிக்கு இசைந்த
    மணவாளன் வேடுவனும்
அள்ளிக் கொளும்பேர்
    அழகுடனே — துள்ளுகின்ற
கோழியினைக் கையிருத்தி
    கொல்லிமலைச் சாரலிலே
வாழுகின்றான் சென்றே வணங்கு

எனவே, அந்த வேட்டுவ முருகனையும் கண்டு தொழுதுவிட்டே திரும்பலாம்.

# அன்பு மகன்

சாதல்லுவர் கருதுமதாருமித்துக் கூடிக் குலாவிக்கிடும்பாடிட இடையேவிளகரு முன்னே பின்னே வில்லன் ஒருவன் குறுக்கிடுவான். அவன் பல இன்னல்கள் விளைவிப்பான். பின்னர் இடையூறுகள் நீங்கிக் காதலர்கள் தம்பதிகளாவார்கள். இப்படியாகக் கடைசியில் முடியும் படத்தைப் பார்த்து மகிழ்ந்து சலித்தவர்களுக்கு அன்பு மகன் ஓர் ஆறுதல் தான்; மாறுதல்தான். ஆனால்! பூரண திருப்தியளிக்கும் என்று சொல்வதற்கில்லை. ஏனெனில் பின்னே மாற்றக் கதைகள் திரைக்குப் புதியனவே அல்ல.

அசோக் நர்ஸிங் ஹோமில், கடமையாலே கண்ணாகப் பணியாற்றி வரும் கைராசிக்கார டாக்டர் ஆனந்தன். அவர் மனைவி ஓர் அன்பு மகனைப் பெற்றுக் கொடுத்து விட்டுக் கண்ணை மூடி விடுகிறாள். சற்றேறக்குறைய ! இதே சமயத்தில், கருவிலே குழந்தை வளரும்போதே கணவனை இழந்த இளம் விதவை ஒருத்தி பிரசவத்துக்காக ஆஸ்பத்திரிக்கு வருகிறாள். அவளைச் சேர்ந்தவர்கள் கைராசிக்காரரான டாக்டர் ஆனந்தன்தான் அவளைப் பார்க்க வேண்டும் என்று வற்புறுத்துகின்றனர். யார் என்ன சொல்லியும் கேட்கவில்லை. டாக்டரும் தம் மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு கடமையைப் பெரிதாக மதித்து அவள் சிகிச்சைக்கு வருகிறார். அவரது கைராசி! அவளது குழந்தை பிறந்தவுடன் மரித்து விடுகிறது. குழந்தையைப் பார்க்காவிட்டால், அந்த அதிர்ச்சியில் அவள் மரித்துவிடுவாள் என்ற நிலை ஏற்படுகிறது. கதைதானே? ஏற்படாவிட்டால் கதை எப்படி முன்னேறும்; தடைப்பட்டு விடாதா? உடனே டாக்டர் ஒரு முடிவுக்குவருகிறார். அவளைக் காப்பாற்றவேண்டித் தம் குழந்தையை அவளுக்கு உடைமையாக்கி விடுகிறார். இத்தனை பெரிய தியாகம் செய்தவருக்கு - அதுவும் சிந்தித்துச் செய்தவருக்குத் திடசித்தம் வேண்டும். உலக இயல்பு புரிந்திருக்க வேண்டும். கடமையிலே கருத்தைச் செலுத்தியவர் தம் குழந்தையிடம் எப்படித் தான் இத்தனை பாசம் கொண்டாரோ ?



இதைச் சொல்ல நாம் யார்? அப்புறம் டாக்டர் தம் துயரத்தை மறப்பதற்காகக் கடமையை மூட்டை கட்டி வைத்துவிட்டு யாத்திரை புறப்பட்டு விடுகிறார். இதன் பயனாக, அவருடன் பல காடுமேடுகளைப் படம் பார்ப்பவர்களும் சுற்றிப் பார்க்க நேருகிறது.

பிறகு துயரத்தை மறந்து திரும்பி வரத்தான் வந்தாரே! குழந்தைப் பாசத்தை மறந்து கடமையிலே கருத்தைச் செலுத்தியிருக்கக் கூடாதா? செலுத்தியிருக்கலாம். இப்படியெல்லாம் நாம் குறுக்கே குறுக்கே கேள்விகள் கேட்டுக் கதையைச் சுட்டிச்சுவராக்கிவிட்டால், சற்றேறக்குறைய பதினையாயிரம் அடிகள் நீளமான படத்தைத் தயாரிப்பதற்கு இடையூறு செய்தவர்களாக அல்லவா ஆவோம்! பெற்ற பாசம் அவரை இளம் விதவையின் இல்லத்துக்கு ஏகச் செய்து, இரண்டு பேருக்குமிடையே ஒரு முடி போட்டுக் கெட்ட பெயரைத் தருகிறது.

இதையெல்லாம் கண்குத்திப் பாம்பாக இருந்து கவனித்துக் கடுகை மலையாக்கிப் பெரிதுபடுத்திக் காட்டுவதற்கென்று ஒரு பாத்திரம்; அதன் லீலைகள் அனந்தம்.

இதற்கிடையில் நர்ஸிங்ஹோமிலேயே பணியாற்றும் மாயா என்னும் நர்ஸ் பல சாகசங்கள் புரிந்து டாக்டர் ஆனந்தனை மணந்து கொள்ளத் திட்டமிடுகிறாள். இதன்பலனாக நடன விருந்து காணச் சென்ற டாக்டர் அவள் அருகில் சென்று அமர்ந்து கொள்கிறார். இதற்கென்றே ஆசனம் ஒன்று அவளுக்கருகில் காலியாக இருக்கிறது. தன் தந்தையின் உதவி கொண்டு மாயா அந்த நடனக் கொட்டகையிலேயே படம் பிடித்துக்கொண்டு, மஞ்சள் பத்திரிகை மூலம் தன்னையும் டாக்டரையும் பிராபல்யப்படுத்திக் கொள்கிறாள். இதன் பலனாக, எவ்விதத் தடையுமின்றி எப்படியோ திருமணமாகி விடுகிறது. ஆயிரம் பொய் சொல்லிக் கல்யாணம் செய்துவைக்க வேண்டியதிருக்க, இப்படியும் ஒரு கல்யாணம் நடக்குமா என்று கேட்பது நியாயமா? அவளது படாடோபச் செலவுகளுக்கெல்லாம் டாக்டர் ஈடு கொடுக்கும்படி யாகிறது. டாக்டர் தமது முதல் மனைவியைக் காதலித்துக் கல்யாணம் செய்து கொண்டவர். எனவே அவரது தந்தை சினந்து தமது பெருஞ் சொத்துக்கு அவர் வாரிசு இல்லை என்று விரட்டி விடுகிறார். ஆனால் சாகும்தருவாயில், டாக்டருக்குக் குழந்தை இருந்தால், தம் சொத்து அதனைச் சேரும் என்று உயில் எழுதி வைக்கிறார். அதன் பலனாக, பணத்தாசை பிடித்த மாயாவின் முயற்சி காரணமாக, ரத்னதேவி என்னும் அந்த இளம் விதவையின் குழந்தையாக வளர்ந்த குழந்தை, கோர்ட்டு முதலிய காட்சிகளுக்குப் பின் டாக்டர் வீட்டை அடைகிறது. பெற்ற பாசம் இல்லாத மாயாவின் காரணமாக, தன்னைப் பெற்று வளர்ப்பவளினும் மேலாக வளர்க்கும் ரத்ன தேவியைத் தேடிக் குழந்தை ஓடுகிறது. அதைத் துரத்திக் கொண்டு மாயா ஓட, அவர்களைத் தேடிக்கொண்டு டாக்டரும்

ரத்னா தேவியும் ஓடிவரக் குட்ஸ்யார்டில் 'பாரல் டிரம்'கள் உருண்டு மாயா என்னும் வில்லி மரிக்கக் குழந்தைக்குத் தாயாக ரத்னா தேவி மீண்டும் பதவியேற்கிறாள். இப்படியாகக் கதை இனிதே முடிகிறது.

இதிலே முக்கிய நடிக நடிகைகளாக வருபவர்கள் நாகேஸ்வரராவ், தங்கவேலு, சாவித்திரி, எம். என். ராஜம், சகஸ்ரநாமம், ஹனி ஈரானி என்னும் குழந்தை முதலியவர்கள். கௌரவ நடிகர்கள் ஸ்ரீ நாகையா, கருணாநிதி ஆகியவர்கள்.

இவர்களில் யாருமே உள்ளத்தைத் தொடும் முறையில் உணர்ச்சி ததும்ப நடிக்கவில்லை. திரைக்கதை ஓடுகிறது; நடிகர்களும் மனத் திரையை விட்டு ஓடி விடுகிறார்கள். குழந்தை ஹனி ஈரானியும், சாவித்திரியும் சிறிது இயல்பாக நடித்திருக்கிறார்கள்.

இந்த இந்தக் கட்டங்களிலே இப்படி இப்படிக் காட்சி விரியும் என்பதைப் படங்கள் பார்த்துப் பார்த்துப் பழகியவர்கள் கூறி விடக்கூடிய அளவுக்குப் படத்தின் பல காட்சிகள் படமாக்கப்பட் டிருக்கின்றன. அவை பார்ப்பவர்களின் மனத்தை ஈர்ப்பதை விட்டு, 'எதிர்பார்த்தது போலவே முடிந்தது. பார்த்தாயா?' என்று பேசத்தான் வைக்கின்றன. ரத்னாதேவி குழந்தைக்குக் கதை சொல்லிக் கதவைத் திறக்கும்பொழுது டாக்டர் நிற்பார் என்பதை ஊகிக்க யாருமே தவற மாட்டார்கள்; தவறவும் இல்லை. இது போல் ஒன்றிரண்டல்ல; பல இடங்கள் பொறுமையைச் சோதிக்கின்றன. இதற்கு ஒரு முடிவு கட்டிப் புது உத்தியைக் கையாளும் நாள் என்றைக்கு வருமோ?

அதோடு உரக்கப் பேசி, மிகைப்பட நடித்தால்தான் உணர்ச்சியும் சுவையும் ஏற்ற முடியும் என்ற எண்ணத்தில் பெரும்பாலான நடிகர்கள் கூப்பாடு போட்டிருக்கிறார்கள். நகைச்சுவை நடிகர் தங்கவேலுவின் நடிப்பு — நகைச்சுவையா அது? — கேலிக் கூத்தாகத்தான் இருக்கிறது. வழக்கறிஞர் சட்டநாதனாக வந்து பெண்டாட்டியின் கையினால் சட்டப் புத்தகங்களாலேயே அடிபடும் காட்சி, அப்பப்பா! கோரம்! 'நகைச்சுவையிலே நம் தமிழ்நாடு இப்படியா பின்நோக்கிப் போக வேண்டும், கடவுளே!' என்று எண்ணத் தோன்றுகிறது. ஆஸ்பத்திரிக்காட்சியும் இப்படிப்பட்ட நடிகர்களை வைத்துக் கொண்டு அல்லோலகல்லோலப் படுகிறது. இப்படியும் வாழ்க்கையோடு ஒட்டாது ஏன்தான் காட்சி ஜோடனை செய்கிறார்களோ? இந்தக் கேலிக் கூத்துகளுக்கு இடையே கருணாநிதி பாடாமல் பாடி, கையசைவு மூலம் தாளம் போடும் காட்சி ஒன்றுதான் சற்று இதமாக இருக்கிறது.

ஒளிப்பதிவு பரவாயில்லை. ஆயினும் காமிரா சிறந்த முறையிலே இயக்கப்படவில்லை.

குட்ஸ் யார்டிலே மாயாவின் இழி செயலால் 'பாரல்'கள் உருளுகின்றன. ரத்னாதேவியைக் கொலை செய்யும் நோக்கத்துடன் அவள் அப்படி உருட்டி விடுகிறாள். அப்பொழுது கூரையின் கம்பியிலே தொங்கிக் குழந்தையைக் காப்பாற்றுகிறார் டாக்டர். குழந்தை டாக்டர் இவர்களின் முக பாவங்களை அப்பொழுது நெருக்கமுறக் காட்டிப் பார்ப்பவர்கள் மனம் பதைக்கும்படி, திகிலுறும்படி, 'என்ன ஆகுமோ?' என்று கவலையுறும்படி செய்திருக்கலாம். இந்த இடத்தில் காமிரா தன் வேலையைச் சரிவரச் செய்யத் தவறி விட்டது. இன்னும் இதுபோன்று பல பல கட்டங்கள் உள்ளன.

அதோடு சொல்லில் அடங்காத உணர்ச்சிகள் மூலம் காட்டவேண்டிய பல இடங்களில் உரையாடல்களைத் திணித்துச் சிரமப்படுத்தியிருக்கிறார்கள். உதாரணமாக, 'உங்களைத் தீயநோக்கோடு அணுகியிருக்கிறேனா?' என்னும் பொருள்பட டாக்டர் ரத்னாதேவியைக் கேட்க வேண்டியதே இல்லை. படத்தைப் பார்ப்பவர்களுக்கு அவர்களுக்கிடையே உள்ள தொடர்பு நன்றாகத் தெரிகிறது. உலகம் எப்படிப் பட்டம் சூட்டுகிறது என்பதை உணர்ச்சிச் சுழிப்பில் காட்டியிருந்தாலே போதுமானது.

'அன்னம்போல் உன்னை' என்னும் பாடல் நன்றாக அமைந்துள்ளது.

கட்டிய வீட்டுக்குப் பழுது சொல்லலாமா என்று கேட்கலாம். சொன்னால், பின் கட்டப் போகிறவர்கள் திருத்திக் கொள்ளலாமே!

கடைசியாக ஒரு வார்த்தை. இந்தப் பகுதியில் எத்தனையோ முறை எழுதியுள்ளதைத் தான் மீண்டும் கூறுகிறோம். திரைப்படத் தயாரிப்பாளர்கள் கதைக்கென்று வடக்கே சென்று ஏன்தான் இப்படித் தெற்கைத் தேய்க்கிறார்களோ, புரியவில்லை!



# சென்ஸஸ் 1961

## பிப்ரவரி 10௳ முதல் மார்ச் 5௳ வரை



இக் தேதிகளுக்கு இடையே நம் நாட்டில் மக்கள் தொகை கணக்கெடுப்பு நடைபெறப் போகிறது. நகரத்தில் அல்லது நாட்டில், வனத்தில் அல்லது குன்றில், கடலில் அல்லது கரையில் எங்கு இருந்தாலும் ஒவ்வொரு நபரும் கணக்கில் சேர்க்கப்படுவர்.

கணக்கெடுப்பு வேலை பிப்ரவரி 10௳ தொடங்கப்பட்டு மார்ச் 1௳ சூரியோதயத்தில் முடிவடையும். கணக்கெடுப்பில் யாரும் விடுபட்டுப் போகாமல் இருப்பதற்காக மார்ச் 1௳க்கும் 5௳க்கும் இடையே மறு கணிப்பு ஒன்று மேற்கொள்ளப்படும். உங்கள் குடும்பத்தினர் எல்லோரையும் கணக்கெடுப்பில் சேர்க்கும்படி பார்த்துக் கொள்ளுங்கள்.

கணக்கெடுப்பவர் ஒரு மாபெரும் பொறுப்பை வகிக்க வேண்டியிருக்கிறது. உங்களாலான உதவியை அளித்து அவர் வேலையை சுலபமாக்குங்கள்.

**எல்லா சென்ஸஸ் விவரங்களும் மிகவும் ரகசியமாகவே இருக்கும். யாருக்கும் தெரிவிக்கப்பட மாட்டாது**

**இந்திய அரசாங்கத்தால் வெளியிடப்பட்டது**

DA-60/643

# சொர்க்கத்தின் நிழல்

ஜெகசிற்பியன்

## அத்தியாயம் பதினைந்து

விவேகானந்தனின் இரும்புப் பிடியில் சிக்கிய அந்தப் பூங்கரம் துவண்டு தொய்ந்தது. அது ஒரு பெண்ணின் கரம் என்பதை அறிந்ததுமே தன் பிடியைத் தளர்த்திவிட்டு சற்றுப் பின் நகர்ந்து நின்று பரபரப்புடன் வெளியே எட்டிப் பார்த்தான்.

ஜன்னல் கம்பிகளால் வெட்டிப் பிளந்து வெளியே தெறித்திருந்த ஒளிக்கோடுகளில் ஒரு பெண்ணின் முகம் தெரிந்தது. கோமதிதான் அங்கு மருட்சியுடன் நடுக்க முற்று நின்றிருந்தாள்.

வியப்பும் வெறுப்பும் வழிந்த கண்களால் அவளை வெறித்து நோக்கிய விவேகானந்தன், "ஹூம்! ...... நீதானா?" என்று கரகரத்த குரலில் முனகியவாறு சட்டென்று திரும்பிப் போய்ச் சாய்வு நாற்காலியில் சாய்ந்தான்.

ஜன்னல் கம்பிகளின் நிழற் கீற்றுக்கள் பதிந்த கோமதி, சுழன்றடிக்கும் காற்றில் சுழலும் பூங்கொடிபோல் நடுங்கிக் கொண்டு நின்றிருந்தாள். அவள் மெள்ளத் தலை நிமிர்ந்து உள்ளே எட்டிப் பார்த்தாள். அந்தப் பயம் செறிந்த துடிப்பு நிலையிலும் அவளுடைய வெளிறிய முகத்தில் ஓர் அழகிய புன்முறுவல் நெளிந்தது அவள் அங்கிருந்து மறைந்தாள்.

கண்களை இறுக மூடி முகத்தை அஷ்ட கோணலாகச் சுளித்துக் கொண்டு உட்கார்ந்திருந்த விவேகானந்தன் சடாரென்று எழுந்து போய் ஜன்னலுக்கு வெளியே எட்டிப் பார்த்தான். பிறகு அதே வேகத்தில் திரும்பி வந்து, சாத்தியிருந்த கதவைத் திறந்தான். அங்கு ஒரு பக்கமாக ஒதுங்கி நின்று கொண்டிருந்தாள் கோமதி.

"உன்னை யார் இங்கே வரச் சொன்னது? நீ ஏன் இங்கு வந்தாய்?" என்று அடித் தொண்டையால் அதட்டிக் கேட்டான் விவேகானந்தன்.

கோமதி பதிலொன்றும் சொல்லாமல் அவனைப் பட்டும் படாததுமாகப் பார்த்துப் புன்முறுவல் பூத்தாள். பிறகு சாவதானமாக உள்ளே சென்று, அறையெங்கும் இறைந்துகிடந்த சுவரொட்டிகளையும் துண்டுப் பிரசுரங்களையும் பொறுக்கி யெடுத்து ஒரு பக்கமாக அடுக்கி வைத்து விட்டு அறையைப் பெருக்கலானாள். பெருக்கிச் சுத்தப் படுத்தியானதும், கூஜாவிலிருந்து ஒரு தம்ளரில் தண்ணீர் நிறைத்துக் கொண்டு வந்து சிறிய மேஜை யொன்றின்மேல் வைத்து, நாற்காலியை அருகில் இழுத்துப் போட்டாள். அதன்பின் தான் கொண்டு வந்து ஜன்னல் சுவர்மீது வைத்திருந்த உணவுப் பொட்டலத்தை எடுத்துவரப் போனாள்.

இதுவரை அவளையே வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்த விவேகானந்தன் விரைந்து போய் அவள் எதிரில் நின்று "இங்கே பார், என்ன இதெல்லாம் நாடகம்?" என்று கடுகடுத்த குரலில் இரைந்து கேட்டான்.

"நாடகமா? அதையெல்லாம் நான் மறந்து அதிக நாட்களாகி விட்டன!" என்று குயிலினும் இனிய குரலில் கூறிக் கலீரெனச் சிரித்த அவள், தன் வலக் கரத்தால் அவனை மென்மையாக ஒதுக்கித் தள்ளிவிட்டு உணவுப் பொட்டலத்தைக் கொண்டு போய் மேஜைமேல் வைத்தாள்.

அவளது பூங்கரத்தால் தீண்டப்பெற்ற விவேகானந்தனின் உடல் ஒரு கணம் சில்லிட்டுக் குளிர்ந்து பின் சூடேறியது. அவளை எரித்து விடுவதுபோல் உறுத்துப் பார்த்துக் கொண்டிருந்தான் அவன்.

"உங்களுக்கு இன்னும் பசிக்கவில்லையா? சாப்பிடுங்கள்! நீங்கள் சாப்பிடுவதைப் பார்த்த பிறகுதான் நான் இங்கிருந்து போகப் போகிறேன்!"

என்று அவனைக் குறும்பாகப் பார்த்த வாறு சொன்னாள் கோமதி.

'' இத்தனை நாட்களாக நீதான் இங்கே எனக்கு இம்மாதிரி உணவுப் பொட்டலம் கொண்டு வந்து வைத்து விட்டுப் போனாயா ?'' என்று வெறுப்புடன் கேட்டான் விவேகானந்தன்.

கோமதி பதிலேதும் சொல்லாமல் மௌனப் புன்னகை பூத்தாள்.

'' உன்னை யார் அப்படிச் செய்யச் சொன்னது ?'' என்று மீண்டும் கடுகடுத்தான் விவேகானந்தன்.

'' உங்களுக்கு ஹோட்டலில் சாப்பிட்டுப் பழக்கமில்லை என்று கேள்விப்பட்டேன். அதனால்தான் என் கைபடச் சமைத்து...'' என்று இழுத்தாள் கோமதி.

'' உனக்கு ஏன் என்னைப்பற்றி இத்தனை அக்கறை ?'' என்று முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு அலட்சியமாகக் கேட்டான் விவேகானந்தன்.

''எனக்கே அது ஏன் என்று தெரியவில்லை. உங்களுக்குத் தெரிந்தால் சொல்லுங்கள்?'' என்றாள் கோமதி.

அவன் அவளை விழித்துப் பார்த்தான். '' அது உனக்கும் தெரிய வேண்டாம் ; எனக்கும் தெரிய வேண்டாம். இங்கிருந்துபோனால் போதும் !''

'' நீங்கள் சாப்பிட்ட இலையை எடுத்துப் போட்டு விட்டுப் போய்விடுகிறேன்.''

''ஓகோ! இத்தனை நாள் நீ கொண்டு வந்து வைத்து விட்டுப்போன உணவை



நான் உண்டுகளித்தேன் என்று எண்ணிக் கொண்டிருக்கிறாய் ? இதோ பார், அந்த உணவுப் பொட்டலங்களெல்லாம் இப்படித்தான் போயின!'' என்று செறுக்குடன் சொல்லிக்கொண்டே விரைந்து போய் மேஜைமீதிருந்த உணவுப் பொட்டலத்தை வெடுக்கென எடுத்து வாசல் பக்கம் வீசியெறிந்தான் விவேகானந்தன்.

அடுத்த கணம், அந்த வீட்டின் வெளி வராந்தாவிலிருந்து யாரோ சிரிக்கும் சப்தம் கேட்டது. திடுக்கிட்டு நிமிர்ந்த விவேகானந்தன் அவ்வொலி வந்த பக்கம் திரும்பினான்.

அவன் வெளியே வீசியெறிந்த அந்த உணவுப் பொட்டலத்தை 'டபக்'கெனப் பற்றி இரு கைகளிலும் ஏந்திக்கொண்டு, '' பிரமாதமான வரவேற்பு ! புதுமையான வரவேற்பு !'' என்று கூறியவாறு உள்ளே வந்தான் சாரங்கன்.

அவனுடைய திடீர்ப் பிரவேசத்தைக் கண்டு திகைத்து விட்ட விவேகானந்தனுக்கு என்ன செய்வதென்றே தோன்றவில்லை. ஏதோ ஒருவிதக் குற்ற உணர்ச்சியால் உடலும் உள்ளமும் குறுகுறுக்க, தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு நாற்காலியில் சாய்ந்தான்.

''தேர்தலில் நிற்பவர்கள் தாம் ஜெயித்தால் நாட்டிலே பாலும் தேனும் பெருக்கெடுத்து



ஓடச்செய்வோம் என்று பேசுவதைத்தான் இதுவரை நான் கேட்டிருக்கிறேன். ஆனால் எங்கள் மாபெரும் மக்கள் தொண்டரான திருவாளர் விவேகானந்தன் அவர்கள் ஜெயித்தால், வீட்டுக்கு வீடு சோற்றுப் பொட்டலங்களாக உருளும் என்று சொல்லாமல் சொல்லி விட்டாரே! பிரமாதம்! பிரமாதம்!'' கோழிக்குஞ்சு கீச்சிடுவதைப் போல் சிரித்த சாரங்கன், கையிலிருந்த பொட்டலத்தைத் தன் நீண்ட மூக்கினால் வேகமாக உறிஞ்சி உறிஞ்சி முகர்ந்து பார்த்தான்.

அவனுடைய இந்தக் குத்தல் பேச்சைக் கேட்டு விவேகானந்தனுக்குக் கோபம் குமுறிக் கொண்டு வந்தது. இரு கைகளின் விரல்களையும் கோத்து முறுக்கியவாறு தன் கோபத்தை அடக்கிக் கொள்ள முயன்றான் அவன்.

அப்போதுதான் ஏதோ அதிசயத்தைக் கண்டு விட்டவன் போல் சாரங்கன் சடக்கென்று திரும்பி, சற்றுத் தொலைவில் அனற்பட்டு உருகும் பனிச்சிலையென அவலத் தோற்றத்துடன் தலை குனிந்து நின்று கொண்டிருந்த கோமதியைப் பரபரப்புடன் பார்த்து, ''அட! நீ ஏன் இந்த நேரத்தில் இங்கு வந்து நின்று கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டான்.

விவேகானந்தனுக்கு மேலும் எரிச்சல் மூண்டது. 'அந்த நாடகக்காரியுடன் சேர்ந்து இவனும் நன்றாக நடிக்கக் கற்றுக் கொண்டு விட்டான். இரண்டு பேருமாகச் சற்று முன் என்னைப் பின் தொடர்ந்து வந்ததைத்தான், நான் பார்த்தேனே; இப்போது ஒன்றுமே தெரியாத மாதிரி இவன் அவளைக் குசலம் விசாரிக்கிறான்' என்று எண்ணிப் புகைந்தான்.

''என்ன மிஸ்டர் விவேகானந்தன், வீடு தேடி வந்தவனை 'வா' என்றுகூட ஒரு வார்த்தை சொல்லி அழைக்காமல் உட்கார்ந்திருக்கிறீரே! அப்படி என் மேல் கோபம் கொள்ள நான் என்ன பிழை செய்தேன்?'' என்று கேட்டான் சாரங்கன்.

விவேகானந்தனுக்கு அங்கு உட்கார்ந்திருக்கவே பிடிக்கவில்லை. விருட்டென்று எழுந்து பக்கத்து அறைக்குப் போய்விட்டான். அந்த அறையில் ஏராளமான கவரொட்டிகள் போராகக் குவிந்து கிடந்ததால் பிடித்தமல்லாத ஒரு வகைக் கமறல் நெடி சூழ்ந்திருந்தது. ஜன்னல் கதவைத் திறந்து விட்டு, அதன் கம்பிகளைப் பிடித்துக் கொண்டு வெளியே கவிந்திருந்த இருளை வெறித்துப் பார்த்தான். அந்த வீட்டிலிருந்து வெளியேறிய யாரோ ஒருவர் வெகுவேகமாகச் சென்று கொண்டிருப்பது இலேசாகத் தெரிந்தது. சாரங்கன்தான் கோபித்துக் கொண்டு கிளம்பிவிட்டாரோ என்று எண்ணிய விவேகானந்தன் துணுக்குற்றான். அவசரமாக அங்கிருந்து கூடத்தறைக்கு வந்தான்.

“அப்பாடா! என்ன பசி! என்ன பசி!” என்றவாறு பெரிதாக ஏப்பம் விட்ட சாரங்கன், கையையும் வாயையும் துடைத்துக் கொண்டு சாவதானமாக நிமிர்ந்து உட்கார்ந்தான்.

சுற்றுமுற்றும் பார்த்தபடி விவேகானந்தன், அங்கு கோமதி இல்லாததைக் கண்டு நிம்மதியாக மூச்சு விட்டான். ஒரு நாற்காலியை வேகமாக இழுத்துப் போட்டு உட்கார்ந்து கொண்டு, “சாரங்கா! என்ன இதெல்லாம்? இரண்டு பேருமாகச் சேர்ந்து என்னைப் பைத்தியக்காரனாக்குவது என்று தீர்மானித்து விட்டீர்களா?” என்றான் படபடப்பான குரலில்.

சாரங்கன் கண்களை இடுக்கிப் புருவங்களை நெளித்துக் கொண்டு அவனை ஒரு தினுசாக ஏறிட்டுப் பார்த்தான். பிறகு மூக்குத் தெறித்துவிடுவதுபோல் ஒரு தும்மல் தும்மிவிட்டு, “ஹாம்! தலைகீழாகத் தொங்கும் வௌவாலுக்கு இந்த உலகம் தலைகீழாகத்தான் காட்சியளிக்கும்!” என்றவன் சட்டென்று நிமிர்ந்து, “இங்கே பாரப்பா! உன்னைப் பார்ப்பதற்காக நான் இங்கே வந்தது உனக்குப் பிடிக்கவில்லையென்றால் அதை ஒரே வார்த்தையில் சொல்லி விடு. எழுந்து போய் விடுகிறேன். சுற்றி வளைத்துக் கேள்விகள் கேட்டு உன் பேச்சுத் திறமையை என்னிடம் காட்டாதே!” என்றான் அலட்சியமாக.

ஆத்திரமடைந்த விவேகானந்தன் ஏதோ சொல்ல வாயெடுத்தான். அதற்குள் சாரங்கன் இடுக்கிட்டுச் சொன்னான்: “மிஸ்டர் விவேகானந்தன், நீ இப்போது மிகவும் மாறி விட்டாய். ஒரே வாரத்தில் ஒரு மனிதன் இந்த அளவுக்கு மாற முடியுமா என்பதை நினைக்க ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. ஆனால் அப்படி ஆச்சரியப்படுவது சுத்தப் பைத்தியக்காரத்தனம் என்பதையும் என்னால் உணர முடிகிறது. அரசியல் துறையில் ஓர் உயர்ந்த அந்தஸ்தைப் பெறும் முயற்சியில் தீவிரமாக முனைந்திருக்கும் நீ, அந்த முயற்சியால் கிடைக்கவிருக்கும் வெற்றிக்குப்பின் நடந்து கொள்ள வேண்டிய முறைகளுக்கு ஏற்ப இப்போதே தயாராகிக் கொண்டிருப்பாய் என்பதை உணராமல், பழைய குருட்டுத்தனமான நட்புறவின் பேரில் உன்னைச் சாதாரணமாக நான் பார்க்க வந்தது தவறுதான். அதிலும் உன் இருப்பிடத்தை என்னிடம் தெரிவிக்காமலிருந்தும், அதைப் புரிந்து கொள்ளாமல் உன் வீடு தேடி வந்தது மிகப் பெரிய தவறுதான். அந்தத் தவற்றை எனக்கு உணர்த்துவதற்காக நீ இப்படி நடந்து கொள்வது நிரம்பவும் நியாயமானதே. மன்னித்து விடு அப்பனே, மன்னித்து விடு. நான் வருகிறேன்.”

“முட்டாள்! வடிகட்டின முட்டாள்!” என்று உரக்கக் கூவிய விவேகானந்தன், போவதற்காக எழுந்த சாரங்கனை நாற்காலியில் பிடித்துத் தள்ளி விட்டுக் கோபம் செறிந்த குரலில், “ஏ, சாரங்கா! உனக்குக் கொஞ்சமாவது மூளை இருக்கிறதா? நான் என்ன கேட்டேன், நீ என்ன சொல்கிறாய்?” என்று இரைந்தான்.

“உண்மையைச் சொன்னேன்; அதுகூடத் தவறு என்கிறாயா?” என்றான் சாரங்கன் அலட்சியமாக.

விவேகானந்தனின் கண்கள் தீப்பிழம்பாக எரிந்தன. “சே! நண்பர்கள் என்று நான் நம்பியவர்களெல்லாம் எனது வெந்த உள்ளத்தில் வேலை விட்டு ஆட்டுபவர்களாகவே இருக்கிறார்கள்!” என்று வெறுப்புடன் கூறினான்.

சாரங்கன் மனத்தில் இந்தச் சொற்கள் கூரெனத் தைத்தன. முதுகை நெளித்துக் கொண்டு அவனைக் குனிந்து பார்த்தான்.

தலையைத் தாங்கிப் பிடித்தவண்ணம் சற்று நேரம் வரை மௌனமாய் இருந்த விவேகானந்தன் கரகரத்த தொனியில் “சாரங்கா, இத்தனை நாள் பழகியும் என்னை நீ சரியாகப் புரிந்து கொள்ளவில்லையே! உன்னைச் சந்தித்தால், என் வீட்டுக்குப் போய்ச் சேரும்படி என்னை வற்புறுத்தித் தொந்தரவு செய்வாய்; அல்லது என் அக்காவிடமோ அத்தானிடமோ சொல்லி என்னை அழைத்துப் போகும்படிச் செய்வாய் என்பதால்தான் எனது இருப்பிடத்தை உன்னிடம் தெரிவிக்காமல் தலைமறைவாய் இருந்து வந்

இதோ
ஒரு வின்ஸெண்ட்
சாப்பிடுங்கள்,
உம்,
இன்னுமொன்று !





# வின்ஸெண்ட்ஸ்

ஐம்பது ஆண்டுகளுக்கு அதிகமாக
தென்னிந்தியாவின்
அபிமான பானமாக விளங்குவது.



* ஸோடா வாட்டர்
* வின்கோ-கோலா
* ஆரஞ்சு
* மாங்கோ-ஸிப்
* லெமனேட்
* வின்ஸெண்ட் ஸ்பெஷல்

வின்ஸெண்ட் & கம்பெனி(பிரைவேட்) லிமிடெட்
திருச்சிராப்பள்ளி - சென்னை - சேலம் - கும்பகோணம்
காரைக்குடி - திருநெல்வேலி - மதுரை - கோயமுத்தூர்

EP

---




சேவையில்
சிறந்ததென
நிரூபிக்கப்
பட்டது

ஸில்வர்

# எக்ஸைட்

க்ளோரைட் & எக்ஸைட் பாட்டரீஸ் (லண்டன்) பிரைவேட் லிட்.
சென்னை, ஆந்திரா, கேரளா & மைசூர், ராஜ்யங்களுக்கு பிரதான ஏஜண்டுகள்
ஜெனரல் எலக்ட்ரிக் கம்பெனி ஆப் இந்தியா
பிரைவேட் லிமிடெட் - - சென்னை 2
கிளைகள் கோயமுத்தூர், பெங்களூர், ஸெகந்திராபாத்



**18 சிறந்த மூலிகைகள் கலந்து முதல்முதலாகத் தயாரிக்கப்பட்ட**



## ஆயுர்வேதிக்

### பேஸ்ட்டும், பௌடரும்

உலகத்தில் எல்லா டூத்பேஸ்ட்டும், பௌடரும் பற்களை சுத்தம் செய்கிறது. ஆனால், பற்களை பலப்படுத்த என்னென்ன கலவைகள் அதில் சேர்க்கப்பட்டுள்ளன என்று யோசித்துப் பாருங்கள். முதல் முதலாக ஆயுர்வேதிக் 'விக்கோ வஜ்ரடந்தி' (பேஸ்ட்டும், பௌடரும்) 18 சிறந்த மூலிகைகளினால் தயாரிக்கப்பட்டது. ஈறுகளை நன்றாக இறுகச்செய்து பற்களை மிகவும் பலப்படுத்துகின்றன. ஒரு முறை உபயோகித்து திருப்தியடையுங்கள்.

# விக்கோ வஜ்ரடந்தி

## பேஸ்ட்டும், பௌடரும்







**VICCO LABORATORIES**

ஏஜெண்டுகள்:

மெஸர்ஸ் ஆர். எஸ். கௌடர் அண்டு கம்பெனி, சென்னை - 1
மெஸர்ஸ் கே. எஸ். கௌடர் அண்டு கம்பெனி, பெங்களூர்-9
மெஸர்ஸ் என். தேசாய கவுண்டர் அண்டு கம்பெனி, கோயமுத்தூர் - 1

தேன். இந்தச் சிறு விஷயத்தைக்கூடவா உன்னால் ஊகித்துக் கொள்ள முடியவில்லை?" என்றான் எங்கோ பார்த்தவாறு.

சாரங்கனுக்கு ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை. புகை புகுந்த மாதிரி கண்களை கசக்கிக் கொண்டு அவனைப் பார்த்தான்.

"அது சரி; நீ என் அக்காவையோ அத்தானையோ போய்ப் பார்த்தாயா? அவர்கள் என்னைப் பற்றி ஏதாவது விசாரித்தார்களா?" என்று கேட்டான் விவேகானந்தன்.

"ஐயையோ! நான் அங்கு போனால் 'உன்னால்தான் என் பிள்ளை கெட்டு விட்டது' என்று அவர்கள் என் மேல் திரும்பிப் பாய்ந்து விட்டால் என்ன செய்வது? அதற்குப் பயந்து கொண்டே நான் அங்கு போகவில்லை!" என்று தோளைக் குலுக்கிக் கொண்டு சொன்னான் சாரங்கன்.

விவேகானந்தன் இதைக் கேட்டு அலட்சியமாகச் சிரித்தான். "ஹூம்! அவர்கள் ஏன் என்னைப் பற்றிக் கவலைப் படப் போகிறார்கள்? அந்த அளவுக்கு அன்பிருந்தால் என்னை வீட்டை விட்டுத் துரத்தப் போவதாக என் அத்தான் சொல்லியிருப்பாரா? உற்றார் உறவினர்களின் கரிசனம் எல்லாம் ஓர் அளவு வரையில்தான். அதற்கு மேல் அவர்களிடம் எதிர்பார்ப்பது மடத்தனம்! நான் மட்டும் இந்தத் தேர்தலில் தலை கொடுக்காமல் இருந்திருந்தால் இந்நேரம் இந்த ஊரிலேயே இருந்திருக்க மாட்டேன். எங்காவது தலை மறைவாய் ஓடிப் போயிருப்பேன்."

இதற்குச் சரியான பதிலடி கொடுத்துப் பேச வேண்டுமென்று சாரங்கனின் வாய் துடித்தது ஆனால் அவன் ஆத்திரத்தில் மனம் கசந்து பேசுகிறான் என்பதை உணர்ந்து தன் துடிப்பை அடக்கிக் கொண்டு, "அது போகட்டும், விவேகா! உன் தேர்தல் விஷயம் எப்படி இருக்கிறது? அவ்வளவு பெரிய காரியத்தில் ஈடுபட உனக்குப் பண உதவி செய்வது யார்?" என்று கேட்டுப் பேச்சின் திசையை மாற்றினான்.

மெல்லச் சிரித்த விவேகானந்தன், "ஓ...., உனக்கு அந்த விஷயம் தெரியாதா? என் அத்தானின் மருத்துவ விடுதியில் நான் வேலை பார்த்து வந்த போது எனக்கென்று சம்பளத் தொகையை நிர்ணயித்து அதை அவர் என் பெயரில் பாங்கியிலே போட்டு வந்தார். அந்த வகையில் பதினையாயிரம் ரூபாய் சேர்ந்திருந்தது. அந்தத் தைரியத்திலேதான் தேர்தல் களத்திலே குதித்தேன். ஆனால் இப்போது அதில் பாதித் தொகை கரைந்து விட்டது!" என்றான்.

"அடப் பாவி!" என்று கண்களை அகல விரித்தான் சாரங்கன்.

இதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் ஏதோ யோசனையிலிருந்த விவேகானந்தன் சட்டென்று திரும்பி, "அது சரி, நீ வந்ததுதான் வந்தாய், உன்னுடன் அந்த நாடகக்காரியையும் இங்கு ஏன் இழுத்துக் கொண்டு வரவேண்டும்?" என்று சீறிக் கேட்டான்.

குபுக்கென்று சிரிப்பைக் கொப்பளித்த சாரங்கன், "யார் உனக்கு அப்படிச் சொன்னது?" என்று திருப்பிக் கேட்டான்.

"நான்தான் பார்த்தேனே? சற்றுமுன் நான் டாக்ஸியிலிருந்து இறங்கி வந்த போது. நீயும் அவளும் என்னைப் பின் தொடர்ந்து வந்தீர்களே!"

"அப்பனே! கண்ணால் 'காண்பதும் பொய்; காதால் கேட்பதும் பொய்; தீர விசாரிப்பதுதான் மெய்' என்று ஐதர் காலத்துப் பழமொழி ஒன்று உண்டே, அது உனக்குத் தெரியுமா?"

"சும்மா, கதை அளக்காதே தம்பி! எனக்கு எல்லாம் தெரியும்."

"எல்லாம் தெரியும் என்று சொல்லிச் சொல்லித்தான் எதையும் தெரிந்து கொள்ளாமல் திண்டாடுகிறாய்!"

"பொன்மொழிகள் உதிர்க்க ஆரம்பித்து விட்டாயோ?"

"எனக்கு ஏனப்பா, பொன்மொழிகளும். பித்தளை மொழிகளும்! அதெல்லாம் உன் போன்றாரின் ஏகபோகச் சொத்தல்லவா? ஒரு பொன்மொழிக்கு ஒரு 'வோட்' என்று கணக்குப் பண்ணிப் பேச உனக்குத்தான் தெரியும்!"

"நான் கூட அப்படித்தான் நினைத்திருந்தேன். ஆனால் அந்த மாதிரிப் பொன்மொழிகளை மட்டும் அள்ளி வீசினால் போதாது; அவற்றுடன் அச்சடித்த நிக்கல் வில்லைகளையும் வாரித் தெளித்தால்தான் வோட்டு அறுவடை செய்ய முடியும் என்பதை இப்போது தெரிந்து கொண்டிருக்கிறேன்!"

"ஓகோ! புதிய அநுபவமா?"

"அந்த வயிற்றெரிச்சலை ஏன் கேட்கிறாய்? விஷயத்தைச் சொல்!"

"உனக்குத் தெரியாமல் உன்னைப் பின் தொடர்ந்து வந்தாள் அந்தப் பெண்: அவளுக்குத் தெரியாமல் பின்தொடர்ந்து வந்தேன் நான். அவ்வளவுதான்."

"என்னை இதை நம்பச் சொல்கிறாயா?"

"அது உன் இஷ்டம். ஆனால் நடந்தது அதுதான்."

விவேகானந்தன் பதில் ஒன்றும் சொல்லாமல் சாரங்கனை ஏறிட்டு நோக்கினான்.

"ஆமாம், நண்பனே! கடந்த ஒரு வாரமாக உன் இருப்பிடத்தைக் கண்டு பிடிக்க நான் எப்படி யெப்படியோ முயன்றும் முடியவில்லை. இன்று மாலை என் பத்திரிகாலயத்துக்கு ஒரு செய்தி வந்தது. நீ பேசிய தேர்தல் பிரசாரக் கூட்டத்தில் அடிதடி கலாட்டா நடந்ததாகவும், மேடை - பந்தல் எல்லாம் கொளுத்தப்பட்டதாகவும் அச்செய்தி கூறியது. அந்த ரகளையில் உனக்கு ஏதேனும் ஆபத்து நேர்ந்திருக்குமோ என்று பயந்த நான், உடனே ஆபீஸில் லீவு வாங்கிக்கொண்டு, போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் விசாரித்தேன். அங்கு சரியான தகவல் கிடைக்கவில்லை. இன்று எப்படியும் உன்னைத் தேடிக் கண்டு பிடித்துவிடுவதென்ற தீர்மானத்துடன், உடை மாற்றிக் கொண்டு புறப்பட என் வீட்டுக்குச் சென்றேன். அப்போது இரவு மணி ஒன்பது இருக்கும். அந்த வேளையில் கோமதி எங்கோ வெளியே கிளம்பத் தயாராகிக் கொண்டிருந்தாள். இந்த நேரத்தில் இவள் எங்கே செல்வாள் என்ற சந்தேகம் எனக்கு எழுந்தது. அவளுக்குத் தெரியாமல் அவளைப் பின் தொடர்ந்தேன். அப்படித் தொடர்ந்து வந்த என்னைத்தான் சற்றுமுன் நீ சோற்றால் அடித்து வரவேற்றாய்!" என்று ஒரு பெரிய மூக்கு உறிஞ்சலை முத்தாய்ப்பாக வைத்துப் பேச்சை நிறுத்தினான் சாரங்கன்.

"உன்னாலேயே கண்டு பிடிக்க முடியாமற் போன என் இருப்பிடத்தை அவள் எப்படிக் கண்டு பிடித்தாள்...?" என்று தலைகுனிந்தவாறு தணிந்த குரலில் வினவினான் விவேகானந்தன்.

"இதற்கு நான் பதில் சொன்னால், மட்டுப்பட்டிருக்கும் உன் கோபம் மறுபடியும் சீண்டு தட்டிக் கொண்டு கிளம்பி விடும்!" என்று நகைத்தான் சாரங்கன்.

தெற்றிச் சருமத்தை வருடியபடி சற்று நேரம் மௌனமாயிருந்த விவேகானந்தன் உள்ளடங்கிய வெறுப்புக் குரலில் சொன்னான்: "சாரங்கா, கடந்த நான்கு நாட்களாக அந்தக் கூத்துக்காரி இங்கே வந்து ஒரு நாடகம் நடத்தினாளே, உனக்குத் தெரியுமா?"

"சற்று முன்தான் அந்த அநுதாபத்துக்குரிய நாடகத்தைப் பார்த்து நெஞ்சு வலிக்க ரசித்தேன்!"

"பாவம், தன் அன்றாடச் செலவிற்கே பணமின்றி நகைகளைக் கொண்டுபோய் ஐந்துக்கும் பத்துக்கும் அடகு வைத்து அல்லற்பட்டுக் கொண்டிருக்கும் அவள், எனக்கு உணவு சமைத்துக் கொண்டு வருகிறாள் என்றால் இந்தப் பைத்தியக்காரத் தனத்தை என்னென்பது? இதை நினைத்தால் சிரிப்பும்வருகிறது. கோபமும் குமுறுகிறது!"

"நானும் இதைத்தான் அவளிடம் பல முறை சொல்லி விட்டேன். அப்படிச் சொல்லும்போதெல்லாம் அந்த முட்டாள் பெண் என்னையே எடுத்தெறிந்து பேசிவிடுகிறாள்."

"சமயத்துக்கு ஏற்ற பேச்சுப் பேசிச் சமாளிக்கப் பார்க்கிறாயா? உன்னுடைய தூண்டுதல் பேரில்தான் அவள் இப்படியெல்லாம் நடந்து கொள்கிறாள் என்று எனக்குத் தோன்றுகிறது!"

"அட, கடவுளே! அந்த நல்ல பெண்ணுக்கு நான் அவ்வளவு பெரிய கெடுதல் செய்யத் துணிவேனா?"

விவேகானந்தன் இதைக் கேட்டு முகம் சுண்டிப்போனான். அவனையறியாமலே அவனுடைய பார்வை, சிறிது நேரத்துக்கு முன்னால் கோமதி நின்றிருந்து விட்டுப் போன இடத்தை நோக்கித் திரும்பியது. அங்கே இரு சொட்டு நீர்த் துளிகள் தரையில் விழுந்து தெறித்திருப்பதைக் கண்டதும் அவன் மனத்தின் எங்கோ ஓரிடத்தில் ஏதோ ஒன்று கசுக்கிக் கொண்டதைப்போல் வலியெடுக்கவே தன் நெஞ்சை அழுத்திப் பிடித்துக் கொண்டான்.!

## அத்தியாயம் பதினாறு

பொன்னிழைகளால் பின்னப்பட்ட பூதாகாரச் சிலந்தி வலைபோல் மேற்கு வானில் தகத்தகாயமாகச் சரிந்து கொண்டிருந்தது சூரியன். அதன் தங்க ஒளிக் குழம்பில் தோய்ந்த உலகம் அமர ஓவியமாகக் காட்சி யளித்தது.

இம்மாதிரிக் காட்சிகளைச் சலிப்பின்றிப் பார்ப்பதில் பெருவிருப்பம் கொண்டவளான தேவகி, அந்த விருப்பம் சிறிதுமில்லாத ஒரு பாமரப் பெண்ணைப் போல் வராந்தா கைப்பிடிச் சுவரின் மேல் சோர்வுடன் அமர்ந்திருந்தாள். அவளுடைய வீட்டின் மதில் சுவருக்கு அப்பால், சாலையோரமாகச் செல்லும் மின்சாரக் கம்பிகளுக்கிடையே சிக்கிக் கொண்டு தொங்கிய ஒரு செந்நிறக் காற்றாடியின் மீது அவள் பார்வை பதிந்திருந்தது. அறுந்து கிழிந்து காற்றில் அல்லாடிக் கொண்டிருக்கும் அந்தக் காற்றாடியைக் காணக் காண அவள் மனத்தில் பல்வேறு விதமான சிந்தனைகள் நிறைந்து அவற்றின் பிரதிபலிப்பாகக் கண்ணிமைகள் படபடத்தன. தன் மனத்துக்குள் ஏதோ முணுமுணுத்துக்

கொண்டே அங்கிருந்து மெள்ள எழுந்து உள்ளே செல்லத் தொடங்கினாள்.

"அம்மா!"

தேவகி நின்றாள். டிரைவர் காசிநாதன் ஒரு பக்கமாக வந்து நின்று, "நம்ப ஐயா உங்களைப் பரங்கிமலைக்கு வரச்சொல்லிக் காரை அனுப்பி யிருக்கிறாங்க" என்றான்.

"பரங்கிமலைக்கா? எதற்கு?" என்று கேட்டாள் தேவகி.

"நம்ப கம்பெனி மானேஜருடைய மகளுக்கு இன்று கல்யாணமாம்..."

"அதுதான் காலையில் நடந்து விட்டதே?"

"சாயந்திரம் விருந்து. பாட்டுக் கச்சேரி, டான்ஸ் எல்லாம் நடக்கப் போகுதுங்க!"

"அப்பா போகவில்லையா?"

"அவரு போகாம இருப்பாருங்களா? மானேஜர் வந்து அப்படியே அழைச்சுக் கிட்டுப் போயிட்டாருங்க!"

ஒருகணம் யோசித்த தேவகி, "நான் வருவதற்கில்லை என்று சொல்லி விடு, போ!" என்றவாறு உள்ளே சென்றாள்.

"சரிங்கம்மா" என்று தயங்கி நின்றான் காசிநாதன்.



தேவகியின் மனம் இன்று சரியில்லை. மனத்தை யொட்டி இயங்கும் உடலும் சோர்ந்திருந்தது. இன்று மட்டும்தானா அவள் இப்படி இருக்கிறாள்? கடந்த பல நாட்களாகவே அவளது நிலை இவ்வாறுதான் இருந்து வருகிறது.

"என் குழந்தே, போயிட்டு வர்றது தானே? நம்ம மானேஜர் வீட்டுக் கல்யாணமில்லையா? நாமெல்லாம் போனால்தானே அவருக்குக் கௌரவம்" என்று சொல்லிக் கொண்டே வந்தார் தாணுப் பிள்ளை. அந்த வீட்டில் அவருடைய பேச்சுக்கு எப்போதுமே ஒரு தனி மதிப்புண்டு.

தனிமையில் கிடந்து சலித்துப் போயிருந்த தேவகியின் மனம், இந்தச் சாக்கிலாவது வெளியே போய் சற்று ஆறுதல் பெற விழைந்தது. "டிரைவர்" என்று அழைத்துக் கொண்டே எழுந்தவள், "கார் கொண்டு வந்திருக்கிறாய் அல்லவா? 'ஷெட்'டிலிருந்து வெளியே எடுத்து வை. இதோ வருகிறேன்" என்றவாறு மாடிக்குச் சென்றாள்.

பத்து நிமிஷத்தில் தன்னை அழகாக அலங்கரித்துக் கொண்டு இறங்கி வந்த தேவகி, "டிரைவர், நானே காரைச் செலுத்திக் கொள்கிறேன். நீ வேறு வேலையைக் கவனி!" என்று சொல்லிக் கொண்டே காரில் ஏறி அமர்ந்தாள்.

சிரும்பாயாய் விரிந்திருந்த அந்தத் தார்ச் சாலையில் அன்னப் படகு போல் மிதந்து சென்று கொண்டிருந்தது கார். சாலையின் இரு பக்கமும் உள்ள வீட்டுச் சுவர்களிலும், மதில்சுவர்களிலும், மரங்களிலும், விளக்குக் கம்பங்களிலும், 'மக்கள் தொண்டர் விவேகானந்தனுக்கு வோட்டுப் போடுங்கள் - ஏழை பங்காளர் விவேகானந்தனுக்கே எங்கள் வோட்டு - பகுத்தறிவுச் சிங்கம் விவேகானந்தனை ஆதரியுங்கள்' என்பன போன்ற வரிகள் பொறித்த பெரிய பெரிய போஸ்டர்கள் கண்ணைக் கவரும் வண்ணங்களில் பளிச்சிட்டுக் கொண்டிருந்தன. நிதானமாகக் காரைச் செலுத்திச் சென்று கொண்டிருந்த தேவகியின் கவனத்தையும் அவை கவர்ந்தன. அந்தச் சுவரொட்டிகளைப் பார்த்ததுமே அவள் மனத்தில் ஏதேதோ எண்ணங்களெல்லாம் கிளைத்துப் படர்ந்தன.

'பாவம், அந்த வாலிபருக்கு நம்மால் எவ்வளவு பெரிய ஏமாற்றம்! அவருக்கு மட்டுமா? அவருடைய குடும்பத்தாருக்கும் கூடத்தான்! அவரை நான் மணக்க விரும்பவில்லை என்று தெரிவித்த பிறகு அவர் குடும்பத்தில் ஒரு பெரிய புயலே வீசி யிருக்கிறது! சாந்தசொரூபியான டாக்டர் ராமநாதனை தம் மைத்துனர் மீது வெறுப்படைந்து பேசவும், அதனால் அவர் கோபித்துக் கொண்டு வீட்டை விட்டு வெளியேறவுமான அநுசித சம்பவங்கள் நிகழ நான் காரணமாகி விட்டேன்! வெளியே போய்த் தனிமையில் இருந்து கொண்டு அவர் எவ்வளவு கஷ்டப்படுகிறாரோ! அதுவும் இந்தத் தேர்தல் களத்தில் இறங்கி நிற்கும் அவருக்குப் பக்கபலமாக யாருமின்றிப் பல கஷ்டநஷ்டங்களுக்கும் சோதனைகளுக்கும் உள்ளாகி யிருப்பார்! அவர் இந்தப் பெருமுயற்சியில் வெற்றியடைவாரோ, தோல்வி யடைவாரோ? வெற்றிதான் அடைய வேண்டும் — வெற்றி பெறுவார்! என்னுடைய வாக்கு நிச்சயமாக அவருக்குத்தான்!...

சே, அந்த இருதயமற்ற வாலிபனுக்கா வோட்டுப் போடுவது? ஒரு மாபெரும் இசைக் கலைஞனின் வாழ்க்கையையே குட்டிச்சுவராக்கத் திட்டமிட்ட அந்த இரக்கமற்றவனுக்கா வோட்டுப் போடுவது? ஏழை பங்காளனும், ஏழை பங்காளன்! அன்று கடற்கரையில் கையேந்தி நின்ற ஏழைச் சிறுவனுக்கு மண்ணை வாரிக் கொடுத்து விரட்டிய மமதையாளன் அல்லவா அவன்? அறிவுக்கு மனச்சாட்சியை அடகு வைத்துவிட்ட கல்நெஞ்சன்! இந்த மாதிரி நபர்களுக்கு வோட்டுப் போட்டால் அது நாட்டுக்குச் செய்யும் துரோகமாகும்!'—

நிதானமாகச் சென்று கொண்டிருந்த காரின் வேகம் திடீரென்று மிகுதிப் பட்டது. மனத்தில் ஏற்பட்ட கசப்பு உணர்ச்சியால் காரை வேகமாகச் செலுத்தினாள் தேவகி. ஆனால் கொஞ்ச தூரம் வரையில்தான் அப்படி விரைவாகச் செலுத்த முடிந்தது. அப்புறம் அதன் வேகம் முன்போல் தணிந்து விட்டது. காரணம், இப்போது சென்று கொண்டிருந்த சாலையில் ஜன நெருக்கம் மிகுதியாயிருந்தது!

அந்தச் சாலையில் எப்போதுமே இவ்வளவு ஜன நடமாட்டம் இருக்காது. இன்றுமட்டும் ஏன் இந்த நெரிசல்? யாராவது வெளிதேசப் பிரமுகர்கள் ஊர்வலமாக வருகிறார்களா? அல்லது எந்தக் கோயிலிலேனும் தேர்த் திருவிழா நடக்கிறதா? அப்படியெல்லாம் ஒன்றும் தெரியவில்லையே! அடேயப்பா, எத்தனை கார்கள்! ஒன்றன் பின் ஒன்றாகச் சங்கிலித் தொடர்போல் ஊர்ந்து செல்கின்றனவே!...

தேவகியின் காரும் அவற்றைப்போல் நகர்ந்து போகவேண்டியதாகி விட்டது. சலிப்படைந்த தேவகி, வேறு வழியில் திரும்பிப் போய்விடலாமா என்று ஒரு கணம் எண்ணினாள். ஆனால் அவளுடைய காருக்குப் பின்னால் மற்றொரு நீண்ட கார் வரிசை வந்து கொண்டிருந்ததால் அது சாத்தியப்படவில்லை. என்னதான் விசேஷம் நடக்கிறதென்று பார்ப்போமே என எண்ணியவளாய்ப் பொறுமையுடன் காரை மெள்ளச் செலுத்திக் கொண்டிருந்தாள். இப்படியே சுமார் ஒரு பர்லாங்கு தூரம் சென்றதும், அந்த ஜன நெரிசலுக்குரிய காரணத்தை அவள் கண்டுபிடித்து விட்டாள்.

சாலையின் திருப்பு முனையில் ஒரு சங்கீத சபா மண்டபம் கம்பீரமாக நின்றிருந்தது. தோரணங்களால் அலங்கரிக்கப்பெற்றிருந்த அந்த மண்டபத்தின் மேலே, 'வேணுகானச் சக்கரவர்த்தி மோகனசுந்தரத்தின் கச்சேரி இன்று மாலை ஆறு மணிக்கு நடைபெறுகிறது' என்று கொட்டை எழுத்துக்களில் வரையப்பெற்ற ஒரு 'பானர்' காட்சியளித்தது! மண்டபத்தின் எதிரே சொல்ல முடியாத ஜனக் கூட்டம்!

தேவகி பரபரப்படைந்தாள். அவள் மனம் மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்தது. இதுவரை—ஏன், இத்தனை நாட்களாக—சிறிதும் உற்சாகமின்றி உள்ளமும் உடலும் சோர்ந்த நிலையில் கிடந்த அவள் இந்த ஒரே விநாடியில் சுறுசுறுப் படைந்தாள். அவசரமாகத் தன் கைக் கடிகாரத்தில் மணி பார்த்தாள். ஐந்துதான் ஆகியிருந்தது. கச்சேரி தொடங்க இன்னும் ஒரு மணிநேரம் இருக்கிறது. இப்போது என்ன செய்வது? அந்தக் கலியாண வைபவத்துக்குப் போவதா? அரிய வாய்ப்பாகக் கிடைத்திருக்கும் இந்தக் கச்சேரிக்குப் போவதா? கேள்விக்கே இடமில்லை. மோகனசுந்தரத்தின் புல்லாங்குழல் கச்சேரிக்குத்தான் போக வேண்டும். ஆனால்....ஆனால்...? அங்கே பரங்கிமலைக் கல்யாண வீட்டில் சிவப் பிரகாசம் தம் மகளை எதிர் பார்த்துக் கொண்டிருப்பாரே! வீட்டிலும் அங்கு செல்வதாகச் சொல்லி விட்டு வந்திருக்கிறாளே! போகாமற்போனால் தந்தை கோபிப்பாரே. போனால் இந்தக் கந்தர்வ கான இசை விருந்தை இழக்க வேண்டுமே. இதற்கு என்ன செய்வது? ஆமாம்; அதுதான் சரியான யோசனை; கச்சேரிக்கு ஒரு டிக்கெட் வாங்கிக் கொண்டு நேரே கலியாண வீட்டுக்குப் போய் அங்கு கொஞ்ச நேரம் தலையைக் காட்டி விட்டு, உடனே இந்தச் சபாமண்டபத்துக்கு வந்து சேர்ந்துவிட வேண்டியது!

பின்னால் ஊர்ந்து கொண்டிருந்த ஒரு காரின் ஹாரன் ஒலி உரக்கக் கேட்கவே சிந்தனையிலிருந்து விடுபட்ட தேவகி, சாலையின் ஓரமாகத் தன் காரை வளைத்துத் திருப்பினாள். அச்சமயம் காரின் வலது பக்கம் பொருத்தப்பெற்றிருந்த 'ரியர்-மிரரில்' பின்னால் வந்த சிறிய காரின் பிம்பம் பிரதிபலிப்பதைப் பார்த்துத் திடுக்கிட்டாள் அந்தக் காரின் முகப்பில், 'விவேகானந்தனுக்கு வோட்டுப் போடுங்கள்' என்ற போஸ்டர் ஒட்டப் பெற்ற மூங்கில் தட்டி ஒன்று கட்டித் தொங்கிக் கொண்டிருந்தது. 'ஸ்டியரிங்'கை உறுதியாகப் பற்றிய வண்ணம் பின்னால் திரும்பிப் பார்த்தாள். அந்தக் காரின் உள்ளே இரண்டு ஆடவர்கள் உட்கார்ந்திருந்தனர். ஆனால் அவர்கள் யாரென்று அறிய முடியவில்லை. அடையாளத்தை நிதானிப்பதற்குள் அந்தக் கார் முன்னால் நகர்ந்து விரைந்து விட்டது.

(தொடரும்)

அபூர்வமாக வந்திருந்த அந்தக் கடிதத்தை எவ்விதமான பரபரப்பும் இல்லாமல் நிதானமாகப் பிரித்தார் ஜகதீசன்.

''...உத்தியோகத்தின் காரணமாக அந்தப் பக்கம் நாளைக்கு வரவேண்டியிருக்கிறது. நான்கு நாட்கள் அங்கே தங்க முடியும் என்று நினைக்கிறேன். அத்தையிடம் சொல்லவும்.''

கே. வாசுதேவன், ஐ.ஏ.எஸ்.

நான்கே வரிகள்தான். அதுவே ஜகதீசனுக்கு மிகுந்த பரபரப்பைத் தூண்டுவதற்குப் போதுமானதாக இருந்தது. அவர் கொஞ்சம் கூட எதிர்பார்க்கவில்லை வாசுதேவன் இந்தப் பக்கம் வரக் கூடும், அதுவும்




தம் இல்லத்துக்கு வருவான் என்று. என்னதான் கூடப் பிறந்த அண்ணன்-தம்பி என்றாலும் இருவருக்கும் படிப்பும் பதவியும் வெவ்வேறுதானே? கேவலம் ஓய்வு பெற்றுவிட்ட ஆரம்பப் பள்ளிக்கூடத்தின் ஆசிரியரான ஜகதீசன் எங்கே? கலெக்டர் வாசுதேவன் எங்கே? மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் அல்லவா அவர்களிடையே இருந்தது. வாசுதேவன் எப்படி எண்ணுவானோ? ஜகதீசன் அப்படித்தான் எண்ணினார்.

தெளிவான பார்வை இல்லாததாலும், வயோதிகத்தால் ஏற்பட்ட தள்ளாமையினாலும் தட்டுத் தடுமாறிக் கொண்டே உள்ளேயிருந்து வந்த அவருடைய அத்தை இன்னும் இரண்டு வாசற்படிகளைத் தாண்ட இயலாமல் ரேழித் திண்ணையின் மீதே உட்கார்ந்து கொண்டு குரல் கொடுத்தாள்.

''ஏண்டாப்பா, ஜகதீசா! தபால்காரன் போய்விட்டானென்னிலே! நீ சாப்பிட வரக் கூடாதோ?''

கடிதத்தை மடித்துக் கவருக்குள் போட்டு எடுத்துக்கொண்டு உள்ளே வந்தார் ஜகதீசன்.

''போய் இலையை எடுத்துப் போட்டுக்கோ. இதோ வந்துவிட்டேன்...'' என்றாள் அத்தை.

ஜகதீசன் மௌனமாக அடுப்பங்கரைக்குள் நுழைந்தார். பலகையை எடுத்துப் போட்டுவிட்டு இலையைப் போட்டு அதன்மேல் தண்ணீரையும் தெளித்தார். பிறகு குடிக்கத் தண்ணீர், மோர், ஊறுகாய் முதல் சமையல் வகையறாக்களையும் எடுத்து வந்து தம் எதிரில் வைத்துக் கொண்டார். அடுப்பின் மேல் சிறிய வெண்கலப் பானை ஒன்று இருந்தது. அதன் மூடியை எடுத்துப் பார்த்தார். அரிசி உப்புமா! மாலைச் சிற்றுண்டிக்கு என்று அநேகமாக மாதத்தில் இருபத்தைந்து தினங்கள் செய்யப்படும் அது. இரண்டு வேளைகளும் அடுப்புப் பற்ற வைக்க முடியாத அத்தையின் முன்னேற்பாடுங்கூட. அத்தைக்கும் தம் எதிரில் ஓர் இலையை எடுத்துப் போட்டுவிட்டு உட்கார்ந்து கொண்டார். அவர் பாதி சாப்பிடுகையில் அத்தை முக்கி முனகிக்கொண்டு எழுந்து வந்தாள் உள்ளே.

''என்னடாப்பா வேணும்?'' ஜகதீசனின் எதிரில் வந்து உட்கார்ந்து விட்டாள் அத்தை. அவளுக்கு மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கியது. வயது எண்பதைத் தாண்டிவிட்டவளல்லவா?

" நீ சாப்பிடு. எனக்கு ஒன்றும் வேண்டாம், அத்தை !"

" தபால் ஒன்றும் வரவில்லையா ?"

"ம் ..வந்தது !"

" வாசு போட்டிருக்கானு ?"

" ம்.....நாளைக்கு இங்கே வரு இருனும் !"

" நாளைக்கா ? நிஜமாகவா ? சொல்லவே இல்லையே நீ ?"




" ஏன், என்ன செய்யப் போகி ருய் ? எனக்கும் கடிதத்தைப் பார்த்த பிறகுதானே தெரிந்தது!"

" இட்டிலிக்கு ஊறப் போட வேண்டாமா ?"

" இட்டிலியா ?" ஜகதீசனுக்கு ஆச்சரியமாக இருந்தது. தம் வீட்டில் அபூர்வமாகி விட்ட இட்டிலி வாசுதேவனின் வரவால் தமக்கும் கிடைக்கப் போகிறதா ?

" வராதவன் வருகிறுனே, வார்க்க வேண்டாமா, ஜகதீசா?"

"யார் வேண்டாமென்று சொன்னது ? உன்னுல் அரைக்க முடியாதே !"

" முடியுமோ, முடியாதோ ! அரைக்கத்தானே வேண்டும் ?" என்றுள் அத்தை, சோற்றுப் பானை வைத் தன் இலைக்கு அருகில் இழுத்துக் கொண்டே.

இதற்குள் ஜகதீசன் சாப்பாட்டை முடித்துக் கொண்டு, " அத்தை ! உனக்கு என்ன வேண்டும் ?" என்று விசாரித்தார். பிறகு காவிப் பாத்திரங்களை எடுத்து முற்றத்தில் போட்டு விட்டுக் கூடத்துக்கு வந்தார். சாய்வு நாற்காலி 'வா, வா' என்று அழைத்தது. உண்ட சிரமம். சற்று உடலைச் சாய்த்தார் நாற்காலியில். தூக்கம் அவர் இமைகளை அழுத்தியது.

ஜகதீசனுக்கும் வாசுதேவனுக்கும் பதினெட்டு வயதுக்கு மேல் வித்தியாசம். வெகு நாட்களுக்குப் பிறகு வாசுதேவனைப் பிரசவிக்க நேர்ந்ததால்தான் அவர்கள் அன்னை பிரசவ அறையிலேயே இறைவனடி சேர்ந்தாள். ஜகதீசனும் அவருடைய அப்பாவுமாகத்தான் வாசுதேவனை வளர்த்தார்கள். அவனுடைய இரண்டாவது வயதில் அவரும் கண்ணை மூடிவிடவே, ஜகதீசன்தான் தம் தம்பியைப் பாதுகாக்க வேண்டி வந்தது. கல்லூரிப் படிப்பு படிக்க வேண்டுமென்கிற தம் ஆசையை இதயத்தின் அடித்தளத்தில் போட்டு ஆழப் புதைத்துவிட்டு, ஆசிரியருக்கான பயிற்சியை முடித்துக் கொண்டு வேலையில் அமர்ந்தார். பெண் துணைக்கு அநுகூலமான நிலையில் இருந்த தம் அத்தையை அழைத்து வைத்துக் கொண்டார். வாசுதேவன் வசதியாக வளர்ந்தான். அத்தை நல்ல பெண்ணாகப் பார்த்து ஜகதீசனுக்கு மணம் செய்து வைத்தாள். அந்தப் புண்ணியவதி நான்கு வருஷங்கள் அவருடன் வாழ்ந்தாள். பிறகு இரண்டே நாளைய விஷஜுரத்தில் பூவும் மஞ்சளுமாகப் போய்ச் சேர்ந்து விட்டாள்.

பிறகு மூன்று வருஷங்கள் வரை மறு மணத்தைப் பற்றியே நினைத்துப் பார்க்கவில்லை ஜகதீசன். அதற்குப் பிறகுதான் அத்தைக்குத் தள்ளாமை வந்துவிட்டதால் வீட்டை நிர்வகிக்கவென்று மறுமணம் செய்து கொண்டார். அந்த மாதரசியும் அவருடன் அதிக நாட்கள் இருந்து வாழக் கொடுத்து வைக்கவில்லை. மணம் முடிந்த மூன்றும் ஆண்டிலேயே போய்விட்டாள். ஜகதீசன் அதற்குப் பிறகு ரொம்பவும் மனமுடைந்து போனுர். தமக்கும் தாம்பத்திய வாழ்க்கைக்கும் கொஞ்சம் கூட ராசியில்லை என்றே கருதினுர். அத்தைகூட மூன்றாவதாக ஒரு பெண்ணை மணந்து கொள்ளும்படி வற்புறுத்தினுள். ஆனுல் அவர் அதை விரும்பவில்லை.

இதற்குள் வாசுதேவன் உயர்நிலைப்பள்ளிப் படிப்பை முடித்துக் கொண்டு கல்லூரிப் படிப்புக்காக வெளியூருக்குச் சென்றுன். அவனுக்கும் படிப்பில் நல்ல ஆர்வமிருந்தது. துடிப்பாகப் படித்தான். உபகாரச் சம்பளம் கிடைத்தது. அவனை நன்றாகப் படிக்க வைக்கும் ஆசை ஜகதீசனுக்கும் இருந்தது. நாளடைவில் வாசுதேவன் ஐ. ஏ. எஸ். ஆனுன். பட்டம் வந்தவுடனே அடுத்துப் பதவியும் வந்தது. தனக்கு விருப்பமான பெண்ணாகப் பார்த்துத் தானே மணமும் செய்து கொண்டான். உத்தியோகத்தின் காரணமாக அண்ணனும் தம்பியும் பிரிந்து போனுர்கள். காலம் ஓடிக் கொண்டிருந்தது.

இப்போது ஜகதீசன் ஓய்வு பெற்ற ஆசிரியர். நிழல் கொடுக்க ஓட்டு வீடு ஒன்று இருந்தது. அரை வயிற்றுக் கஞ்சிக்கு ஒரு காணி நிலமும் இருந்தது. நாலைந்து பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்து வந்தார். அத்தையும் மருமானுமாகக் காலத்தைக் காமா சோமா வென்று பிடித்துத் தள்ளிக் கொண்டு வந்தார்கள். வாசுதேவன் தானுக இவர்களுக்கு உதவ முன்வரவில்லை. இவர்களும் வலியப் போய்க் கேட்டுப் பெற்றுக் கொள்ளுகிற மனநிலையில் இல்லை. அத்தைக்கு வயது ஏற ஏற இயலாமை அதிகமாகிக் கொண்டே வந்தது. பெயரளவில் அவளை வைத்துக் கொண்டு ஜகதீசன் தம் காலத்தைப் பலவந்தமாகத் தள்ளிக் கொண்டு போனுர்.

விடியற்காலம் ஐந்து மணிக்கே அன்று பால்காரன் வந்து விட்டான். ஜகதீசனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

"என்னப்பா, இன்றைக்கு இவ்வளவு சீக்கிரமாக வந்துவிட்டாய்? ஆறரை மணிக்குத்தானே வருவாய்?" என்று கேட்டார்.

"கலெக்டர் ஐயா வராங்களாம். அத்தையம்மா நேற்றுச் சொன்னாங்க. அதுதான் சீக்கிரம் கொண்டாந்தேன்..." என்று சொல்லிவிட்டுப் போனான் பால்காரன்.

பாலை வாங்கிக்கொண்டு உள்ளே சென்ற ஜகதீசனுக்கு, 'அத்தையை எழுப்பி விடலாமா? அல்லது நாமே வழக்கம்போல் அடுப்பைப் பற்றவைத்துவிடலாமா?' என்ற கேள்வி எழுந்தது. அவர் சமையலறைக்கருகில் சென்றார். அங்கே அவருக்குப் பெரிய ஆச்சரியம் காத்திருந்தது ஆம், அத்தை டிகாக்ஷனைப் போட்டு வைத்துவிட்டு அடுப்பில் இட்டிலிப் பானையை ஏற்றி யிருந்தாள்.

"இதற்குள்ளாகவா எழுந்து விட்டாய்? காலை வேளையில் என்ன இட்டிலி?" வியப்பை அடக்க முடியாமல் கேட்டார் ஜகதீசன்.

"பெரிய படிப்புப் படிச்சவன் வருகிறானே! எப்படி வெறும் காப்பியைக் கொடுப்பது?" என்றாள் அத்தை.

பற்பொடியுடன் பின்கட்டுப் பக்கம் சென்றார் ஜகதீசன்.

வாசலில் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது.

சுடச்சுடத் தும்பைப் பூவைப்போல் இட்டிலி சட்டினியுடன் மணக்க மணக்க காப்பியையும் எடுத்து வைத்தாள் சின்ன மருமானுக்கு.

"வாடாப்பா! ஊரிலே எல்லாரும் சௌக்கியம்தானே?" என்று கேட்டாள்.

"இட்டிலியா? பேசாமல் நான்கு பூரி பொரித்து விட்டிருக்கலாமே..." என்றபடி இலையில் உட்கார்ந்தான் வாசுதேவன். பிறகு வேண்டா வெறுப்பாக இரண்டு இட்டிலிகளைச் சாப்பிட்டுவிட்டு எழுந்து விட்டான்.

"முன்னெல்லாம் உனக்கு இட்டிலிதானே பிடிக்கும்!" என்றாள் அத்தை.

"இப்போ அரிசியில் செய்தது எதுவும் பிடிப்பதில்லே!"—அந்த வாசு வேறு. இந்த வாசுதேவன் வேறு என்கிற தோரணையில் இருந்தது அவன் பேச்சு.

"நீயும் இரண்டு எடுத்துக்கோயேன், ஜகதீசா? வார்த்தது அப்படியே கிடக்கு..." பெரிய மருமானை உபசரித்தாள்.

"வேண்டாம். வெறும் காப்பி போதும். நான் பெரிய படிப்புப் படிச்சவன் இல்லையே!" ஜகதீசனின் குரலில் ஆத்திரம் கொதித்தது.

வாசுதேவனுக்கென்று வெந்நீர் அடுப்புப் பற்ற வைத்து வெந்நீர் போட்டிருந்தாள் அத்தை. ஆனால் வழக்கம் போல் குளத்துக்குப் புறப்பட்டார் ஜகதீசன். "ஏண்டா, வெந்நீர் பொங்குகிறதே! ஏன் இன்னைக்கும் குளத்துக்குக் கிளம்பி விட்டே?" என்று கேட்டாள் அத்தை.

"இருபத்தைந்து வருஷங்களாக இல்லாமல் திடீரென்று இன்று மட்டும் வெந்நீரில் குளித்தால் எனக்கு உடம்புக்கு ஆகாது. அவன் குளிக்கட்டும்!" என்று சொல்லிப் போய் விட்டார் ஜகதீசன். ஆம், மார்கழி மாதத்தில்கூட அத்தையால் வெந்நீர் போட்டுக் கொடுக்க முடியாது. ஜகதீசன் தாமாகவும் போட்டுக் கொள்வதில்லை. பச்சைத் தண்ணீரில்தான் குளிப்பார். இன்று மட்டும் எதற்கு வெந்நீர்? அவர் எண்ணியதிலும் தவறில்லை தானே?

மருமான் ஆயிரம் சுற்றுக் காரியங்களைச் செய்ய, ஒரு கறியும் குழம்பும் செய்து முடிக்கத் திணறிப் போய்விடுகிற அதே அத்தை இன்று ஐ. ஏ. எஸ். படித்த சின்ன மருமானுக்குப் பாயசம் பச்சடியுடன் தடபுடலாக விருந்து வைத்து விட்டாள். இத்தனைக்கும் ஜகதீசன் அவளுக்கு வழக்கமாகச் செய்யும் உதவியில் ஒன்றைக்கூடச் செய்யவில்லை.

மத்தியானம் வாழைக்காயும் கத்திரிக்காயும் பஜ்ஜி; இரவு வெங்காய சாம்பார், வடாம், ஒரு முக்கல், முனகல் இல்லை. உதவிக்கும் யாருமில்லை. அத்தைதானா இப்படியெல்லாம் செய்கிறாள் என்று ஆச்சரியப்பட்டுப் போனார் ஜகதீசன். வாசுதேவன் இதையெல்லாம் கவனித்ததாகவே தெரியவில்லை. அவனைக் கேட்டால் இன்று என்ன சமையல், என்ன டிபன் என்றுகூட நினைவிருக்காது போயிருந்தது. கலெக்டர் என்றால் என்ன சும்மாவா? வருவோரும் போவோரும் வீடே அமர்க்களப்பட்டது.

சுண்டக் காய்ச்சிய பாலை எடுத்து வந்தாள் அத்தை. இரவில் பால் சாப்பிடாமலிருக்க முடியுமா கலெக்டரால்? வாசுதேவன் பால் சாப்பிட்டான். ஜகதீசனுக்கும், "வேண்டுமா?" என்று கேட்டாள். ஜகதீசன், மறுத்து விட்டார். அவர் மனத்தில் அடித்த புயல் அவளுக்கல்லவா தெரியும்?

ஒரு நிமிஷம் கூட ஓய்வு ஒழிவின்றி உட்காராமல் அத்தை வாசுதேவன் தங்கிய அத்தனை நாட்களும் விதம் விதமாகச் சமைத்துப் போட்டாள். பல விதமாய்ப் பட்சணங்கள் செய்தாள். எல்லாம் யாருக்காக? வாசுதேவன் ஐ. ஏ. எஸ்.ஸுக்காக.

போட்டு வைத்த டிகாக்ஷனையும், காய்ச்சி வைத்த பாலையும் காப்பியாகக் கலந்து தருவதற்குள் ஆயிரம் 'உம்' கூட்டி முனகி விடும் அத்தை இப்படிப் பம்பரமாய்ச் சுழல்வது ஜகதீசனுக்குத் தாங்க முடியாத வியப்பைத் தந்தது. 'அப்படியானால் இவ்வளவு நாட்களாக அவள் நடந்து கொண்டதெல்லாம் வெறும் பாசாங்குதானா? சும்மா சாப்பிட்டு விட்டு உட்கார்ந்து கிடக்கும் வறட்டு மருமான்தானே, கூடமாட எல்லாம் செய்யட்டுமே என்கிற அலட்சியமா? இவன் படித்த படிப்புகளும், வாரிக்கொட்டின உத்தியோகத்துக்கும் இவ்வளவு போதும் என்கிற எண்ணமா? மாதத்தில் ஒரே ஒரு நாள் வருகிற அமாவாசையன்றைக்கு மட்டும்தானே இட்டிலி வார்ப்பாள்? நான்கு நாட்களாக அம்மியிலும் க்ரைண்டரிலும் மாற்றி மாற்றி அரைத்துக் கொண்டே யிருக்கிறாளே! அம்மியில் அரைக்க முடியவில்லை என்று தினமும் ஒரே மாதிரியில் குழம்பையும் கறியையும் செய்து வைப்பது நான் கலெக்டர் உத்தியோகம் பார்க்காததனாலா? ஊரும், உலகமும் வாசுதேவனிடம் பிரமாதமா எது, எதையோ எதிர்பார்த்து உபசரணைகள் செய்கின்றன. அதிலாவது ஒரு பொருள் இருக்கிறது. ஆனால் இந்த அத்தைக்கு அவனிடம் எதிர்பார்க்க என்ன இருக்கிறது?

'கிட்டத்தட்ட முப்பது வருடங்களாக அவனை விட்டுப் பிரியாமல் கூடவே இருக்கிறேனே! எவ்வளவு நாட்கள் அவனுக்குப் புடவைகூடத் தோய்த்து உலர்த்தியிருக்கிறேன். உட்கார வைத்து அவனுக்கு எவ்வளவு நாட்கள் பணிவிடைசெய்திருக்கிறேன்! ஒரு நாளைக்காவது எனக்கு டிபனுக்கு பஜ்ஜி செய்து கொடுத்திருப்பாளா? தினம் அந்தக் காந்தலும் கருகலுமான அரிசி உப்புமாத் தானே? அதைக்கூடச் சூடாகச் செய்து போடமாட்டாள். காலையில் சமையல் முடிந்ததுமே செய்து வைத்து விடுவாள். எந்தக் குளிர் காலமாக இருந்தாலும் சரி, இரவில் மோருஞ் சாதம்தான்!'

இதற்காகவெல்லாம் ஜகதீசன் அத்தையிடத்தில் வருத்தப்பட்டுக் கொண்டதில்லை. 'பாவம், தள்ளாத கிழவி. ஏதோ இந்த மட்டுமாவது அரிசியை வேக வைத்து, புளியைக் கொதிக்க வைத்துப் போடுகிறாளே' என்று அனுதாபமே காட்டி வந்தார். இப்போதல்லவா தெரிகிறது, அத்தை கூடப் பதவிக்குத்தான் மதிப்புக் கொடுக்கிறாள் என்று! சேச்சே! என்ன கீழ்த்தரமான குணம்!

முன் காலத்தில் நான்கு நாட்கள் நடத்தும் கலியாணங்கள் என்ன பாடுபடுமோ அந்தப் பாடு பட்டது வீடு வாசுதேவன் வருகையினால். ஆனால் ஜகதீசன் எதிலுமே பட்டுக் கொள்ளவில்லை. அண்ணனும் தம்பியும் இரண்டு வார்த்தைகள் பேசிக் கொள்ளக்கூட நேரமில்லையே! நேரம் இருந்தாலும் பேசத்தான் என்ன இருக்கிறது? இருவரும் ஒரு கூட்டையில் தோன்றியவர்கள் என்பதைவிட இப்போதைக்கு அவர்களிடம் என்ன சமத்துவம் இருக்கிறது? ஜகதீசன் தம் தம்பி வந்ததற்காக மகிழவும் இல்லை. ஊருக்குப் போகிறானே என்று வருத்தப்படவுமில்லை. பட்டத்துக்கும் பதவிக்கும் மரியாதை கொடுக்க வேண்டியவனாகி விட்டபின் பாசத்துக்கு ஏதுஇடம்?

வாசுதேவனை ரயில்வே ஸ்டேஷன் வரையில் அனுப்பி விட்டு வந்தார் ஜகதீசன். ஊருக்காகத்தான்.

"ரயிலேறி விட்டானு?" என்று கேட்டாள் அத்தை.

"ம்..." அசட்டையாகக் கூறினார்.

"சரி, போய்ச் சாப்பிடு!" என்று சொல்லி விட்டுத் திரும்பிப் படுத்துக் கொண்டாள் அத்தை பெஞ்சியில்.

பேசாமல் உள்ளே சென்றார் ஜகதீசன். மத்தியானம் வடித்த சாதம் தண்ணீர் விட்டு வைத்திருந்தது. தாமே எல்லாவற்றையும் எடுத்துப் போட்டுக் கொண்டு சாப்பிட்டார். இதுதானே அவருக்கு நிரந்தரமானது? என்னமோ சில நாட்கள் நடுவில் கலெக்டரோடு உட்கார்ந்து சாப்பிட முடிந்தது. சூடான சமையலும் கிடைத்தது. ஒருகால் இவரும் கலெக்டருக்குப் படித்திருந்தால்?

சிந்தனை மட்டும் அறுந்துவிடவில்லை. அவர் வெற்றிலைப் பெட்டியை எடுத்த சத்தம் அத்தைக்குக் கேட்டிருக்க வேண்டும். "சற்று என் பாயையும் தலையணையையும் கொண்டு வாயேன் ஜகதீசா!" என்றாள் முழுக் கிழவியாகிவிட்ட அத்தை. முக்கால் கிழவனை தன் மருமானிடம்.

என்றும் வழக்கமாகச் செய்கிற பணிதான் இது. இன்று என்னவோ ஜகதீசனுக்கு அளவற்ற வெறுப்பைத் தந்தது. 'பதவிக்கு மதிப்புக் கொடுப்பவளுக்குப் பணிவிடையா? ஏன் அவனிடமே போய் இருந்து பார்ப்பது தானே?' உள்ளம்தான் இப்படி எண்ணியதே தவிரக் கைகள் பழக்கத்தை யொட்டி அத்தையின் தேவையைப் பூர்த்தி செய்யாமலில்லை.

"உனக்கும்தான் ரொம்பத் தள்ளாமையாக இருக்கிறது. இங்கே எல்லாம் கஷ்டம்தான். அங்கே ஆள், படை வசதியாக இருக்கும். உன்னை அவன் கூப்பிடவில்லையா?" வேண்டுமென்றே கேட்டார் ஜகதீசன். அவன் கூப்பிடவில்லையென்பது அவருக்குத் தெரியாதா என்ன?

"அவன் கூப்பிடவில்லை. அதற்காக நான் வருத்தப்படவுமில்லை" என்றாள் அத்தை வெகு சகஜமாக.

"ஏன்?" உதட்டைக் கடித்துக் கொண்டார் ஜகதீசன்.

"அவன் கூப்பிட்டால்தான் என்ன? நான் போய் விடுவேனு?"

"ஏன், கசக்குமோ?"

"கட்டாயம் கசக்கத்தான் கசக்கும்!"

"ஏனு?"

"அவன் பெரியவனுகிவிட்டான். பெரிய படிப்பு படிச்சிருக்கான். பெரிய பதவியிலும் இருக்கான். ஆனால் அவன்கிட்டே நம்ப வாசன்னு ஒரு சுவாதீனம் இல்லையே இப்போ! வாசன்னு கூப்பிடக் கூடப் பயமான்னு இருக்கு! நம்ப குழந்தை வந்திருக்கான் என்று சகஜமாக அவனிடம் இருக்க முடிகிறதா? யாரோ ஒரு பெரிய உத்தியோகஸ்தன், சம்பந்தி வந்திருக்கிற மாதிரின்னு இருந்தது! எப்படியோ இந்த நாலு நாளையும் பல்லைக் கடித்துக் கொண்டு செய்துட்டேன். இனிமேல் அவன் இங்கே வருவது எப்பவோ! ஊரெல்லாம் அவனைக் கொண்டாடறபோது நாமும் கொண்டாடாமல் இருக்க முடியுமா? அவன் கிட்டேயாவது நாலுவது போய் இருக்கிறதாவது? சொப்பனத்திலேகூட சாத்யமில்லே."

ஜகதீசனுக்கு அத்தையின் பேச்சில் ஏதோ ஓர் அரிய பெரிய உண்மை வெளிப்பட்டது போல் இருந்தது. தாம் எண்ணியது அவ்வளவும் தவறு? அத்தை மேலும் சொன்னாள்:

"உன்னிடம் இருக்கிற சுவாதீனம் இப்போ அவன் கிட்டே ஏது? அவன்கிட்டே இருக்கிறதெல்லாம் வெறும் மரியாதைதான். உன்னைச் சொல்லுகிறமாதிரி அவனை 'ஒரு வாய்த் தண்ணீர் கொண்டு வா' என்று சொல்ல முடியுமா? சொல்லத்தான் சொல்வேனு? நீயாக முடியுமா அவன்? என்னமோ உனக்கும் வயசாகிவிட்டது. சீக்கிரம் போக வேண்டும் நான். அந்த ஓர் ஆசைதான் எனக்கு...." என்று கூறிப் பெருமூச்சு விட்டாள் அத்தை.

ஜகதீசனு'க்கு யாரோ தம்மைத் தேனில் குளிப்பாட்டியது போலிருந்தது. எங்கே எப்படி யிருந்தாலும், இங்கே அத்தையின் இதயத்தில் அவர்மீதுள்ள பாசம் வற்றிவிடவில்லை. இது போதுமே அவருக்கு.

"கால் பக்கம் எல்லாம் சரியாகப் போர்த்திக் கொள்ளவில்லையே, அத்தை! நான் போர்த்தி விடட்டுமா?" என்று கேட்டார் ஜகதீசன் அன்பு ததும்ப.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press. Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon




# லைப்பாய் இருக்குமிடம்
# அதுவே ஆரோக்கியம் இருக்குமிடம்!

**ஆஹாஹா!** லைப்பாய் ஸ்நானத்தின் இன்பமே இன்பம்! உங்களைக் கிளுகிளுக்க வைக்கும் ஆரோக்கியப் புதுமலர்ச்சி...'எல்லாம் இன்ப மயம்'! செழிப்பு மிக்க லைப்பாய் நுரை, அழுக்குடன் கிருமிகளைக் கழுவிக் களைந்து உங்கள் உடல் நலனைப் பாதுகாக்கிறது; வேலை செய்யும்போதும் சரி, விளையாடும்போதும் சரி. அழுக்கிலிருந்து தப்பி வாழ யாரால் முடியும். ஆகவே, இன்றுமுதல் லைப்பாய் உபயோகிக்கத் தொடங்குங்கள்; ஆம், குடும்பத்திலுள்ள ஒவ்வொருவருமே!

16-X52 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு